உ

ஸ்ரீ காமாக்ஷ்யை நம:

# மூகபஞ்சசதீ

## பாதாரவிந்த சதகம்

(மூலம் நாகரத்திலும், தமிழிலும், பதவுரை, பொழிப்புரை, விசேஷக் குறிப்புகளுடனும்)

கும்பகோணம்
ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளான
**ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளவர்களுடைய**
**ஸ்ரீமுகத்துடன் கூடியது.**

ஸ்ரீ ராம ஜயம்
வைகாசி [illegible]
[illegible]

கும்பகோணம்
ஸ்ரீ ஜனார்தந அச்சுக்கூடம் லிமிடெட், மானேஜர்
**S. கல்யாணசுந்திரம் அவர்களால்**
அச்சிட்டு பிரசுரிக்கப்பட்டது.



**1961**

விலை 1-25 ந.பை.

உ

# மூகபஞ்சசதீ பாதாரவிந்த சதகம்.



## ஜகத்குரு ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள் அவர்களின்
## அனுக்ரஹ ஸ்ரீமுகம்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய, ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசார்யாளால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்தில் அதிபதிகளான ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமத் சந்திர சேகரேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ பாதாளால், நமது அத்யந்த பிரிய சிஷ்யரான கல்யாணஸுந்தரமய்யர் விஷயத்தில் ஸர்வாபீஷ்ட ஸித்தியின் பொருட்டு நாராயண ஸ்மிருதி செய்யப்படுகிறது.

ஸ்ரீ ஜகதம்பிகையின் மஹிமா விசேஷத்தையுணர்த்தும், "மூகபஞ்சசதீ" என்னும் உத்தம ஸ்தோத்திரக் கிரந்தத்திற்கு கணேசய்யரால் ஸகல பக்தஜன ஸௌகர்யத்தை யுத்தேசித்து தேசபாஷா வ்யாக்யானத்துடன் பிரசுரிக்கப்பட்ட இரண்டுசதகங்கள் தவிற மேற்படி கிரந்தத்தில் பாக்கியிருக்கும் சதகங்களையும் அதே சைலியை அனுஸரித்து தேசபாஷா வ்யாக்யானத்துடன் பிரசுரிக்க விரும்பி பாதாரவிந்த சதகத்தைத் தாங்கள் அச்சிட்டு ஸமர்ப்பித்ததை கடாக்ஷிக்கப்பட்டது.

இந்த நன்முயற்சியில் தாங்கள் ஈடுபட்டு இவ்விதம் பிரசாரத்தால் உலகத்திற்கு உபகரிப்பதைப்பற்றி மிகவும் ஸந்தோஷிக்கிறோம்.

பக்த ஜனங்கள் ஸ்ரீ பராசக்தியின் பூர்ண கிருபையைப்பெற இவ்வுபாயத்தைத் தேடிய தாங்களும் இந்த கைங்கர்யத்திற்கு உதவிபுரிந்தவர்களும் ஸ்ரீ பரமேச்வரியின் கிருபையால் ஐஹிகாமுஷ்மிக சிரேயஸ்களை அடையவேண்டியது.

முகாம்—ஓரவந்தூர்,
சித்ரபானு-ௗ
ஐப்பசி-மீ

இப்படிக்கு,
நாராயணஸ்ம்ருதி:

# மூகபஞ்சசதீ பாதாரவிந்த சதகம்.

## பதிப்பாசிரியர் முகவுரை.

(முதல் பதிப்பு)

ஸ்ரீ அம்பிகையை ஸ்துதிசெய்ய அமைந்துள்ள ஸ்தோத்ரக் கிரந்தங்கள் பலவற்றுள் "மூகபஞ்சசதீ"யானது மிக உத்தமமான தென்பது ரஸிகர்களும், பக்தர்களும் ஒப்பமுடிந்த விஷயமாகும். இந்த ஸ்தோத்திரமானது, மிக்க லலிதமாயும் காதுக்கு இனிமை யாகவும் அமைந்திருப்பதுடன், இந்த ஸ்துதியின் பத, பதார்த் தங்களும், தாத்பர்யங்களும், அபரிமிதமாக பக்தியைப் பெருகச் செய்து, அம்பிகையின் கருணையை பக்தர்மீது பொழியச் செய் வதாயுமிருக்கிறது. ஸாம்ஸாரிகதாபத்ரயத்தினால் ஆக்ரமிக்கப் பட்டு சிரமப்படுகிற பலர் இந்த மூகபஞ்சசதியை முழுவதுமோ அல்லது ஏகதேசமோ தினமும் விடாமல் பாராயணம் செய்து வந்தால் ஸகல சிரமங்களும் நீங்கி மிகுந்த ஸௌக்யத்தையடைய லாமென்பதில் ஐயமில்லை.

இத்தகைய உயர்ந்த ஸ்தோத்திரத்தைச் செய்து உலகத் தினரை உஜ்ஜீவிக்கச் செய்த மஹாபுருஷரான ஸ்ரீ மூககவி என்ற மூகாசார்யாளுடைய மஹிமையும், சரித்திர விவரங்களும் அங் காங்கு விவரிக்கப்பட்டிருக்கிறதைக் காணலாம்.

இந்த உத்தம ஸ்துதியை பண்டிதர், பாமரர், ஸ்திரீகள் உள்பட எல்லா மனிதர்களும் படித்து, அதனுடைய ரஸங்களை அனுபவிப்பதுடன், அம்பிகையின் அளவற்ற குணகணங்களையும் யதாவத்தாக நேரில் காணும்போல் அனுபவித்து அவளுடைய கிருபைக்குப் பாத்திரமாகும்படி செய்யவேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்துடன்; காலஞ்சென்ற ஸ்ரீமான் ஜி. வி. கணேசய்யர் பி. ஏ., பி. எல்., அவர்கள் இந்த ஸ்தோத்திரத்திற்குச் சிறந்த முறையில் ஓர் தமிழ் மொழிபெயர்ப்புச் செய்து "ஆர்யதர்மம்" பத்திரிகை மூலம் சிறிது சிறிதாக வெளியிட்டு வந்தது யாவரும் அறிந்ததே. ஸ்ரீ அம்பாளிடம் அந்தரங்க பக்தியுள்ளவரும் சிறந்த

படிப்பாளியும், ரஸிகரும், மேதாவியுமான ஸ்ரீமான் கணேசய்யரவர்கள் லலிதாஸஹஸ்ரநாமம், ஸௌந்தர்யலஹரீ போன்ற உயர்ந்தக் கிரந்தங்களுக்கு யாவரும் மெச்சக்கூடிய வகையில் தமிழ் மொழி பெயர்ப்புக் கைங்கர்யம் செய்ததுபோல் இந்த ஸ்துதிக்கும் பண்டிதர்கள் அதிசயப்படும் வழியில் ஸகலவிமர்சங்களும் பொருந்திய மொழிபெயர்ப்பு வியாக்யானம் செய்ய முற்பட்டாராயினும், நமது தௌர்பாக்யவசத்தால் அக்கைங்கர்யம் பூர்த்தியடையாமல் ஆர்யாசதகம், கடாக்ஷசதகம் ஆகிய இரண்டுடன் நின்று அவர் ஈசனடி போக நேரிட்டுவிட்டது.

ஆயினும் அவர் எழுத விட்டுப்போன பாக்கிசதகங்களுக்கும் அவருடைய போக்கை அனுஸரித்தே மொழிபெயர்ப்புச்செய்து பாக்கி சதகங்களையும் வெளியிடும்படி, நம்மைப் பல பக்தர்கள் உத்ஸாஹப்படுத்தியதற்கிணங்கி, புதுக்கோட்டை, மஹாராஜா கல்லூரி ஸம்ஸ்கிருத பண்டிதர் ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸராகவன் எம். ஏ. அவர்களுடையவும், திருப்பனந்தாள் ஸ்ரீமான் ரெத்தினம் பிள்ளை ரிட்டயர்டு சப்ரிஜிஸ்டார் அவர்களுடையவும் உதவியைக் கொண்டு இந்த பாதாரவிந்த சதகம் என்ற பாகமானது நம்மால் அச்சியிற்றி வெளியிடப்பட்டிருக்கிறது. மந்தஸ்மித சதகமும் சீக்கிரம் வெளிவரும். ஆர்யதர்மம் பத்திரிகையில் வெளியிட்டு புஸ்தக ரூபமாக ஆக்குவதில் காலதாமதம் ஏற்படுவதாலும், அப் பத்திரிகையில் இப்போது அதற்கு அவகாசமளிக்கப்படாததாலும் தனியாகவே அச்சிட்டு வெளியிட முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆர்யா சதகத்தில் அநுஸரிக்கப்பட்டுள்ள வழியிலேயே இதிலும் பதவுரை, பொழிப்புரை, விசேஷக் குறிப்புகள் போன்ற அம்சங்கள் யாவும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பதவுரையானது யாவரும் எளிதில் அறிந்துகொள்ளுமாறு இதில் அச்சிடப்பட்டிருப்பது புதிய விசேஷமாகும். மூலம் நாகரலிபியிலும், தமிழிலும் முன்போலவே அச்சிடப்பட்டிருக்கிறது.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் அவர்கள் இக்கிரந்தம் முழுவதையும் கிருபையுடன் கடாக்ஷித்து, சில பரிஷ்காரங்களை நியமித்ததுடன் ஒரு ஸ்ரீமுகமும் அநுக்ரஹித்திருக்கிறார்கள். இதற்காக அடியேனுடைய அனந்த பிரணாமங்களை ஸ்ரீ ஸ்வாமிகளின் பாதாரவிந்தங்களில் ஸமர்ப்பித்துக் கொள்ளுகிறேன்.

பேப்பர், மசி முதலியவைகளின் அபாரமான விலையேற்றம் காரணமாக தற்போது இத்தகைய அச்சு வேலைகளை நினைக்கவே அவகாசமில்லாத ஸந்தர்ப்பமாயிருந்தபோதிலும் உத்தம கிரந்த மானது பூர்த்தியடையாமல் அரைகுறையாக நின்றுவிடுவதில் ஆஸ்திகர்களுக்கு இருந்த மனக்குறையை நீக்க வேணுமென்ற ஒரே ஒரு உத்ஸாஹத்தினால் மட்டுமே நாம் இக்கைங்கர்யத்தைப் பூர்த்தி செய்ய முன் வரவேண்டியதாயிற்று. எல்லா ஆஸ்திகர்களும் இந்த ஸ்தோத்திரத்தை வாங்கிப் படித்து அம்பாளின் கிருபைக்கு பாத்திரமாவதுடன் எமது சிறிய முயற்சியையும் ஆதரிப்பார்களென்றும் எதிர்பார்க்கிறேன்.

இப்புஸ்தகத்தில் அச்சுப்பிழையின்றி பரிசோதித்துக்கொடுத்தும், வேறுவழியிலும் நமக்கு உதவி புரிந்த நண்பர்கள் எல்லாருக்கும் நமது மனப்பூர்வமான நன்றியைச் செலுத்துகிறோம்.

குடம்பகோணம்,
22—2—'43.

S. கல்யாணஸுந்தரம்,
(பிரசுரகர்த்தா)
மானேஜர். ஸ்ரீ ஜனார்தந பிரிண்டிங் ஒர்க்ஸ், லிமிடெட்.



ஸ்ரீ காமாக்ஷ்யை நம:

# பாதாரவிந்த சதகம்

## (மூகபஞ்ச சதீ)

—※—

महिम्नः पन्थानं मदनपरिपन्थिप्रणयिनि
प्रभुर्निर्णेतुं ते भवति यतमानोऽपि कतमः।
तथापि श्रीकाञ्चीविहृतिरसिके कोऽपि मनसो
विपाकस्त्वत्पादस्तुतिविधिषु जल्पाकयति माम् ॥ १ ॥

**மஹிம்ந: பந்தாநம் மதன பரிபந்தி ப்ரணயிநி**
**ப்ரபு: நிர்ணேதும் தே பவதி யதமாநோ²பி கதம: ।**
**ததா²பி ஸ்ரீ காஞ்சீ-விஹ்ருதி-ரஸிகே! கோ²பி மநஸோ**
**விபாக: த்வத்-பாத-ஸ்துதி-விதிஷு ஜல்பாகயதிமாம் ॥**

மதந பரிபந்தி ப்ரணயினி—மன்மதனுடைய சத்ருவான பரம சிவனுடைய பத்னியானவளே !, ஸ்ரீ காஞ்சீ விஹ்ருதி ரஸிகே—ஸ்ரீ காஞ்சியில் விளையாடுவதில் ஆசையுள்ளவளே!, தே—உன்னுடைய, மஹிம்ந:—பெருமையின், பந்தாநம்—வழியை, நிர்ணேதும் — நிச்சயிப்பதற்கு, யதமாந: அபி — முயலுபவன் ஆனாலும், கதம:—எவன் தான், ப்ரபு:—ஸாமர்த்யமுள்ளவனாக, பவதி — ஆகிறான், ததாபி — அப்படி இருந்தபோதிலும், மநஸ:—(என்) மனதினுடைய, கோபி—(குறிப்பிடமுடியாத) ஒரு, விபாக:—பரிபாகமானது, த்வத்பாத-ஸ்துதி-விதிஷு—உன் பாதங்களை துதிக்கும் முறைகளில், மாம்—என்னை, ஜல்பாகயதி — பேசும்படி செய்கிறது.

மன்மதனின் சத்ருவான பரமசிவன்மீது காதல்கொண்டு ஸ்ரீ காஞ்சீ நகரில் விளையாடுவதில் ஆசைகொண்ட ஜகந்மாதாவே! உனது பெருமையின் வழியை நிச்சயிப்பதற்கு முயலுபவனானாலும் அதில் எவன்தான் ஸாமர்த்தியமுள்ளவனாக ஆகிறான்? அப்படியாயினும் எனது மனதில் குறிப்பிடமுடியாத ஒரு பரிபாகமானது உனது பாதங்களை துதிக்கும் முறையில் என்னை பேசும்படி செய்கிறது.

இதில் விசேஷித்து அம்பிகையினுடைய பாதகமலங்களைப் பற்றிப்பேசுகிறார். முதல் சுலோகத்தில் அம்பிகையின் பெருமை அளவற்றதாகையால் அதை மனதால் நினைப்பதும், வாக்கினால் துதிப்பதும், செய்யமுடியாதது என்று கூறி, அப்படியிருந்தபோதிலும் தானறியாத ஒரு ஸுக்ருதத்தினால் மனது சொல்லமுடியாத ஒரு பக்குவத்தையடைந்து இப்போது அம்பிகையின் பாதகமலங்களைப் போற்றத் தன்னைத் தூண்டுகிறது என்கிறார். (1)

गलग्राही पौरंदरपुरवनीपल्लवरुचां
धृतप्राथम्यानामरुणमहसामादिमगुरुः।
समिन्धे बन्धूकस्तबकसहयुध्वा दिशि दिशि
प्रसर्पन्कामाक्ष्याश्चरणकिरणानामरुणिमा ॥ २ ॥

***கலக்ராஹீ பௌரந்தர-புர-வநீ-பல்லவ-ருசாம்***
***த்ருத-ப்ராதம்யாநாம் அருண-மஹஸாம் ஆதிம-குரு:***
***ஸமிந்தே பந்தூக-ஸ்தபக ஸஹயுத்வா திஶி திஶி***
***ப்ரஸர்ப்பந் காமாக்ஷ்யா: சரண-கிரணாநாம்***
***அருணிமா*** (2)

பௌரந்தர—இந்திரனுடைய, புர—நகரத்திலுள்ள, வநீ—தோட்டங்களின், பல்லவ — துளிர்களினுடைய, ருசாம் — காந்திகளின், கல-க்ராஹீ — மென்னியைப் பிடிப்பதும் (மேற்கொள்ளுவதும்), த்ருத ப்ராதம்யாநாம் — முதன்மையை வஹிக்கும், அருண மஹஸாம் — ஸூர்ய கிரணங்களுக்கு, ஆதிம குரு:—முதல் குருவாயும், பந்தூக ஸ்தபக—செம்பரத்தம் பூங்கொத்தோடு, ஸஹ யுத்வா — ஸமானமாய் சண்டை செய்வதுமான, காமாக்ஷ்யா:—காமாக்ஷியினுடைய, சரண கிரணாநாம் —பாதங்களின் கிரணங்களுடைய, அருணிமா—சிவந்த வர்ணமானது, திஶி திஶி—திக்குக்கள்தோறும், ப்ரஸர்பந்—பரவுகிறதாய்க்கொண்டு, ஸமிந்தே—ஜ்வலிக்கிறது.

தேவேந்திரனின் நகரிலுள்ள புஷ்பத் தோட்டங்களின் துளிர்களின் காந்திகளுக்கு மென்னியைப் பிடிப்பாயும், முதன்மை வஹித்த (காலை வேளையில் புதிதாய் உண்டாகிய) ஸூர்ய கிரணங்களுக்கு முதல் குருவாயும், செம்பரத்தை பூங்கொத்துடன் சண்டை செய்வதுமான ஸ்ரீ காமாக்ஷிதேவியின் பாத கிரணங்களின் சிவந்த நிறமானது திக்குகள்தோறும் பரவிக்கொண்டு ஜ்வலிக்கிறது.

இதில் தேவலோக விருக்ஷங்களின் துளிர்களின் காந்தியும் அம்பிகையின் பாத காந்திக்கு ஒப்பல்ல என்றும், அருணோதய காலத்து சிவப்புக்கும் இதுவே காரணமென்றும், செம்பரத்தப் பூங் கொத்துக்களின் சோபையெல்லாம் இதன் முன் நிற்கமுடியா தென்றும் பாதங்களின் செவ்வியை வர்ணிக்கிருர். (2)

मरालीनां यानाभ्यसनकलनामूलगुरवे
दरिद्राणां त्राणव्यतिकरसुरोद्यानतरवे ।
तमस्काण्डप्रौढिप्रकटनतिरस्कारपटवे
जनोऽयं कामाक्ष्याश्चरणनलिनाय स्पृहयते ॥ ३ ॥

*மராளீநாம் யாநாப்யஸந-கலநா-மூல குரவே*
*தரித்ராணும் த்ராண-வ்யதிகரஸுரோத்யான- தரவே!*
*தமஸ்-காண்ட-ப்ரௌடி-ப்ரகடந-திரஸ்கார படவே*
*ஜநோ[2]யம் காமாக்ஷ்யா: சரண-நளிநாய*
*ஸ்ப்ருஹயதே* " (3)

மராளீநாம் யாநாப்யஸந கலநா மூலகுருவே — ஹம்ஸங் களுக்கு நடையைப் பழக்குவதைச் செய்வதில் முதல் குரு வாயும், தரித்ராணும் — தரித்திரர்களை, த்ராண வ்யதிகர — காப்பாற்றவல்ல, ஸுரோத்யாந தரவே—கல்பக விருக்ஷமாயும், தமஸ்காண்ட — இருட்டின் கூட்டங்களுடைய, ப்ரௌ ப்ர கடந—கம்பீரமான பரவுதலை, திரஸ்காரபடவே—போக்கடிக்க வல்லதாயுமிருக்கிற, காமாக்ஷ்யா:—காமாக்ஷியினுடைய, சரண நளிநாய — தாமரைபோன்ற பாதங்களை, அயம் ஜந: — இந்த மனிதன், ஸ்ப்ருஹயதே — விரும்புகிருன்.

ஹம்ஸங்களுக்கு நடையை பழக்குவதற்கு முதல் குருவாயும், தரித்திரர்களை காத்தருள்வதில் கல்பக விருக்ஷமாயும் அக்ஞான மென்ற இருட்டின் கூட்டங்களுடைய பரவுதலை போக்கடிக்க வல்லமையுடைய ஸ்ரீ காமாக்ஷி தேவியின் தாமரை போன்ற பாதங் களை தரிசிக்க இவன் விரும்புகிருன். (3)

1. அம்பிகையின் நடை அழகைக்கண்டுதான் ஹம்ஸங்களும் நடக்கக் கற்றுக்கொள்கின்றன.

2. தன்னை அடையும் எளியவர்களுக்கு அவர்கள் இஷ்டத்தை நிறைவேற்றுவதில் கல்பக விருக்ஷம் போன்றது அம்பிகையின் பாதங்கள்.

3. பாதகாந்தி உலகிலுள்ள ஸகல இருட்டையும் (அக்ஞானத்தையும்) போக்கவல்லது.

4. இப்படி அழகு, ஔதார்யம், காந்தி மூன்றையும் கொண்ட அம்பிகையின் பாதங்களை எளியேனும் விரும்புகிறேன் என்று சொல்ல வந்து தன் நிலைமையை படர்க்கையில் கூறுகிறார்.

वहन्ती सैन्दूरीं सरणिमवनम्रामरपुरी-
पुरंध्रीसीमन्ते कविकमलबालार्कसुषमा ।
त्रयीसीमन्तिन्याः स्तनतटनिचोलारुणपटी
विभान्ति कामाक्ष्याः पदनलिनकान्तिर्विजयते ॥ ४ ॥

*வஹந்தி ஸைந்தூரீம் ஸரணிம் அவநம்ராமரபுரீ—*
*புரந்த்ரீ ஸீமந்தே கவி கமல பாலார்க்க ஸுஷமா |*
*த்ரயீ ஸீமந்திந்யா: ஸ்தந தட நிசோலாருண படீ*
*விபாந்தி காமாக்ஷ்யா: பதநளின காந்தி: விஜயதே* (4)

அவநம்ர-அமரபுரீ-புரந்த்ரீ-ஸீமந்தே—வணங்குகிற தெய்வ லோகத்து ஸ்திரீகளினுடைய வகுட்டில், ஸைந்தூரீம் — ஸிந்தூரத்தினுடையதான, ஸரணிம்—போக்கை, வஹந்தி—வஹிப்பதாயும், கவி-கமல — கவிகளாகிற தாமரைப் புஷ்பங்களுக்கு, பால-அர்க — இளம் சூர்யனுடைய, ஸுஷமா — பிரகாசம் போன்றதும், த்ரயீஸீமந்திந்யா: — வேதங்களாகிற ஸ்திரீகளினுடைய, ஸ்தநதட-நிசோல — குசபாரத்தை மறைக்கிற, அருண-படீ — சிவப்பு வஸ்திரம் போன்றதும் (ஆய்), விபாந்தி — ப்ரகாசிக்கிற, காமாக்ஷ்யா: — காமாக்ஷியினுடைய, பத-நளிந-காந்தி: — தாமரை போன்ற பாதங்களின் காந்தியானது, விஜயதே — ஜயத்துடன் விளங்குகிறது.

ஸிந்தூரத்தின் போக்கை வஹிப்பதும், கவிகளென்ற கமலங்களை மலரச்செய்கிற சூர்யனின் ஒளியாயும், வேதங்களாகிற ஸ்திரீகளின் குசபாரத்தை மறைக்கிற சிவப்பு வஸ்திரம் போன்றதும் பிரகாசிக்கின்ற ஸ்ரீ காமாக்ஷி தேவியின் தாமரை போன்ற பாதங்களின் காந்தியானது ஜயத்துடன் விளங்குகிறது.

1. எல்லா தேவஸ்திரீகளும் தங்கள் மனோரதம் நிறைவேறும் பொருட்டு தங்கள் தலைகள் அம்பாள் பாதங்களில் படும்படி வந்து வணங்கும்போது பாதங்களின் சிவந்த காந்தியானது அவர்களுடைய வகுடுகளில் எப்போதும் மங்களார்த்தமாகத் தடவப்படும் ஸிந்தூரம் போல் இருக்கிறது.

2. பாலஸூர்யனைக்கண்டு தாமரைகள் மலர்வது போல் அம்பாளின் பாதங்களை நினைத்ததும் கவிகளின் உள்ளமும் ஞானமும் மலர்கின்றன.

3. த்ரயீ—ரிக் என்று பத்ய ரூபமாயும், யஜுஸ் என்று கத்ய ரூபமாயும், ஸாம என்று கீதிரூபமாயுள்ள மூன்று வேதங்களுமே இங்கு த்ரயீ எனப்படுகின்றன. அம்பாளின் பாதங்களை அண்டினால் வேதங்களுடைய பரமபோக்யமான அர்த்தங்களும் தெள்ளெனப் புலப்படும் என்றதாயிற்று.

प्रणम्रीभूतस्य प्रणयकलहत्रस्तमनसः
स्मरारातेश्चूडावियति गृहमेधी हिमकरः ।
ययोः सांध्यां कान्तिं वहति सुषमाभिश्चरणयो-
स्तयोर्मे कामाक्ष्या हृदयमपतन्द्रं विहरताम् ॥ ५ ॥

***ப்ரணம்ரீபூதஸ்ய ப்ரணயகலஹ த்ரஸ்த மனஸ:***
***ஸ்மராராதே: சூடாவியதி க்ருஹமேதீ ஹிமகர:***
***யயோ: ஸாந்த்யாம் காந்திம் வஹதி ஸுஷமா பிச்சரணயோ:***
***தயோர் மே காமாக்ஷ்யா: ஹ்ருதயமபதந்த்ரம் விஹரதாம்*** (5)

ப்ரணயகலஹ — ப்ரணய கலஹத்தால், த்ரஸ்தமநஸ: — பயந்த மனதையுடையவராய், ப்ரணம்ரீபூதஸ்ய — வணங்கினவரான, ஸ்மராராதே: — பரமசிவனுடைய, சூடாவியதி — சிரஸ் என்னும் ஆகாயத்தில், க்ருஹமேதீ — வஸித்துவரும், ஹிமகர: — சந்திரன், யயோ: — எவைகளினுடைய, ஸுஷமாபி: — காந்திகளால், ஸாந்த்யாம் — ஸந்த்யா காலத்தினுடைய, காந்திம் — காந்தியை, வஹதி — அடைகிறதோ, தயோ:—அப்பேர்ப்பட்ட, காமாக்ஷ்யா: — காமாக்ஷியினுடைய, சரணயோ: — பாதங்களில், மே ஹ்ருதயம் — என் மனது, அபதந்த்ரம் — சோம்பலைவிட்டு, விஹரதாம் — ரமிக்கட்டும்.

ப்ரணய கலஹத்தால் பயந்த மனதுடன் நமஸ்காரம் செய்து நின்ற பரமசிவனுடைய சிரஸ் என்னும் ஆகாசத்தில் வஸிக்கிற சந்திரன், எவைகளின் காந்தியால் (எந்த பாதங்களின் காந்திகளாலே) ஸந்தியாகாலத்தின் காந்தியை அடைகின்றனவோ அப்படிப்பட்ட ஸ்ரீ காமாக்ஷியின் பாதங்களில் என் மனது சோம்பலை விட்டு விளையாடிக்கொண்டிருக்கட்டும்.

தலைகவிழ்கின்றன; பாதகாந்தி எங்கும் பரந்து சிவப்பாகச் செய்கின்றன. நகங்களாகிற அர்த்தசந்திரர்கள் இருக்கிறார்கள். மாலையில் மலரும் ஆம்பல்போல, கவிகளின் மனம் இவற்றைக் கண்டு மலர்கின்றன. (7)

विरावैर्माञ्जीरैः किमपि कथयन्तीव मधुरं
पुरस्तादानम्रे पुरविजयिनि स्मेरवदने ।
वयस्येव प्रौढा शिथिलयति या प्रेमकलह-
प्ररोहं कामाक्ष्याश्चरणयुगली सा विजयते ॥ ८ ॥

***விராவை:மாஞ்ஜீரை: கிமபி கதயந்தீவ மதுரம்***
***புரஸ்தாதாநம்ரே புரவிஜயிநி ஸ்மேர-வதநே***
***வயஸ்யேவ ப்ரௌடா சிதிலயதி யா ப்ரேம-கலஹ-***
***ப்ரரோஹம் காமாக்ஷ்யா: சரணயுகளீ ஸா விஜயதே*** (8)

யா—எந்த இணையடிகள், மாஞ்ஜீரை:—பீலிகளுடையதான, விராவை: — சப்தங்களால், கிமபி — ஏதோ ஒரு விஷயத்தை, மதுரம்—இனிமையாக, கதயந்தீவ—சொல்லுகிறவைபோன்றதாய், ஸ்மேரவதநே—புன்சிரிப்புள்ள முகத்தையுடையவராய், புரஸ்தாத் — எதிரில், ஆநம்ரே — வணங்கிக்கொண்டிருக்கும், புரவிஜயினி — சிவனிடத்தில், ப்ரௌடா — ஸமர்த்தையான, வயஸ்யா இவ—தோழிபோல, ப்ரேம-கலஹ—ப்ரணய கலஹத்தின், ப்ரரோஹம்—முளையை (மூலத்தை), சிதிலயதி—போக்கி விடுகிறதோ, காமாக்ஷ்யா:—காமாக்ஷியினுடைய, ஸா—அப்பேர்ப்பட்ட, சரணயுகளீ—பாதங்களின் இரண்டு, விஜயதே—விளங்குகிறது.

எந்த இணையடிகள் பீலிகளின் சப்தங்களால் ஏதோ ஒரு விஷயத்தை இனிமையாக சொல்வதுபோலிருந்துகொண்டு புன்சிரிப்புள்ள முகத்துடன் எதிரில் வணங்கிக்கொண்டிருக்கும் புரங்களை ஜெயித்த சிவனிடத்தில் ஸாமர்த்யசாலியான தோழிபோல, பிரணய கலஹத்தின் அங்குரத்தை (முளையை, தளர்த்திவிடுகின்றதோ அந்த ஸ்ரீ காமாக்ஷிதேவியின் பாதங்களின் இரட்டையானது பிரகாசிக்கின்றது.

ப்ரணய கலஹத்தால் கோபங்கொண்ட தேவியை ஸமாதானப் படுத்தும்பொருட்டு வசீகரமான புன்னகையோடு ஈச்வரன் திருவடிகளில் விழுகிறார். அப்போது அசையும் பாதங்களிலுள்ள தண்டை

முதலிய ஆபரணங்கள் இனிமையாக ஒலிப்பதைப் பார்த்தால், கோபத்தைத் தணிப்பதற்காக ஸமர்த்தையான தோழி சிவனுக்காகப் பரிந்துபேசுவதுபோல் இருக்கிறது என்கிறார். (8)

सुपर्वस्त्रीलोलालकपरिचितं षट्पदकुलैः
स्फुरल्लाक्षारागं तरुणतरणिज्योतिररुणैः ।
भृतं कान्त्यम्भोभिर्विसृमरमरन्दैः सरसिजै-
र्विधत्ते कामाक्ष्याश्चरणयुगलं बन्धुपदवीम् ॥ ९ ॥

***ஸுபர்வ-ஸ்திரீ-லோலாலக பரிசிதம் ஷட்பத-குலை:
ஸ்புரல்-லாக்ஷாராகம்தருண-தரணி-ஜ்யோதிர்-அருணை:
ப்ருதம் காந்த்யம்போபி: விஸ்ருமர-மரந்தை: ஸரஸிஜை:
விதத்தே காமாக்ஷ்யா: சரண-யுகளம் பந்து பதவீம்*** ॥ (9)

ஸுபர்வஸ்த்ரீ—தேவ ஸ்திரீகளுடைய, லோல—அசைகிற, அலக—கூந்தல்களோடு, பரிசிதம்—சேர்ந்ததும், ஸ்புரத்—பிரகாசிக்கிற, லாக்ஷாராகம்—செம்பஞ்சுக்குழம் பினால் பூசினதாய் இருப்பதும், தருணதரணி—பால சூரியனுடைய, ஜ்யோதிரருணை:—கிரணம்போன்ற சிவந்த, காந்தி-அம்போபி:—காந்தி என்னும் ஜலத்தினால், ப்ருதம் — நிறைந்ததாய் இருப்பதும் (ஆன), காமாக்ஷ்யா:—காமாக்ஷியினுடைய, சரணயுகளம்—இரண்டு பாதங்களும், ஷட்பத குலை: — வண்டுகளோடும், தருணதரணீ ஜ்யோதிரருணை:—பால சூரிய கிரணம்போல் சிவந்ததும், விஸ்ருமர—பெருகும், மரந்தை:—தேனையுடையதும் ஆன, ஸரஸிஜை: — தாமரைப் பூக்களோடு, பந்துபதவீம் — பந்துவாயிருக்கும் நிலைமையை, விதத்தே—தரிக்கின்றன.

வணங்குகிற தேவ ஸ்திரீகளின் அசைகிற கூந்தல்களோடு சேர்ந்து பிரகாசிக்கிறதும், பளபளப்பான செம்பஞ்சுக் குழம்பால் சிவந்தும் பால சூரியனின் கிரணம்போன்று சிவந்த காந்தியாகிற ஜலத்தினால் நிறைந்ததாயுமிருக்கிற காமாக்ஷியின் இரண்டு பாதங்கள் வண்டுகளோடும் இளம் சூரியனின் ஒளிகளால் சிவந்தனவும், மகரந்தத்தை பெருகவிடுகின்றதுமான தாமரைப் புஷ்பங்களோடு பந்துவாக இருக்கும் நிலைமையை தரிக்கின்றன.

தேவியின் திருவடிகளுக்கும், தாமரைப் புஷ்பங்களுக்கும் உள்ள ஒற்றுமையை இந்த சுலோகத்தில் காட்டுகிறார். திருவடிகள்,

நமஸ்காரம் செய்யும் தேவ ஸதிரீகளுடைய கூந்தல்களோடு சம்பந்தப்பட்டும் செம்பஞ்சுக் குழம்பினுல பூசப்பட்டும் உதயமா கின்ற சூரியனுடைய கிரணம்போன்ற காந்தியையுடையன. தாமரைப் புஷ்பங்கள் வண்டுகளோடு சம்பந்தப்பட்டு உதிக்கின்ற சூரியனுடைய செங்கதிர்போன்றனவாய்ப் பெருகும் தேனை உடையன. (9)

रजःसंसर्गेऽपि स्थितमरजसामेव हृदये
परं रक्तत्वेन स्थितमपि विरक्तैकसुलभं ।
अलभ्यं मन्दानां दधदपि सदा मन्दगतितां
विधत्ते कामाक्ष्याश्चरणयुगमाश्चर्यलहरीम् ॥ १० ॥

***ரஜஸ்-ஸம்ஸர்கேऽபி ஸ்திதம் அரஜஸாம்ஏவ ஹ்ருதயே***
***பரம்ரக்தத்வேன ஸ்திதமபி விரக்தைக-ஸுலபம்***
***அலப்யம் மந்தாநாம் ததத்அபி ஸதா மந்த-கதிதாம்***
***விதத்தே காமாக்ஷ்யா: சரணயுகம் ஆச்சர்ய-லஹரீம்'***

ரஜஸ்-ஸம்ஸர்கே அபி—ரஜஸ்ஸின் ஸம்பந்தம் இருந்தபோதிலும், அரஜஸாம்—ரஜஸ் இல்லாதவர்களுடைய, ஹ்ருதயே ஏவ — ஹ்ருதயத்தில்மட்டுமே, ஸ்திதம் — இருப்பவைகளும், பரம் — முழுவதும், ரக்தத்வேந — ரக்தம் என்னும் சிவந்த வர்ணத்தோடு, ஸ்திதம் அபி—இருந்தபோதிலும், விரக்தைக ஸுலபம்—விரக்தி யுடையவர்களுக்குமட்டுமே ஸுலபமாயிருப்பவைகளும், ஸதா—எப்போதும், மந்த-கதிதாம்—மந்தமான நடையை, ததத்அபி — அடைந்திருந்தபோதிலும், மந்தாநாம்—மந்தமதிகளுக்கு, அலப்யம்—பெறமுடியாதவைகளாயுமிருக்கிற, காமாக்ஷ்யா:—காமாக்ஷியினுடைய, சரணயுகம்—இரண்டு பாதங்கள், ஆச்சர்ய-லஹரீம்—ஆச்சர்யங்களென்னும் அலைகளை, விதத்தே—உண்டுபண்ணுகின்றன.

காமாக்ஷியின் இரண்டு பாதங்கள் தனக்கு ரஜஸ்ஸம்பந்தமிருந்தபோதிலும் ரஜஸ் இல்லாதவர்களின் மனதில்மட்டுமேயிருந்து, மிகுந்த ராகத்தோடிருப்பினும், ராகமற்றவர்களுக்கு சுலபமாயிருப்பவைகளும், எப்பொழுதும் மந்தமான நடையை அடைந்திருந்தபோதிலும் மந்தமதி உடையவர்களுக்கு கிடைக்கப்பெறுததாயிருந்துகொண்டு ஆச்சர்யமென்னும் அலைகளை உண்டுபண்ணுகின்றன.

கவி தன் சப்த சாதுர்யத்தால் பரஸ்பர விருத்தங்களான தர்மங்கள் அம்பாளின் திருவடிகளில் இருப்பதுபோல் தோற்றுவிப்பதால், அம்பாளின் பாதங்கள் மேன்மேலும் ஆச்சர்யத்தை விளைவிக்கின்றன என்கிறார். அதாவது: பாதங்களில் ரஜஸ் இருந்தபோதிலும் ரஜஸ் இல்லாதவர்களுடைய மனதிலேயே அவை இருக்கும். முதல் ரஜஸ் சப்தத்திற்கு மகரந்தப்பொடி என்று பொருள்; இரண்டாவதுக்கு ரஜோகுணம் என்று பொருள்; ரஜோகுணத்தை விலக்கி ஸத்வகுணத்தை பெற்றவர்களே அம்பாளை த்யானம் செய்யமுடியும்.

தாமரை போல் திருவடிகள் (ரக்தமாய்) சிவந்து இருப்பினும் விரக்தர்களுக்கே (சிவப்பு = ஆசையற்றவர்களுக்கே) ஸுலபமானவை. (ரக்தம் = சிவப்பு, ஆசை.)

ஹம்ஸம்போல் மந்தமான அழகிய நடையையுடையதாயினும் மந்தர்களுக்கு அதாவது ஞானமில்லாதவர்களுக்குக் கிட்ட முடியாதவை. தான் மந்தமாயிருக்கும்போதும் மந்தர்களால் கிட்ட முடியாதவையாய் இருக்கின்றன. மந்தம் = மெதுவான; மந்த புத்தியுள்ளவர்.

இப்படி பரஸ்பர விருத்த தர்மங்கள் ஓரிடத்திலேயே இருப்பதால் பாதங்கள் ஆச்சர்யத்தைத் தருகின்றன என்கிறார். (10)

जटाला मञ्जीरस्फुरदरुणरत्नांशुनिकरै-
निषीदन्ती मध्ये नखरुचिझरीगाङ्गपयसाम् ।
जगत्त्राणं कर्तुं जननि मम कामाक्षि नियतं
तपश्चर्यां धत्ते तव चरणपाथोजयुगली ॥ ११ ॥

*ஜடாலா மஞ்ஜீர-ஸ்புரத்-அருண-ரத்நாம்சு-நிகரை:*
*நிஷீதந்தி மத்யே நக-ருசி-ஜரீ-காங்க-பயஸாம்*
*ஜகத்-த்ராணம் கர்த்தும் ஜநநி மம காமாக்ஷி நியதம்*
*தபச்-சர்யாம் தத்தே தவ சரண-பாதோஜ-யுகளீ ॥* (11)

மம ஜநநி—என் தாயே!, காமாக்ஷி—காமாக்ஷி!, மஞ்ஜீர—தண்டைகளில், ஸ்புரத் — பிரகாசிக்கின்ற, அருணரத்ன — சிவந்த ரத்னங்களின், அம்சுநிகரை:—காந்திகளின் கூட்டங்களால், ஜடாலா—ஜடையை தரித்தவைகளாயும், நகருசி-ஜரீ—நகங்களின் காந்திவெள்ளமாகிற, காங்க-பயஸாம்—கங்காப்

பிரவாஹத்தின், மத்யே—நடுவில், ஸ்தித்தந்தி—வீற்றிருப்பவை களாயும் இருக்கிற, தவ — உன்னுடைய, சரண-பாதோஜ-யுகளீ—தாமரைபோன்ற இரு பாதங்களும், ஜகத்-த்ராணம்—உலகத்தின் காப்பாற்றுதலை, கர்த்தும் — செய்யும்பொருட்டு, நியதம்—எப்போதும், தபஸ்-சர்யாம்—தபஸ் என்னும் கார்யத்தை, தத்தே—செய்கின்றன.

என் தாயான காமாக்ஷியே! தண்டைகளில் விளங்குகின்ற சிவந்த ரத்னங்களின் காந்தி ஸமூஹங்களென்ற ஜடைகளை முடித்துக்கொண்டு நககாந்திகளின் பிரவாஹமென்ற கங்கா பிரவாஹத்தின் நடுவில் நின்ற உன்னுடைய தாமரைபோன்ற இரு பாதங்களும், உலக நிலையின்பொருட்டு தபஸ் என்ற கார்யத்தை செய்கின்றன.

தன் கருணையால் அம்பாள் எப்போதும் ஜகத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கிருள் என்பதை அவள் பாதங்கள் தவக்கோலம் பூண்டு ஜகத் ரக்ஷணமென்னும் தபஸ்ஸை எப்போதும் அனுஷ்டிக்கின்றன என்று கூறுகிருர்.

தண்டைகளில் இழைக்கப்பட்டு வில் வீசும் ரத்னங்களின் காந்தியே சிவந்த ஜடைகள்; நகங்களின் ஜோதி வெள்ளத்தின் நடுவே பாதங்கள் இருப்பதே ஜலத்தின்மேல் நின்று தவம் செய்வது என்று வர்ணிக்கிருர்.

तुलाकोटिद्वन्द्वक्वणितभणिताभीतिवचसो-
विनम्रं कामाक्षी विसृमरमहःपाटलितयोः।
क्षणं विन्यासेन क्षपिततमसोर्मे ललितयोः
पुनीयान्मूर्धानं पुरहरपुरंध्रीचरणयोः ॥ १२ ॥

*துலாகோடி-த்வந்த்வ-க்வணித-பணிதா-பீதி-வசஸோ:*
*விநம்ரம் காமாக்ஷீ விஸ்ருமர-மஹ:-பாடலிதயோ:*
*க்ஷணம் விந்யாஸேந க்ஷபித-தமஸோ: மே லலிதயோ:*
*புநீயாந்-மூர்த்தாநம் புரஹர-புரந்த்ரீ சரணயோ:॥*

புரஹர—சிவனுடைய, புரந்த்ரீ—தேவியான, காமாக்ஷீ—காமாக்ஷியினுடைய, துலாகோடி-த்வந்த்வ — இரண்டு பீலிகளுடைய, க்வணித—சப்தத்தினல், பணித—சொல்லப்பட்ட, அபீதிவசஸோ:—அபய வார்த்தைகளையுடையவைகளும், விஸ்ருமர—அதிகமாய் உண்டாகிற, மஹ: பாடலிதயோ:—காந்தி

**யாலே சிவந்தவைகளும், க்ஷபித — போக்கடிக்கப்பட்ட, தமஸோ: — ( அஞ்ஞானமென்னும் ) இருளையுடையவைகளும், லலிதயோ: — அழகானவைகளுமான, சரணயோ: — பாதங்களினுடைய, க்ஷணம்—கொஞ்ச நேரம், விந்யாஸேந—வைப்பதால், விநம்ரம்—வணங்கின, மே—என்னுடைய, மூர்த்தாநம் —தலையை, புநீயாத்—பரிசுத்தம் செய்யட்டும்.**

புரங்களை எரித்த பரமசிவனின் மனைவியான காமாக்ஷி இரண்டு பிலிகளுடைய (சிலம்பு) சப்தத்தால் அபய வார்த்தைகளை யுரைத்துக் கொண்டு பரவுகிற ஒளிகளால் சிவந்தவைகளாய் தமோகுணத்தை யழிக்கின்ற அழகான பாதங்களின் கொஞ்ச நேரம் வைப்பதால், வணங்கின எனது தலையை பரிசுத்தம் செய்யட்டும்.

பாதங்களில் பக்தர்கள் வணங்குங் காலத்தில் அம்பாளின் அடிகளிலுள்ள சிலம்புகள் ஒலிப்பதைப் பார்த்தால், அவர்களுக்கு 'அஞ்சேல்' என்று அபயமளிப்பதுபோல் இருக்கிறது. (12)

भवानि द्रुह्येतां भवनिबिडितेभ्यो मम मुहु-
स्तमोव्यामोहेभ्यस्तव जननि कामाक्षि चरणौ।
ययोर्लाक्षाबिन्दुस्फुरणधरणाद्धूर्जटिजटा:
कुटीरा शोणाङ्कं वहति वपुरेणाङ्ककलिका ॥ १३ ॥

*பவாநி! த்ருஹ்யேதாம் பவ-நிபிடிதேப்யோ மம முஹு:*
*தமோ-வ்யாமோஹேப்ய: தவ ஜநநி! காமாக்ஷி! சரணௌ*
*யயோர்-லாக்ஷாபிந்து-ஸ்புரண-தரணாத் தூர்ஜடி-ஜடா*
*குடீரா சோணாங்கம் வஹதி வபு: ஏணாங்க-கலிகா ॥*

பவாநி—சிவனுடைய தேவியே!, ஜநநி —தாயே, காமாக்ஷி—காமாக்ஷி!, யயோ:—எந்த பாதங்களுடைய, லாக்ஷா-பிந்து—செம்பஞ்சுக்குழம்பின், ஸ்புரண—ஒளியை (பிரதிபிம்பத்தை) தரணாத்—தரிப்பதனுல், தூர்ஜடி—சிவனுடைய, ஜடாகுடீரா—ஜடை என்னும குடிசையில் வஸிக்கிற, ஏணாங்க — சந்திரனுடைய, கலிகா—பிறையானது, சோணாங்கம் — சிவப்பு மச்சமுள்ள, வபு:—சரீரத்தை, வஹதி — தரிக்கிறதோ (அப்பேர்ப்பட்ட, தவ—உன்னுடைய, சரணௌ — அந்தப்பாதங்கள், முஹு:—அடிக்கடி, மம—என்னுடைய, பவநிபிடிதேப்ய:—பிறவிக்குக்காரணமான, தமோ-வ்யாமோ ஹேப்ய:—இருட்டுக் கூட்டங்களை, த்ருஹ்யேதாம்—நாசம் செய்யட்டும்,

சிவனுடைய தேவியே, தாயே, காமாக்ஷி எந்த பாதங்களின் செம்பஞ்சுக்குழம்பின் துளியின் ஒளியை (பிரதிபிம்பம்) தரிப்பதால் பரமசிவனின் ஜடாமுடி என்னும குடிசையில் வஸிக்கின்ற சந்திர னின் பிறையானது சிவப்பு மருவுள்ள சரீரத்தையடைகிறதோ அந்த உனது பாதங்கள் அடிக்கடி எனது பிறவிக்குக் காரணமான இருள் கூட்டங்களை (தமோகுணத்தின் செயல்களை) நாசம் செய்யட்டும்.

ப்ரணய கலஹ ஸமயத்தில் சிவன் அம்பாளை வணங்குகிற படியால் அவள் பாதங்களில் இடப்பட்ட செம்பஞ்சுக் குழம்பின் திவலைகள் பிறைச்சந்திரனில் படுகின்றன. அப்போது வெளுப்பான சந்திரனுடைய சரீரத்தில் சிவப்பான மச்சங்கள் இருப்பதுபோல தோன்றுகிறது என்கிருர். அப்பாதங்கள் இருளை நீக்கி என்பிறவியை யறுக்கட்டும்.

पवित्रीकुर्युर्नः पदतलभुवः पाटलरुचः
परागास्ते पापप्रशमनधुरीणास्तव शिवे ।
कणं लब्धुं येषां निजशिरसि कामाक्षि नियतं
वलन्तो व्यातन्वन्त्यहमहमिकां वासवमुखाः ॥ १४ ॥

***பவித்ரீ-குர்யு: ந: பத-தல-புவ: பாடல-ருச:***
***பராகாஸ்-தே பாப-ப்ரசமந-துரீணாஸ்-தவ ஶிவே!***
***கணம் லப்தும் யேஷாம் நிஜ-ஶிரஸி காமாக்ஷி! நியதம்***
***வலந்தோ வ்யாதந்வந்தி அஹமஹமிகாம் வாஸவ-முகா:***

ஶிவே — மங்களாம்பிகையே!, காமாக்ஷி — காமாக்ஷியே;, யேஷாம்—எந்த துளிகளினுடைய, கணம்—கொஞ்சத்தையும் நிஜ-ஶிரஸி — தங்கள் தலையில், லப்தும் — பெறுவதற்கு, நியதம்—எப்போதும், வாஸவ-முகா: — இந்திரன் முதலான தேவர்கள், வலந்த: — (ஒருவரையொருவர்) தள்ளிக்கொண்டு அஹமஹமிகாம்—நான் முந்தி நான் முந்தி என்று போட்டியை வ்யாதந்வந்தி—செய்கிருர்களோ, தவ—உன்னுடைய, பத-தல-புவ:—பாததலங்களில் இருப்பவைகளும், பாடல-ருச:—சிவந்த ஒளியையுடையவைகளும், பாப-ப்ரசமந — பாபத்தை போக்குவதில், துரீண: — ஸாமர்த்தியமுள்ளவைகளுமான தே பராகா:—அப்பேர்ப்பட்ட தூளிகள், ந:—எங்களை, பவித்ரீ-குர்யு:—பரிசுத்தமாகச் செய்யட்டும்.

மங்களமூர்த்தியான ஸ்ரீ காமாக்ஷியே! எந்த தூளிகளின் அணுக்களையும் தங்களது சிரஸ்களில் பெறுவதற்கு எப்பொழுதும் இந்திரன் முதலான தேவர்கள் ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு நான் முந்தி, நான் முந்தி என போட்டியைச் செய்கிறார்களோ அந்த உனது பாதப்பிரதேசங்களிலிருந்து உண்டாகி பாபத்தைப் போக்கு வதில் ஸாமர்த்தியமுள்ளவைகளான தூளிகள் எங்களை பரிசுத்த மாகச் செய்யட்டும்.

தங்கள் பாபங்களைப் போக்கிக்கொள்வதற்காக தேவியின் பாததூளிகளைத் தங்கள் சிரஸுகளில் பெறுவதற்கு இந்திரன் முத லான ஸகல தேவர்களும் 'நான் முன்னே' 'நான் முன்னே' என்று ஒருவர்மேல் ஒருவர் விழுந்து தள்ளிக்கொண்டு வருகிறார்கள். அப் போப்பட்ட பாததூளிகள் எங்களையும் பரிசுத்தமாக்கட்டும் என்று பிரார்த்திக்கிறார்.

वलाकामालाभिर्नखरुचिमयीभिः परिवृते
विनम्रस्वर्नारीविकचकचकालाम्बुदकुले।
स्फुरन्तः कामाक्षि स्फुटदलितबन्धूकसुहृद-
स्तडिल्लेखायन्ते तव चरणपाथोजकिरणाः ॥ १५ ॥

*பலாகா-மாலாபி: நக-ருசி-மயீபி: பரிவ்ருதே*
*விநம்ர-ஸ்வர்-நாரீ-விகச-கச-காலாம்புத-குலே ।*
*ஸ்புரந்த: காமாக்ஷி ஸ்புட-தளித-பந்தூக-ஸுஹ்ருத:*
*தடில்-லேகாயந்தே தவ சரண-பாதோஜ-கிரணா: ॥*

காமாக்ஷி—காமாக்ஷி, நக-ருசி-மயீபி: — நகங்களின் காந்தி களாகிற, பலாகா-மாலாபி: — கொக்குக் கூட்டங்களால், பரிவ்ருதே—சூழப்பட்ட, விநம்ர — நமஸ்கரிக்கின்ற, ஸ்வர்-நாரீ—தேவஸ்திரீகளுடைய, விகச-கச — அவிழ்ந்த கூந்தல் களாகிற, கால-அம்புத-குலே—கருத்த மேகங்களுடைய கூட் டத்தில், ஸ்புட தளித — நன்றாக மலர்ந்த, பந்தூக-ஸுஹ்ருத:—செம்பரத்தம்பூவுக்குச் சிநேகங்களாய் (ஸமானங் களாய்) ஸ்புரந்த:—விளங்கிக்கொண்டிருக்கிற, தவ—உன்னு டைய, சரண பாதோஜ — தாமரை போன்ற பாதங்களுடைய, கிரணா:—கிரணங்கள், தடில்லேகாயந்தே—மின்னல்கொடிகளாகி கின்றன.

காமாக்ஷியே! நன்றாக மலர்ந்த செம்பரத்தம்பூவுக்கு ஈநே கங்களாய், விளங்கிக்கொண்டிருக்கிற உமது தாமரை போன்ற பாத கிரணங்கள், நகங்களில் காந்திகளாகிற, கொக்குகளின் வரிசை களால்சூழப்பட்ட தேவஸ்திரீகளின் அவிழ்ந்த கூந்தல்களென்றும் கருத்த மேகங்களின் கூட்டத்தில் மின்னல்கொடிகளாகின்றன.

தேவஸ்திரீகள் மிகுந்த உத்ஸாகத்துடன் ஓடிவந்து அம் பாளை நமஸ்கரிக்கும்போது அவிழ்ந்து அசையும் அவர்களுடைய இருண்ட கூந்தல்களே கார்மேகங்கள்; அம்பாளின் வெளுத்த கிரணங்களே மேகத்தையொட்டிப் பறக்கும் கொக்குக் கூட்டங்கள்; அடித்தாமரையிலிருந்து எழும் கதிர்களே மேகத்தினிடையே மிளி ரும் மின்னல்கள் என்று இவற்றை கார்காலத்து வானத்துக்கு ஒப்பிடுகிறார்.

सरागः सद्वेषः प्रसृमरसरोजे प्रतिदिनं
निसर्गादाक्रामन्विबुधजनमूर्धानमधिकम् ।
कथंकारं मातः कथय पदपद्मस्तव सतां
नतानां कामाक्षि प्रकटयति कैवल्यसरणिम् ॥१६॥

*ஸராக: ஸத்வேஷ: ப்ரஸ்ருமர-ஸரோஜே ப்ரதி திநம்*
*நிஸர்காத் ஆக்ராமந் விபுத-ஜந-மூர்த்தாநம் அதிகம்*
*கதங்காரம் மாத: கதய பத-பத்மஸ்-தவ ஸதாம்*
*நதாநாம் காமாக்ஷி ப்ரகடயதி கைவல்ய-ஸரணிம்* ॥

மாத: காமாக்ஷி—தாயே காமாக்ஷி! ஸராக:—ராகம் (ஆசை) யுள்ளதும், ஸத்வேஷ: — துவேஷமுள்ளதும், ப்ரஸ்ருமர— மலர்ந்த, ஸரோஜே—தாமரைப்பூ விஷயத்தில், ப்ரதி தினம்— ஒவ்வொரு நாளும், விபுத ஜந—தேவர்களுடைய, மூர்த்தா நம்—தலையை, நிஸர்காத் — ஸ்பாவத்திலேயே, அதிகம்— நன்றாக, ஆக்ராமந் — ஆக்கிரமிப்பதாதாயுமுள்ள, தவ— உன்னுடைய, பத-பத்ம:—தாமரைபோன்ற பாதமானது, நதா நாம்—வணங்குகிற, ஸதாம்—ஸாதுக்களுக்கு, கைவல்ய ஸர ணிம்—மோக்ஷ மார்க்கத்தை, கதங்காரம்—எப்படித்தான், ப்ர கடயதி—காட்டித்தருகிறதோ, கதய—சொல்லு.

அன்னை காமாக்ஷியே. ராகத்துடன் கூடி மலர்கின்ற தாம ரைப்பூ விஷயத்தில் துவேஷம் கொண்டு ஒவ்வொரு நாளும் ஸ்வ பாவத்திலேயே ஞானிகளுடையவும் தேவர்களினுடையவும் சிரஸ்

**களை ஆக்ரமிப்பதாயுமுள்ள உனது தாமரை போன்ற பாதமானது வணங்குகிற ஸாதுக்களுக்கு எங்ஙனம் மோக்ஷ மார்க்கத்தை விளக்குகின்றது சொல்லு.**

**மோக்ஷத்தில் ஆசையுடையவர்களுக்கு ராகம், துவேஷம், பிறரை ஆக்ரமித்தல் முதலான குணங்கள் இருக்கலாகாது. முமுக்ஷுக்களுக்கு வழியைக்காட்டுமவர்களுக்கோ அவை ஒருநாளும் ஏற்கா. ஆனால் அம்பாளின் பாதங்களோ ராகம் துவேஷம் ஆக்ர மணம் முதலியவற்றோடு கூடியிருப்பினும் தன்னை ஆச்ரயித்தவர் களுக்கு மோக்ஷத்தைத் தருகின்றன. இது விசித்திரம் என்கிறார்.** இங்கு 'ராகம்'என்பதற்கு சிவப்பு வர்ணம். தாமரையிடத்தில் துவேஷ மாவது அழகில் அதை விஞ்சியிருப்பது; தேவஸ்திரீகளை ஆக்ரமித்தலா வது அவர்கள் கர்வத்தை விட்டு தங்கள் மனோரதம் நிறைவேறும் பொருட்டு அம்பாளின் பாதங்களில் சிரஸ்ஸுபடும்படி வணங்கி இருக்கும்படி செய்ததேயாகும்.

जपालक्ष्मीशोणो जननि परमज्ञाननलिनी-
विकासव्यासङ्गो विफलितजगज्जाड्यगरिमा ।
मनः पूर्वाद्रिं मे तिलकयतु कामाक्षि तरसा
तमस्काण्डद्रोही तव चरणपाथोजरमणः ॥ १७ ॥

***ஜபாலக்ஷ்மீசோணோ ஜநநி பரம-ஜ்ஞாந-நளிநீ***
***விகாஸ-வ்யாஸங்கோ விபலித-ஜகஜ்-ஜாட்ய-கரிமா***
***மந:-பூர்வாத்ரிம் மே திலகயது காமாக்ஷி தரஸா***
***தமஸ்-காண்ட-த்ரோஹீ தவசரண-பாதோஜ-ரமண:***

ஜநநி காமாக்ஷி—தாயே காமாக்ஷி! ஜபா-லக்ஷ்மீ—ஜபாகுஸு மத்தின் காந்திபோல், சோண—சிவந்ததாயும், பரம-ஜ்ஞான—உத்தம ஞானமாகிற, நளிநீ-விகாஸ—தாமரையின் மலர்ச்சி யோடு, வ்யாஸங்க:—சம்பந்தமுள்ளதாயும், விபலித—நாசம் செய்யப்பட்ட, ஜகத்—உலகத்தினுடைய, ஜாட்ய-கரிமா—அஜ்ஞானத்தின் சுமையையுடையதாயும், தமஸ்-காண்ட—(அஜ்ஞானமென்னும்) இருள் கூட்டத்தை, த்ரோஹீ—போக்கு வதாயுமிருக்கிற, தவ—உன்னுடைய, சரண-பாதோஜ-ரமண:—பாதமாகிற ஸூர்யன், தரஸா—சீக்கிரத்தில், மே—என்னுடைய, மந: பூர்வாத்ரிம் — மனஸ் என்னும் உதய பர்வதத்தை, திலக யது—அலங்கரிக்கட்டும்,

தாயே! காமாக்ஷி, செம்பரத்தம் பூவின் காந்திபோல சிவந்து உத்தம ஞானமென்கிற தாமரையின் மலர்ச்சிகளோடு சம்மந்தம் உள்ளதாய், உலகத்தின் அக்ஞானமென்னும் இருள் கூட்டத்தை போக்குகின்ற உனது பாதமென்னும் சூர்யன் சீக்கிரத்தில் என்னுடைய மனஸ் என்னும் உதயபர்வதத்தை அலங்கரிக்கட்டும்

ஸூர்யன் காலையில் சிவப்பாக இருக்கிறன்; ஜபாகுஸுமம் தாமரைபுஷ்பம் இவைகளை போல் சிவந்த நிறமுடையன அம்பாளின் பாதங்கள். ஸூரியன் தாமரைகளை மலரச்செய்கிறன், பாதங்கள் ஞானத்தை விகஸிக்கச்செய்கின்றன. ஸூர்யோதயமானல் இருள் நீங்கி மக்களிடமுள்ள சோம்பேறித்தனம் நசித்துபோகிறது; பாதங்களை தியானித்தால், அஜ்ஞானம் நீங்கி ஜடத்தன்மை நசித்து விடுகிறது. இவ்விதம் பாதங்களை ஸூர்யனுக்கு ஒப்பிடுகிருர்.

नमस्कुर्मः प्रेङ्खन्मणिकटकनीलोपलमहः
पयोधौ रिङ्खद्भिर्नखकिरणफेनैर्धवलिते ।
स्फुटं कुर्वाणाय प्रबलचलदौर्वानलशिखा-
वितर्कं कामाक्ष्याः सततमरुणिम्ने चरणयोः ॥ १८ ॥

***நமஸ்-குர்ம: ப்ரேங்கத்-மணி-கடக-நீலோபல-மஹ:***
***பயோதெள ரிங்கத்பிர்-நக-கிரண பேனை: தவளிதே***
***ஸ்புடம் குர்வாணய ப்ரபல-சல-தெளர்வாநல-சிகா-***
***விதர்க்கம் காமாக்ஷ்யா: ஸததம் அருணிம்நே சரணயோ:***

ரிங்கத்பி: — வெளிக்கிளம்புகிற நக-கிரண — நகங்களின் காந்தி என்னும், பேனை:—நுரைகளால், தவளிதே—வெளுத்த பரேங்கந்—ஜ்வலிக்கின்ற, மணி-கடக —ரத்னசிலம்புகளின், நீலோபல—இந்திரநீலகற்களின், மஹ:பயோதெள — ஒளியாகிற ஸமுத்திரத்தில், ப்ரபல-சலத் — பிரபலமாய் ஜ்வலிக்கிற, ஔர்வாநல —படபாக்னியின், சிகா விதர்க்கம் — ஜ்வாலையோ என்கிற ஸந்தேகத்தை, குர்வாணய — உண்டாக்குகிற, காமாக்ஷ்யா: — காமாக்ஷியினுடைய, சரணயோ: — பாதங்களினுடைய, அருணிம்நே—சிவப்பு வர்ணத்திற்கு, ஸததம்—எப்போதும், நமஸ்குர்ம,—நமஸ்காரம் செய்கிறேம்.

மிதந்துகொண்டிருக்கின்ற நக கிரணங்களாகிற நுரைகளால் வெளுத்து, ஜ்வலிக்கின்ற தண்டைகளிலுள்ள இந்திரநீலகற்களின் காந்தி யென்னும் ஸமுத்திரத்தில் பிரபலமாய் ஜ்வலிக்கிற படபாக்னியின் ஜ்வாலையொன்ற ஸந்தேகத்தை உண்டாக்குகின்ற காமாக்ஷியின் பாதங்களினுடைய சிவப்பு வர்ணத்திற்கு எப்பொழுதும் நமஸ்காரம் செய்கிறோம்.

அம்பாளின் பாதங்களில் இலங்கும் தண்டை சிலம்புகளில் இழைக்கப்பட்ட நீலகற்களின் காந்தி வெள்ளமே ஸமுத்திரம்; வெளுப்பான நகங்களின் வெள்ளைச்சோதியே நுரைகள்; பாதங்களிலிருந்து பெருகும் சிவந்த சுடர், கடலின் நடுவிலுள்ள வடபாக்னியோ இது என்று ஸந்தேகத்தை உண்டுபண்ணுகிறது என்கிறார்.

शिवे पाशायेतामलघुनि तमःकूपकुहरे
दिनाधीशायेतां मम हृदयपाथोजविपिने ।
नभोमासायेतां सरसकवितारीतिसरिति ।
त्वदीयौ कामाक्षि प्रसृतकिरणौ देवि चरणौ ॥ १९ ॥

*சிவே பாசாயேதாம் அலகுநி தம:-கூப-குஹரே*
*திநாதீசாயேதாம் மம ஹ்ருதய-பாதோஜ-விபிநே |*
*நபோ-மாஸாயேதாம் ஸரஸ-கவிதா-ரீதி-ஸரிதி*
*த்வதீயௌ காமாக்ஷி ப்ரஸ்ருத-கிரணௌ தேவி சரணௌ* ||

சிவே—மங்கள ரூபையான, தேவி—தேவியே, காமாக்ஷி—காமாக்ஷி! ப்ரஸ்ருத—பரவுகின்ற, கிரணௌ—கிரணங்களையுடைய, த்வதீயௌ சரணௌ—உன் பாதங்கள், மம—என்னுடை, அலகுநி—பெரியதான, தம:-கூப-குஹரே—அஜ்ஞானம் என்னும் பாழும்கிணற்றில், பாசாயேதாம்—கயிறுகளாக ஆகட்டும், ஹ்ருதய—மனதென்கிற, பாதோஜ-விபிநே—தாமரைக்காட்டில், திநாதீசாயேதாம்—ஸூர்யனாக ஆகட்டும், ஸரஸ—இனிமையான, கவிதா ரீதி—கவிதையின் முறைஎன்னும் ஸரிதி—நதியில், நபோமாஸாயேதாம்—சிராவணமாஸமாக ஆகட்டும்.

மங்கள ரூபியான தேவியே காமாக்ஷி! பரவுகின்ற கிரணங்களையுடைய, உனது பாதங்கள் பெரிய அக்ஞான மென்னும் இருள் நிறைந்த பாழுங்கிணற்றில் தாம்புக்கயிறுகளாக ஆகட்டும். எனது

மனமென்ற தாமரைக்காட்டில் ஸூர்யனாக ஜ்வலிக்கட்டும். இனிமையான கவிதையின் முறை என்னும் நதியில் சிராவண மாஸமாக ஆகட்டும்.

அஜ்ஞானமென்னும் பாழுங்கிணற்றில் விழுந்து கரையேராமல் தத்தளிப்பவர்களுக்கு தேவியின் சரணங்கள் அவர்களை வெயேயெடுக்கும் விஷயத்தில் கயிறுபோலவும், மனதுக்கு இன்பத்தையளிப்பதால் மனமாகிய தாமரைகளை மலர்த்தும் ஸூர்யன் போலவும், ஸகல ரஸங்களும் ததும்பபடியான காவ்யத்தை பெருகச்செய்வதால் கவித்வமாகிய நதிகளுக்கு ஆவணி மாதம் போலவும் ஆகட்டும் என்கிறார்.

निषक्तं श्रुत्यन्ते नयनमिव सद्वृत्तरुचिरैः
समैर्जुष्टं शुद्धैरधरमिव रम्यैर्द्विजगणैः ।
शिवे वक्षोजन्मद्वितयमिव मुक्ताश्रितमुमे
त्वदीयं कामाक्षि प्रणतशरणं नौमि चरणम् ॥ २० ॥

***நிஷக்தம் ச்ருத்யந்தே நயநமிவ ஸத்வ்ருத்தருசிரை:***
***ஸமைர் ஜுஷ்டம் சுத்தைரதரமிவ ரம்யை: த்விஜகணை:।***
***சிவே வக்ஷோஜந்ம-த்விதயமிவ முக்தாச்ரிதமுமே***
***த்வதீயம் காமாக்ஷி ப்ரணத-சரணம் நௌமி சரணம் |***

சிவே—மங்களாம்பிகையே! உமே காமாக்ஷி — உமையே காமாக்ஷி! நயநம் இவ—கண்ணைபோல, சருத்யந்தே—(காதின் ஸமீபத்தில்) வேதாந்தத்தில், நிஷக்தம்—ஸம்பந்தபட்டதாயும் அதரம் இவ—உதடுபோல, ஸத்-வ்ருத்த-ருசிரை: — நல்லவையாயும் வ்ருத்தமானவைகளாயும் (காந்தியையுடையவைகளாயும்) ஸமை:—ஒழுங்கானவைகளும், சுத்தை:—வெளுப்பானவைகளாயும், ரம்யை:—அழகானவைகளாயும் உள்ள, த்விஜகணை:—(பல் ஸமூஹங்களால்) பிராமண சமூகங்களால், ஜுஷ்டம்—நிறைந்ததாயும், வக்ஷோஜந்ம-த்விதயம் இவ—இரண்டு ஸ்தனங்கள் போல, முக்தாச்ரிதம் — (முத்துமாலைகளையுடையதாயும்) ஜீவன் முக்தர்களால் ஆச்ரயிக்கப்பட்டதாயும், ப்ரணத சரணம்—வணங்குபவர்களை ரக்ஷிப்பதாயுமிருக்கிற, த்வதீயம்—உன்னுடையதான, சரணம்—பாதத்தை, நௌமி—நமஸ்கரிக்கிறேன்

மங்களகரமானவளே; உமயே! காமாக்ஷி! கண்போல சுருதி யின் ஸமீபத்திலிருப்பவளும், உதடுபோல நல்ல விருத்தியால் காந்தியுடையவளாயும் ஸமங்களாயும் வெளுப்பானவைகளாயும் அழகானவைகளாயும் உள்ள பிராமண சமூகங்களால் நிறைந்ததும் ஸ்தனங்கள் போல முக்தாவளிக்கு உறைவிடமாக அமைந்ததும், நமஸ்கரிப்பவர்களுக்கு அடைக்கலமாயிருக்கிற உன்து பாதத்தை நமஸ்கரிக்கிறேன்.

ச்ருத்யந்தே—வெதங்களின் முடிவில் அதாவது உபநிஷத் தில்; காதின் சமீபத்தில்.

த்விஜ-கணை:— பற்களாலும், பிராமணர்களாலும; பற்கள் சிறந்ததாகவும் வ்ருத்தமாகவும் காந்தியாகவும் ஒழுங்காகவும் ஸம மாகவும் அழகாகவும் வெளுப்பாகவும் இருக்கின்றன. அப்படியே பிராமணர்கள் சிறப்பு, வ்ருத்தம், தேஜஸ், மைதிருஷ்டிசுத்தம், சீலம் முதலியவை உடையவர்களாயிருக்கிருர்கள்.

பிராமணர்களுக்கு தாய் வயிற்றிலிருந்து பிறப்பது முதல் பிறவி, க்யத்ரீ தேவிக்கும் ஆசார்யனுக்குமாகப் பிறப்பது இரண் டாவது ஜன்மம்; பற்கள் ஒருதடவை விழுந்து மறுபடியும் முளைப்ப தால் அவைகளுக்கும் 'த்விஜன்ம' என்றுபெயர்.

முக்தாச்ரிதம் – முத்துமாலைகளால் ஆச்ரயிக்கப்பட்டது. நய னம் காதளவில் நீண்டிருப்பது சிறந்த லட்சணம். நயனம் போல் பாதமும் (ச்ருத்யந்த) வேதாந்தத்தில் பிரதிபாதிக்கப்பட்டது.

नमस्यासंसज्जन्नमुचिपरिपन्थिप्रणयिनी-
निसर्गप्रेङ्खोलत्कुरलकुलकालाहिशबले।
नखच्छायादुग्धोदधिपयसि ते वैद्रुमरुचां
प्रचारं कामाक्षि प्रचरयति पादाब्जसुषमा ॥ २१ ॥

*நமஸ்யா-ஸம்ஸஜ்ஜந்-நமுசி-பரிபந்தி-ப்ரணயிநீ-*
*நிஸர்கப்ரேங்கோலத்-குரலகுல-காலாஹி சபளே |*
*நகச்சாயாதுக்தோ ததி பயஸி தே வைத்ருமருசாம்*
*ப்ரசாரம் காமாக்ஷி ப்ரசுரயதி பாதாப்ஜ ஸுஷமா* (21)

காமாக்ஷி—காமாக்ஷி! நமஸ்யா ஸம்ஸஜ்ஜந் — நமஸ்கரிப்ப தில் ஈடுபட்டிருக்கிறவளான, நமுசி பரிபந்தி ப்ரணயிநீ— நமுசியின் சத்ருவான இந்திரன் மனைவியான இந்திராணியின்

நிஸர்க—இயற்கையிலேயே, ப்ரேங்கோலத்—அசைகிற, குரல குல—சுருட்டை மயிர் கூந்தலாகிற, காலாஹி—கருநாகத் தினல், சபளே—விசித்திரமாயிருக்கிற, நகச்சாயா—நகங்களின், காந்தியாகிற, துக்தோததி— க்ஷீரஸமுத்திரத்தின், பயஸி— வெள்ளத்தில் தே—உன்னுடைய, பாதாப்ஜஸுஷமா—சரண கமலங்களின் சோபை, வைத்ருமருசாம்—பவழங்களின் காந்தி யினுடைய ப்ரசாரம்—பிரசாரத்தை, ப்ரசுரயதி—அதிகமாக்கு கிறது.

காமாக்ஷியே! நமஸ்கரிப்பதில் ஈடுபட்டிருக்கிற நமுசியின் விரோதியான இந்திரனின் மனைவியான இந்திராணியின் இயற்கை யிலேயே அசைகிற சுருட்டை மயிர் கூந்தலாகிற கருநாகத்தால் விசித்ரமான நகங்களின் காந்தியாகிற க்ஷீர ஸமுத்ரத்தின் வெள் ளத்தில் உனது பாத பத்மங்களின் காந்தியானது பவழக்கொடியின் ஒளிகளைப் பெரிதும் பிரசாரம் செய்துகொண்டிருக்கிறது.

அம்பாளின் பாதங்களில் இந்திராணி வந்து வணங்கும்போது கறுத்து நீண்ட அவளுடைய சுருட்டைமயிர் இருஷ்ண சர்ப்பம் போன்றும் திருவடிகளின் நகர்ந்த பாற்கடல் போன்றும் நகச்சோதி களுக்கிடையே திகழும் சிவந்த பாதங்கள் பவழம் போன்றும் இருக் கின்றன என்கிருர். (21)

कदा दूरीकर्तुं कटुदुरितकाकोलजनितं
महान्तं संतापं मदनपरिपन्थिप्रियतमे ।
क्षणात्ते कामाक्षि त्रिभुवनपरीतापहरणे
पटीयांसं लप्स्ये पदकमलसेवामृतरसम् ॥ २२ ॥

*கதா தூரீகர்த்தும் கடு-துரித-காகோல-ஜநிதம்*
*மஹாந்தம் ஸந்தாபம் மதந-பரிபந்தி-ப்ரியதமே |*
*க்ஷணாத் தே காமாக்ஷி த்ரிபுவந-பரீதாப-ஹரணே*
*படீயாம்ஸம் லப்ஸ்யே பதகமல-ஸேவாம்ருதரஸம்॥*

மதந பரிபந்தி ப்ரியதமே—மன்மதனை எரித்த சிவனுடைய பத்னியே! காமாக்ஷி—காமாக்ஷி! கடு-துரித—கொடுமையான பாபம் என்னும், காகோல—விஷத்தினல், ஜநிதம்—உண்டான, மஹாந்தம்—பெரிய, ஸந்தாபம்—ஸந்தாபத்தை, தூரீகர்த் தும்—அகற்றுவதற்கு, க்ஷணாத்—க்ஷண நேரத்திற்குள்ளாகவே,

த்ரிபுவந—மூன்று உலகங்களுடைய, பரீதாபஹரணே—கஷ்டத்தைப் போக்குவதில், ப்படீயாம்ஸம்—மிகவும் ஸாமர்த்திய முள்ள, தே—உன்னுடைய, பதகமல—தாமரை போன்ற பாதங்களில், ஸேவா—சுச்ருஷை என்னும், அம்ருதரஸம்—அம்ருதரஸத்தை, கதா—எப்போது, லப்ஸ்யே—பெறப் போகிறேன்.

மன்மதனை எரித்த சிவனின் காதலியே! கொடுமையான பாப மென்னும் காலகூட விஷத்தால் உண்டான பெரிய ஸந்தர்ப்பத்தை அகற்றுவதற்காக க்ஷண நேரத்தில் மூன்று உலகங்களின் கஷ்டத்தை போக்கடிப்பதில் ஸாமர்த்யமுள்ள உனது தாமரை போன்ற பாதங்களின் ஸேவை என்னும் அமிருத ரஸத்தை எப்பொழுது அடைவேன்?

தேவியின் பாதங்களில் சுச்ருஷை செய்ய முற்பட்டால், கொடிய பாபங்களும் தன்னடைவே விலகிப்போகின்றன என்கிருர்.

यो: सान्ध्यं रोचिः सततमरुणिम्नेस्पृहयते
यश्चान्द्री कान्तिः परितपति दृष्ट्वा नखरुचिम्।
ययोः पाकोद्रेकं पिपठिषति भक्त्या किसलयं
म्रदिम्नः कामाक्ष्या मनसि चरणौ तौ तनुमहे ॥ २३ ॥

*யயோ: ஸாந்த்யம் ரோசி: ஸததம் அருணிம்நே ஸ்ப்ரு-ஹயதே*
*யயோ: சாந்த்ரீ காந்தி: பரிதபதி த்ருஷ்ட்வா நகருசிம்!*
*யயோ: பாகோத்ரேகம் பிபடிஷதி பக்த்யா கிஸலயம்*
*ம்ரதிம்ந: காமாக்ஷ்யா மநஸி சரணௌ தௌ தநுமஹே!!*

யயோ:—எந்த பாதங்களுடைய, அருணிம்நே—சிவப்பு நிறத்தை, ஸாந்த்யம்—ஸந்தியா காலத்தின், ரோசி:—காந்தியானது, ஸததம் ஸ்ப்ருஹயதே — எப்போதும் விரும்புகிறதோ, யயோ: நகருசிம்—எவைகளின் நககாந்தியை, த்ருஷ்ட்வா—பார்த்து, சாந்த்ரீ காந்தி:—சந்திரனின் ஒளி, பரிதபதி—அந்த காந்தி தனக்கு இல்லையே என்று கஷ்டப்படுகிறதோ, யயோ:—எவைகளுடைய, ம்ரதிம்ந:—மிருதுவான தன்மையின், பா

கோத்ரேகம்—நல்ல நிலைமையை, ஸலயம்—துளிரானது—பக்த்யா—பக்தியோடு, பிபடிஷதி—படிக்க விரும்புகிறதோ, காமாக்ஷ்யா:—காமாக்ஷியினுடைய, தௌ சரணௌ—அந்த பாதங்களை, மநஸி—மனதில், தநுமஹே—அமைத்து தியானம் செய்கிறோம்.

எதின் சிவப்பு நிறததை அடைய மாலையொளி எப்பொழுது ஆசைப்படுகின்றதோ, எவற்றின் நக காந்தியைக்கண்டு சந்திரனின் ஒளி மறைகின்றதோ, எவைகளுடைய மிருதுவான தன்மையை துளிரானது பக்தியோடு படிக்க விரும்புகிறதோ காமாக்ஷியின் அந்தப் பாதங்களை மனதில் அமைத்து தியானம் செய்கிறோம்.

தேவியின் பாதங்கள் சிவப்பினால் ஸந்தியா காலத்து செவ்வானத்தையும், நகச்சோதியால் நிலவையும், மிருதுவான தன்மையில் துளிரையும் விஞ்சியிருக்கின்றன. (23)

जगन्नेदं नेदं परमिति परित्यज्य यतिभिः
कुशाग्रीयस्वान्तैः कुशलधिषणैः शास्त्रसरणौ ।
गवेष्यं कामाक्षि ध्रुवमकृतकानां गिरिसुते
गिरामैदंपर्यं तव चरणमाहात्म्यगरिमा ॥ २४ ॥

*ஜகந்நேதம் நேதம் பரமிதி பரித்யஜ்ய யதிபி:*
*குசாக்ரீய-ஸ்வாந்தை:குசல-திஷணை: சாஸ்த்ர-ஸரணௌ |*
*கவேஷ்யம் காமாக்ஷி த்ருவம் அக்ருதகாநாம் கிரிஸுதே*
*கிராம் ஐதம்பர்யம் தவ சரண-மாஹாத்ம்யகரிமா !! (24)*

காமாக்ஷி—காமாக்ஷியே! கிரிஸுதே—பர்வதராஜகுமாரியே, தவசரண—உன்னுடைய பாதங்களின், மாஹாத்ம்ய—மேன்மையின், கரிமா—பெருமையானது, குசாக்ரீய—தர்ப்பநுனிபோல் கூர்மையான, ஸ்வாந்தை:—புத்தியுள்ளவர்களும், குசலதிஷணை:—ஸாமர்த்தியமுள்ள ஞானமுள்ளவர்களுமான, யதிபி:—ஸந்நியாஸிகளால், இதம் பரம் ந—இது மேலானதல்ல, இதம் பரம் ந—இது மேலானதல்ல, இதி—என்று, ஜகத்—உலகத்தை, பரித்யஜ்ய—விட்டு விட்டு, கவேஷ்யம்—தேடத்தக்கதாயும், அக்ருதகாநாம்—ஒருவரால் செய்யப்படாத, கிராம்—சொற்கள் என்னும் வேதங்களின், ஐதம்பர்யம்—முக்கியமான கருத்தாகவும் இருக்கிறது, த்ருவம்—நிச்சயம்.

காமாக்ஷி! மிகவும் கூரிய புத்தியுள்ள யதிகள் இவ்வுலகம் சிறந்ததல்ல என்று அதை விலக்கி, வேதாந்தங்களால் கூறப்படும் சீரிய பொருள் உன் பாத கமலங்களே என்று அவற்றையே தேடுகிறார்கள்.

வேதங்கள் தேவியின் பாதங்களின் பெருமையையே கூறுகின்றன; ஆதலால், யோகாதிகளால் பரிசுத்தமான மனதையுடைய ஸந்நியாஸிகளும் அஸாரம் என்று உலகத்தை விலக்கி தங்கள் தியானத்தினால் தேடவேண்டியது தேவீ சரணங்களே. (24)

कृतस्नानं शास्त्रामृतसरसि कामाक्षि नितरां
दधानम् वैशद्यं कलितरसमानन्दसुधया ।
अलंकारं भूमेर्मुनिजनमनश्चिन्मयमहा-
पयोधेरन्तःस्थं तव चरणरत्नं मृगयते ॥ २५ ॥

*க்ருத-ஸ்நாநம் சாஸ்த்ராம்ருத-ஸரஸி காமாக்ஷி நிதராம்*
*தநாநம் வைசத்யம் கலித-ரஸம் ஆநந்த்-ஸுதயா |*
*அலங்காரம் பூமே: முநி-ஜந-மனச்-சிந்மய-மஹா*
*பயோதே-ரந்த-ஸ்தம் தவ சரண-ரத்நம் ம்ருகயதே ||*

காமாக்ஷி—காமாக்ஷியே!, முநி-ஜந-மந:—முனிவர்களுடைய மனஸ்ஸானது, சாஸ்த்ர—சாஸ்திரங்களென்னும், அம்ருத-ஸரஸி—அம்ருதம் நிறைந்த தடாகத்தில், க்ருத-ஸ்நாநம்—ஸ்நாநம் செய்ததாயும், நிதராம்—அதிகமான, வைசத்யம்—சுத்தியை, தநாநம்—அடைந்ததாயும், ஆனந்த ஸுதயா—ஆநந்தமென்னும் அம்ருதத்தினால், கலிதரஸம்—உண்டான இனிமையை (அல்லது தெம்பை)யுடையதாயுமிருந்துகொண்டு, பூமே:—பூமிக்கு, அலங்காரம்—அலங்காரமாய், சிந்மய-மஹா-பயோதே:—சித்ரூபமான பெரிய சமுத்ரத்தின், அந்த: ஸ்தம்—உள்ளே திகழ்கிற, தவ — உன்னுடைய, சரணரத்நம் — பாதங்களாகிற ரத்னத்தை, ம்ருகயதே—தேடுகிறது.

ஹே காமாக்ஷி தேவியே! உனது திருவடியாகிற இரத்தினத்தை முனிவர்களின் மனதானது தேடிக்கொண்டிருக்கிறது. அந்த திருவடி எத்தகையது? சாஸ்திரமாகிற அமுதம் நிறைந்த குளத்தில் நீர்க்குளித்து மிகவும் சுத்தியை அடைந்து பிரகாசிக்கிறது;

ஆனந்தமென்னும் அமிர்தத்தால் மிகுந்த இனிமையை அடைந்துள்ளது. பூமிக்கு அலங்காரமாயிருக்கிறது. சிந்மயமான முனிவர் சமூத்திரத்திலுள் திகழ்ந்து கொண்டிருக்கிறது. (அத்தகைய திருவடி ரத்நத்தை முனிகளின் மனஸ் தேடிக்கொண்டிருக்கிறது)

मनोगेहे मोहोद्भवतिमिरपूर्णे मम मुहु-
दरिद्राणीकुर्वन्दिनकरसहस्राणि किरणैः ।
विधत्तां कामाक्षि प्रसृमरतमोवञ्चनचणः
क्षणार्धं सान्निध्यं चरणमणिदीपो जननि ते ॥ २६ ॥

*மநோ-கேஹே மோஹோத்பவ-திமிர-பூர்ணே*
*மம முஹு:*
*தரித்ராணீ-குர்வந் திநகர ஸஹஸ்ராணி கிரணை: |*
*விதத்தாம் காமாக்ஷி ப்ரஸ்ருமர-தமோ-வஞ்சந சண:*
*க்ஷணார்த்தம் ஸாந்நித்யம் சரணமணி-தீபோ ஜநநி தே ||*

ஜநநி—தாயே, காமாக்ஷி—காமாக்ஷி! கிரணை:—(தன்) கிரணங்களால், திநகர ஸஹஸ்ராணி — பல்லாயிரம் ஸூர்யர்களை, தரித்ராணீகுர்வந்—அல்பமாகச்செய்வதும், ப்ரஸ்ருமர—பெருகுகிற, தமோ—அக்ஞானம் என்னும் இருளை, வஞ்சந—நீக்குவதில், சண:—ஸாமர்த்தியமுள்ளதுமான, தே—உன்னுடைய, சரணமணிதீப: — பாதங்களாகிற ரத்னதீபமானது, மோஹோத்பவ—மோஹத்திலிருந்து உண்டான, திமிரபூர்ணே —இருள் நிறைந்த, மம — என்னுடைய, மநோ கேஹே — மனமென்னும் வீட்டில், க்ஷணார்த்தம்—அரைக்ஷணகாலமாவது, முஹு: — அடிக்கடி, ஸாந்நித்யம் — ஸாந்நித்யத்தை, விதத்தாம் — செய்யட்டும்.

ஸூர்யனாலும் நீக்கமுடியாத வீட்டுக்குள்ளிருக்கும் இருட்டை ஒரு விளக்கே போக்குகிறது. அதுபோல மனதெனனும் வீட்டுக்குள்ளிருக்கும் அக்ஞானத்தைப் போக்கும்பொருட்டு ஒரு பொழுதும் சுடர் குன்றாது ஆயிரம் ஸூர்யனுக்கு ஸமமாக ஜ்வலிக்கும் ரத்னதீபம் போன்ற அம்பாளின் பாதங்கள் என் மனதில் எப்போதும் விளையினால் இடைவிடாது ஸந்நிதி செய்யாமற்போனாலும் அவை அரை க்ஷணமாகவாவது அடிக்கடி தோன்றட்டும்.

कवीनां चेतोवन्नखरुचिसंपर्कि विबुध-
स्रवन्तीस्रोतोवत्पटुमुखरितं हंसकरवैः ।
दिनारम्भश्रीवन्नियतमरुणच्छायसुभगं
मदन्तः कामाक्ष्याः स्फुरतु पदपङ्केरुहयुगम् ॥ २७ ॥

***கவீநாம் சேதோவத் நகருசி-ஸம்பர்க்கி விபுத-***
***ஸ்ரவந்தீ-ஸ்ரோதோவத்-படுமுகரிதம் ஹம்ஸகரவை:!***
***திநாரம்ப-ஸ்ரீவத் நியதம் அருணச்சாய-ஸுபகம்***
***மதந்த: காமாக்ஷ்யா: ஸ்புரது பதபங்கேருஹ யுகம் ॥***

கவீநாம்—கவிகளுடைய, சேதோவத்—மனம்போல், நகர ருசி — நகங்களின் காந்தியோடு, ஸம்பர்க்கி—சேர்க்கையை உடையதும், விபுதஸரவந்தீ—கங்கையினுடைய, ஸ்ரோதோ வத்—ஜலம்போல, ஹம்ஸகரவை: — பீலிகளின் சப்தங்களால், படுமுகரிதம் — இனிமையான சப்தமுள்ளதும், திநாரம்ப ஸ்ரீவத்—உதயகாலத்தின் சோபைபோல, அருணச்சாய ஸுப கம் — சிவந்தகாந்தியால் அழகுள்ளதுமான, காமாக்ஷ்யா:— காமாக்ஷியினுடைய, பதபங்கேருஹயுகம் — தாமரைபோன்ற இரண்டு பாதங்களும், நியதம் — எப்போதும் (மாறுபாடின்றி) மத் அந்த: — என் ஹிருதயத்தில், ஸ்புரது—பிரகாசிக்கட்டும்.

கவிகளுடைய சித்தம்போல் மிருதுவான வார்த்தைகளின் அழகோடு (நகங்களின் காந்தியோடு) கூடியதும், கங்கை ஜலம் போல் ஹம்ஸங்களோடு (பாதரஸங்களின் சப்தத்தோடு) கூடியதும் உதயகால சோபைபோல் அருணனுடைய சாயையால் (சிவந்த நிறத்தால்) மநோஹரமாயிருப்பதுமான ஸ்ரீ காமாக்ஷி தேவியின் திருவடித்தாமரை இரண்டும் என் ஹிருதயத்தில் பிரகாசிக்கட்டும்.

இந்த சுலோகத்தில் சிலேஷையினால் அம்பாளுடைய பாதத் திற்கு திருஷ்டாந்தமாக மூன்று வஸ்துக்களை கூறுகிறார்.

கவீநாம் சேதோவந் நகருசிஸம்பர்க்கி - கவிகளின் மனது மிருதுவான வார்த்தைகளின் அழகுடன் கூடியது.

விபுத........ ஹம்ஸக - ரவை :—கங்கா ஜலம் விளையாடும் ஹம் ஸங்களின் சப்தங்களோடு கூடியிருக்கும்; பாதங்கள் 'ஹம்ஸம்' என்னும் (பீலி) ஆபரண விசேஷத்தின் ஒலியோடு கூடியவை.

திநாரம்ப ஸ்ரீவத் நியதம் அருணச்சாயஸுபகம் — பகலின் ஆரம்பமான அருணோதய காலம் சிவந்து அழகாயிருப்பதுபோல தேவியின் பாதங்களும் சிவந்து மனோரகமாயிருக்கின்றன.

सदा किं संपर्कात्प्रकृतिकठिनैर्नाकिमकुटै-
स्तटैर्नीहाराद्रेरधिकमणुना योगिमनसा ।
विभिन्ते संमोहं शिशिरयति भक्तानपि दृशा-
मदृश्यं कामाक्षि प्रकटयति ते पादयुगलम् ॥ २८ ॥

**ஸதா கிம் ஸம்பர்க்காத் ப்ரக்ருதி கடினை: நாகி மகுடை: தடை: நீஹாராத்ரே: அதிகம் அணுநா யோகி-மநஸா! விபிந்தே ஸம்மோஹம் சிசிரயதி பக்தான் அபி த்ருசாம் அத்ருச்யம் காமாக்ஷி! ப்ரகடயதி தே பாதயுகளம் !!**

காமாக்ஷி—காமாக்ஷியே! தே--உன்னுடைய, பாதயுகளம்—இரண்டு பாதங்களும், ப்ரக்ருதிகடினை: — இயற்கையிலேயே கடினமான, நாகிமகுடை: — தேவர்களின் கிரீடங்களோடு, ஸதா—எப்போதும், ஸம்பார்க்காத் கிம்? — சேர்ந்திருப்பதினு லேயா? ஸம்மோஹம்—மோஹத்தை, விபிந்தே—போக்கடிக் கிறது, நீஹாராத்ரே: பனிமலையான ஹிமவானின், தடை: பிரதேசங்களோடு ( எப்போதும் சேர்ந்திருப்பதினுலேயா ) பக்தான் பக்தர்களையும், சிசிரயதி குளிரச்செய்கிறது அதிகம் மிகவும் அணுகா அணு (பரமாணு) ஸ்வருபமாயிருக்கிற யோகிமநஸா யோகிகளின்மனதோடு எப்போதும் சேர்ந்திருப்ப தினுலா, த்ருசாம் கண்களுக்கு, அத்ருச்யம் அபி, புலப் படாதவற்றையும், ப்ரகடயதி நன்ருகக் காண்பிக்கிறது.

தன்னை தியானிப்பவர்களுக்கு அருள்புரியும் அம்பாளின் பாதங்களின் குணங்களில் மூன்றைக்கூறி, அந்தக் குணங்கள் பாதங்களில் இருப்பதற்கு காரணத்தை ஊஹிக்கிருர்.

ஸம்பர்க்காத்ப்ரக்ருதிகடினை: நாகி மகுடை: விபிந்தே ஸம் மோஹம்-மலைபோன்ற அக்ஞானமென்னும் இருளை அம்பாளின் பாதங்கள் போக்குகின்றன. இதைச் செய்வதற்கு அவை உறுதி யுள்ளவையாயிருக்கவேண்டுமன்ரோ? அவ்வுறுதி எங்கே கிடைத் திருக்கலாம் என்று ஆராயுங்கால் பாதங்களில் வணங்கும் தேவர் களுடைய ஸ்வர்ணமயமான கிரீடங்களோடு எப்போதும் பழகுவ தால், அவற்றிலிருந்து பெற்றிருக்கலாம் என்கிருர்.

தடை: நீஹாராத்ரே: சிசிரயதிபக்தான்-தன்னை த்யானிக்கும் அடியார்கள் உள்ளங்களை ஆநந்தத்தால் குளிரச்செய்கிற திருவடி கள் அதற்கு வேண்டிய குளிர்ச்சியை தேவியின் பிதாவாய் பனிக்கு இருப்பிடமான ஹிமவானிடமிருந்து பெற்றிருக்கலாமா?

அதிகம் அணுநா யோஹ்ருதஸா அத்ருச்யம் ப்ரகடயதி:- யோகிகள் பரமாணு பரிமாணமுள்ள தங்கள் மனத்தால் அம்பாளின் பாதங்களை தியானிப்பதால் அவற்றுக்கு ஸூக்ஷ்மமான வஸ்துக்க ளோடும் பரிசயம் ஏற்பட்டு, ஊனக்கண்ணுக்குப் புலப்படாத பொருள்களையும் பாதங்கள் காட்டவல்லவைகளாக இருக்கின்றன என்கிறார். (28)

पवित्राभ्यामम्ब प्रकृतिमृदुलाभ्यां तव शिवे
पदाभ्यां कामाक्षि प्रसभमभिभूतैः सचकितैः ।
प्रवालैरम्भोजैरपि च वनवासव्रतदशाः
सदैवारभ्यन्ते परिचरितनानाद्विजगणैः ॥ २९ ॥

*பவித்ராப்யாம் அம்ப! ப்ரக்ருதி-ம்ருதுலாப்யாம் தவ சிவே!*
*பதாப்யாம் காமாக்ஷி! ப்ரஸபம் அபிபூதை: ஸசகிதை: |*
*ப்ரவாளை: அம்போஜை: அபி ச வநவாஸ-வ்ரத-தசா:*
*ஸதைவா²² ரப்யந்தே பரிசரித-நாநா-த்விஜ-கணை:॥(29)*

அம்ப — தாயே! சிவே — மங்களஸ்வரூபியே! காமாக்ஷி! பவித்ராப்யாம்—பரிசுத்தமாயும், ப்ரக்ருதி—ஸ்வாபாவத்தினுல் ம்ருதுலாப்யாம் — மிருதுவாயும் இருக்கிற, தவ பதாப்யாம் — உன் பாதங்களால், ப்ரஸபம் — பலாத்காரமாக, அபிபூதை:— மேற்கொள்ளப்பட்டவைகளும், ஸசகிதை :— பயந்த வைகளான, ப்ரவாளை:— துளிர்களாலும், ஸதைவ— எப்போதும, பரிசரித—சுச்ரூஷை செய்யப்பட்ட, நாநாத் விஜகணை: — நாநாவித பக்ஷிகளின் கூட்டங்களையுடையவை களுமான அம்போஜை: அபி ச — தாமரைப் புஷ்பங்களாலும். வநவாஸ வ்ரத-தசா:—ஜலத்தில்வஸிப்பது என்னும் வ்ரதங்கள், ஆரப்யந்தே—ஆரம்பிக்கப்படுகின்றன.

மங்களஸ்வரூபியான தாயே! காமாக்ஷி! ஜலத்தின் மத்தியில் தாமரைகள் அழகாக மலர்ந்து, அவற்றின் மேல் ஹம்ஸங்கள் வீற்றிருக்கின்றன. இதைப்பார்த்து தேவியின் பாதங்களின் மென்மை முதலிய குணங்களுக்குத் தோற்று தாமரைகள் வந (ஜல) வாஸ விரதம் பூண்டு தவம் செய்கின்றன போல் தோன்றுகிறது. அப்படியே துளிர்களும் அவற்றுக்குத்தோற்று காட்டில் சென்று வநவாஸ வ்ரதத்தை ஆரம்பிக்கின்றன.

துளிர்களும் தாமரைகளும் தேவியின் பாதங்களுக்கு அழகி லும் காந்தியிலும் ஒப்பாகாதிருப்பதையும், அவைகள் ஜலத்திலேயே இருப்பதையும் பார்த்தால், பாதங்களின் காந்தியைப் பெறும் பொருட்டு அவைகள் 'வனவாஸவ்ரதத்தை, அனுஷ்டிப்பவை போன்றிருக்கின்றன என்கிருர். 'வந' என்பதற்கு 'ஜலம்' என்றும் 'வனம்' காடு என்றும் பொருள் உண்டு.

चिराद्दृश्या हंसैः कथमपि सदा हंससुलभं
निरस्यन्ती जाड्यं नियतजडमध्यैकशरणम् ।
अदोषव्यासङ्गा सततमपि दोषाप्तिमलिनम्
पयोजं कामाक्ष्याः परिहसति पादाब्जयुगली ॥ ३० ॥

*சிராத் த்ருச்யா ஹம்ஸை: கதம் அபி ஸதா ஹம்ஸ-ஸுலபம்*
*நிரஸ்யந்தீ ஜாட்யம் நியத-ஜட-மத்யைக-சரணம் |*
*அதோஷ-வ்யாஸங்கா ஸததம் அபி தோஷாப்தி-மலிநம்*
*பயோஜம் காமாக்ஷ்யா: பரிஹஸதி பாதாப்ஜ-யுகளீ ॥*

ஹம்ஸை — ஹம்ஸங்களால் (பரமஹம்ஸர்களால்) கதம் அபி — மிகவும் சிரமப்பட்டு, சிராத்—வெகு காலத்திற்கு பிறகு த்ருச்யா—காணக்கூடியவையாயும், ஜாட்யம்-அஜ்ஞானத்தை நிரஸ்யந்தீ — போக்குவனவாயும், அதோஷ வ்யாஸங்கா — தோஷமில்லாதவைகளுமான, காமாக்ஷ்யா: — காமாக்ஷியி னுடைய, பாதாப்ஜயுகளீ—பாதங்களாகிற இரண்டு தாமரைப் பூக்கள், ஸதா — எப்பொழுதும், ஹம்ஸ — ஹம்ஸங்களுக்கு, ஸுலபம்—எளிதில் கிடைக்கக்கூடியதும, நியத—எப்போதும் ஜடமத்ய—குளிர்ந்த ஜலத்தின் மத்தியிலேயே, ஏகசரணம்— இருப்பதும், ஸததம் அபி — எப்போதுமே, தோஷ ஆப்தி — தோஷத்தை (ஸாயங்காலத்தை) அடைவதால், மலிநம்—வாடிப் போவதுமான, பயோஜம்—தாமரையை, பரிஹஸதி—பரிகாஸம் செய்கின்றன,

(பரம) ஹம்ஸர்களால் சிரமப்பட்டு வெகு காலத்திற்குப்பின் காணத்தக்கவையும், பிறரின் ஜாட்ய (அஜ்ஞான)த்தைப் போக்கும் இயல்புள்ளவையும், தோஷ ஸம்பந்தமற்றவையுமான அம்பாளின் சரண கமலங்கள் ஹம்ஸங்களுக்கு எளியதும் எப்போதும் ஜல(ஜட)த் தோடு கூடியதும் ஸாயங்(தோஷ)காலத்தில் வாடிப்போவதுமான தாமரையை பரிஹஸிக்கிறது.

தேவியின் பாதங்களை தாமரைகளாக வர்ணித்து ஸாதாரணத் தாமரையைக்காட்டிலும் இப்பாதகமலங்கள் எப்படி சிறந்தன என்பதை சப்த வைசித்ரியங்களால் காட்டுகிறார்.

தாமரை ஹம்ஸங்களுக்கு எப்போதும் ஸுலபமாயிருக்கிறது; பதகமலங்களோ யோகிச்ரேஷ்டர்களான பரமஹம்ஸர்களாலும் யோகாதிகள் செய்தும் பெற அரியவையாயிருக்கின்றன.

'ஜடம்' என்றால் குளிர்ச்சியான ஜலம்; தாமரை எப்போதும் ஜடம் என்னும் ஜலத்தில் நடுவிலேயே இருக்கிறது; பதகமலங்களோவெனில் அண்டினோரின் ஜாட்யத்தை(அஜ்ஞானத்தை)ப்போக்கு கின்றன.

'தோஷம்' என்ற மாலை நேரத்தோடு கூடி தாமரை மூடி வாடிப்போகிறது; பதகமலங்களுக்கு தோஷத்தின் (குற்றங்களின்) ஸம்பந்தமே கிடையாது.

ஆக இக்குணவிசேஷங்களால் சரணகமலங்கள் தாமரைகளை விஞ்சி அவற்றைப் பரிஹஸிப்பன போன்று உள என்கிறார்.

सुराणामानन्दप्रबलनतया मण्डनतया
नखेन्दुज्योत्स्नाभिर्विसृमरतमःखण्डनतया ।
पयोजश्रीद्वेषव्रतरततया त्वच्चरणयो-
र्विलासः कामाक्षि प्रकटयति नैशाकरदशाम् ॥३१॥

***ஸுராணும் ஆநந்த-ப்ரபலநதயா மண்டநதயா
நகேந்து-ஜ்யோத்ஸ்நாபி: விஸ்ருமர-தம:-கண்டநதயா ।
பயோஜ-ச்ரீ-த்வேஷவ்ரதரததயா த்வச்-சரணயோர்-
விலாஸ: காமாக்ஷி! ப்ரகடயதி நைசாகர-தசாம் ॥***

காமாக்ஷி — காமாக்ஷியே! த்வத்-சரணயோ: — உன் பாதங்களின், விலாஸ: — எழிலானது, ஸுராணும் — தேவர்களுக்கு, ஆநந்த — ஆநந்தத்தை, ப்ரபலநதயா — அளிப்பதினாலும், மண்டநதயா—அலங்காரமாக இருப்பதினாலும், நக-இந்து— நகங்களாகிற சந்திரனுடைய, ஜ்யோத்ஸ்நாபி: — நிலவினால், விஸ்ருமர — படர்கிற, தம: கண்டநதயா — (அக்ஞானமென்னும்) இருளைப்போக்குவதினாலும், பயோஜ-ஸ்ரீ — தாமரையின் அழகை, த்வேஷ-வ்ரத-ரததயா — த்வேஷிப்பது என்னும் விரதத்தைக் கொண்டிருப்பதனாலும், நைசாகரதசாம்—சந்திரனுடையதான நிலைமையை, ப்ரகடயதி—வெளிப்படுத்துகிறது.

காமாக்ஷி! உன் பாதங்களின் ஸௌந்தர்யம் தேவதைகளுக்கு ஆநந்தத்தை அளிப்பதாலும், அவர்களுக்கு சிரோபூஷணமாக இருப்பதாலும், நககாந்திகளால் இருளை நீக்குவதாலும், தாமரையின் அழகை மேற்கொண்டு விளங்குவதாலும் (இக்குணங்களுள்ள) சந்திரனுடைய தன்மையையுடையதாயிருக்கிறது.

சந்திரனிடமுள்ள குணங்களெல்லாம் தேவியின் பாதங்களிலும் உள்ளன என்று வர்ணிக்கிறார்.

சந்திரன் தேவலோகத்திற்கு ஆபரணம் போலவும், அமிருத நிதியாகையால் தேவர்களுக்கு ஆநந்தத்தை மிகுதியாக அளிப்பவனுவும் இருக்கிறான். அம்பாளின் பாதங்கள் அவற்றை வணங்க வரும் தேவர்களுக்கு ஆபரணமாகவும், அவர்களின் மனோரதத்தை நிறைவேற்றி ஆநந்தமளிப்பவையாகவும் இருக்கின்றன.

சந்திரன் புறவிருளைப் போக்குவதுபோல, நகங்களிலிருந்து வெளிவரும் நிலவு போன்ற ஒளி அகவிருளைப் போக்குகிறது.

சந்திரனைக்கண்ட தாமரை வாடும்; உன் பாதங்களைப்பார்த்து அவற்றின் அழகு தங்களிடம் இல்லை என்று வருந்தி வாடா நிற்கும்.

ஆக இப் பிரகாரங்களால் தேவியின் பாதங்கள் ஒரு சந்திரனுடைய தசையைத் தங்களிடம் காட்டுபவனவாக இருக்கின்றன.

सितिम्ना कान्तीनां नखरजनुषां पादनलिन-
छवीनां शोणिम्ना तव जननि कामाक्षि नमने ।
लभन्ते मन्दारग्रथितनवबन्धूककुसुम-
स्रजां सामीचीन्यं सुरपुरपुरन्ध्रीकचभराः ॥ ३२ ॥

*ஸிதிம்நா காந்தீநாம் நகர ஜநுஷாம் பாத-நளிநச்*
*சவீநாம் சோணிம்நா தவ ஜநநி! காமாக்ஷி! நமநே |*
*லபந்தே மந்தார-க்ரதித-நவ-பந்தூக-குஸும-*
*ஸ்ரஜாம் ஸாமீசீந்யம்-ஸுரபுர-புரந்த்ரீ-கசபரா: ||*

ஜநநி—தாயே! காமாக்ஷி—காமாக்ஷி! நமநே — நமஸ்கரிக்கும் போது, ஸுரபுர-புரந்த்ரீ—தேவலோகத்து ஸ்திரீகளுடைய திரண்ட, கசபரா:—கூந்தல்கள், தவ—உன்னுடைய, நகர ஜநுஷாம்—நகங்களிலிருந்து உண்டான, காந்தீநாம்—காந்திகளினுடைய, ஸிதிம்நா — வெளுப்பினுலும். பாத-நளிந — தாமரைபோன்றபாதங்களுடைய, சவீநாம்—காந்திகளுடைய

சோணிம்நா—சிவப்பினாலும், மந்தார—மந்தாரபுஷ்பங்களோடு க்ரதித—தொடுக்கப்பட்ட, நவபந்தூககுஸும—புதியசெம்பரத்தம் புஷ்பங்களாலான, ஸ்ரஜாம்—மாலைகளின், ஸாமீசீந்யம்—ஒற்றுமையை, லபந்தே—அடைகின்றன.

தாயே காமாக்ஷி! தேவஸ்திரீகள் உன்னை வந்து வணங்கும் போது அவர்களுடைய கறுத்துத் திரண்ட கூந்தல்களில் உன் பாதகமலங்களின் சிவப்பும், நகங்களின் வெளுப்பும் விழுவதைப் பார்த்தால், மந்தாரப்பூ செம்பரத்தம்பூ இவைகளால் தொடுக்கப் பட்ட மாலையை அணிந்திருக்கிறதுபோல் இருக்கிறது.

தேவ ஸ்திரீகள் அம்பாளை வந்து வணங்கும் போது, பாதங்களுடைய சிவந்த காந்தியும், நகங்களுடைய வெளுப்பும் அவர்களுடைய கூந்தல்களில் கலந்து விழுகின்றன. அதைப் பார்த்தால் வெளுப்பான மந்தாரப் பூக்களையும் சிவந்த செவ்வரத்தம் பூக்களையும் மாறி மாறித் தொடுத்து தலைக்கு அலங்காரமாக வைத்திருப்பது போல இருக்கிறது. (32)

नखश्रीसन्नद्धस्तबकनिचितः स्वैश्च किरणैः
पिशङ्गैः कामाक्षि प्रकटितलसत्पल्लवरुचिः ।
सतां गम्यः शङ्के सकलफलदाता सुरतरु-
स्त्वदीयः पादोऽयं तुहिनगिरिराजन्यतनये ॥ ३३ ॥

*நக-ஸ்ரீ-ஸந்நத்த-ஸ்தபக-நிசித: ஸ்வைச்ச கிரணை:*
*பிசங்கை: காமாக்ஷி ! ப்ரகடித-லஸத்-பல்லவ-ருசி: |*
*ஸதாம் கம்ய: சங்கே ஸகல-பல-தாதா ஸுரதரு:*
*த்வதீய: பாதோ²யம் துஹிந-கிரி-ராஜந்ய-தநயே* (33)

துஹிந-கிரிராஜந்யதநயே—பனிமயமான, பர்வதராஜனின் குமாரியே, காமாக்ஷி—காமாக்ஷி! அயம்—இந்த, த்வதீய:—உன்னுடையதான, பாத:—பாதமானது, நக-ஸ்ரீ—நககாந்திகளால், ஸந்நத்த—ஏற்பட்ட, ஸ்தபக நிசித:—பூங்கொத்துக்கள் நிரம்பியதும், பிசங்கை:—ஸ்வர்ணவர்ணமான, ஸ்வை:—தன், கிரணை:—கிரணங்களால், ப்ரகடித — வெளிப்படுத்தப்பட்ட, லஸத்—பிரகாசிக்கும் அழகிய, பல்லவ—துளிர்களின், ருசி:—காந்தியையுடையதும், ஸதாம்—ஸாதுக்களால், கம்ய:—

அடையத்தக்கதும், ஸகல பல—எல்லா பலன்களையும், தாதா—கொடுப்பதுமான, ஸுர தரு:—கல்பக விருக்ஷம் தானோ (என்று), சங்கே—ஸந்தேஹிக்கிறேன்.

பர்வதகுமாரியே காமாக்ஷி! உன் சரண கமலங்களை கல்பக விருக்ஷம் என்று ஸந்தேஹிக்கலாம். எங்ஙனமெனில், நக காந்தியாகிற பூங்கொத்துக்கள் நிரம்பியும், ஸ்வர்ண வர்ணமான பாதங்களின் கிரணங்களால் காட்டப்பட்ட துளிர்களின் சோபையையடைந்தும், ஸாதுக்கள் ஆச்ரயிக்கத்தக்கதும், ஸகல பலன்களையும் கொடுப்பதாகவும் இருக்கிறது.

கல்பக வ்ருக்ஷத்தின் புஷ்பங்கள்போல் நகங்களுடைய வெண்மையும், துளிர்போல் சிவப்பும், மற்றும் ஸாதுக்களால் ஆச்ரயிக்கப்படுவது, ஸகல பலங்களையும் கொடுப்பது, என்ற குணங்கள் தேவியின் பாதங்களில் இருப்பதால், இவையும் ஒரு கல்பகவிருக்ஷமோ என்று ஸந்தேஹிக்கும்படியாயிருக்கிறது என்கிறார். (33)

स्फुरन्मध्ये शुद्धे नखकिरणदुग्धाब्धिपयसां
वहन्नब्जं चक्रं दरमपि च लेखात्मकतया।
श्रितो मात्स्यं रूपं श्रियमपि दधानो निरुपमां
त्रिधामा कामाक्ष्याः पदनलिननामा विजयते ॥ ३४ ॥

*ஸ்புரந் மத்யே சுத்தே நக-கிரண-துக்தாப்தி-பயஸாம்*
*வஹந் அப்ஜம் சக்ரம் தரம் அபி ச லேகாத்மகதயா |*
*ச்ரிதோ மாத்ஸ்யம் ரூபம் ச்ரியமபி ததாநோ நிருபமாம்*
*த்ரிதாமா காமாக்ஷ்யா: பத-நளிந நாமா விஜயதே !!*

நக-கிரண—நகங்களின் கிரணங்களாகிற, துக்த-அப்தி—க்ஷீரஸமுத்ரத்தின், பயஸாம்—ஜலங்களின், சுத்தே மத்யே—சுத்தமான நடுவில், ஸ்புரந்—விளங்குகிறதாயும், லேகாத்மகதயா—ரேகை ரூபமாக, அப்ஜம்—தாமரையையும், சக்ரம்—சக்ரத்தையும, தரம் அபிச—சங்கத்தையும், வஹந்—வஹிக்கிறதாயும், மாத்ஸ்யம் ரூபம்—மத்ஸ்ய ரூபத்தை, ச்ரித:—அடைந்ததாயும், நிருபமாம்—ஒப்பற்ற, ச்ரியம் அபி—காந்தியையும் ததாந:—அடைந்ததாயுமிருக்கிற, காமாக்ஷ்யா:—காமாக்ஷியினுடைய பதநளிந-நாமா—பதகமலங்கள் என்று பெயர்கொண்ட, த்ரிதாமா-மஹாவிஷ்ணு, விஜயதே—விளங்குகிறார்.

நகச்சோதி என்னும் பாற்கடலின் மத்தியில் இலங்குவதும் ரேகாரூபமான சங்கம் சக்ரம் தாமரை இவற்றைத்தரிப்பதும், மத்ஸ்யரூபத்தை அடைந்ததும், ஒப்பற்ற காந்தியை யடைந்திருப்பதுமான காமாக்ஷியின் பாதகமலங்கள் என்று பெயர்கொண்ட மஹாவிஷ்ணு விளங்குகிறார்.

மஹாவிஷ்ணுவிடமுள்ள விசேஷங்கள் தேவியின் பாதங்களில் இருக்கிறபடியால், அவற்றை மஹாவிஷ்ணு என்று சொல்லலாம் என்று உத்ப்ரேக்ஷிக்கிறார்.

க்ஷீரஸமுத்திரத்தின் நடுவில்விளங்கும் விஷ்ணுபோல், பாதங்கள் நகங்களிலிருந்து கிளம்பும் வெண்மையான கிரணஸமூஹத்தின் நடுவில் இருக்கின்றன. அவர் சங்கம் சக்ரம் பத்மம் முதலியவற்றை பூஷணமாகவும், ஆயுதமாகவும், தரிப்பதுபோல, இவை அவற்றை சங்ரரேகை, சக்ரரேகை, பத்மரேகை என்று லோகேச்வரர்களுக்குச் சொல்லப்பட்ட ரேகாரூபத்தினால் அலங்காரமாகத் தரிக்கின்றன. அவர் லக்ஷ்மியை அடைந்திருப்பதுபோல, பாதங்கள் காந்தி என்னும் லக்ஷ்மியைப் பெற்றிருக்கின்றன. (34)

वषट्कुर्वन् माञ्जीरजकलकलैः कर्मलहरी-
हवींषि प्रोद्दण्डं ज्वलति परमज्ञानदहने ।
महीयान् कामाक्षि स्फुटमहसि जोहोति सुधियां
मनोवेद्यां मातस्तव चरणयज्वा गिरिसुते ॥ ३५ ॥

*வஷட்-குர்வந் மாஞ்ஜீரஜ-கலகலை:கர்ம-லஹரீ—*
*ஹவீம்ஷி ப்ரோத்தண்டம் ஜ்வலதி பரம-ஞான-தஹநே!*
*மஹீயாந் காமாக்ஷி! ஸ்புட-மஹஸி ஜோஹோதி ஸுதியாம்*
*மநோ-வேத்யாம் மாதஸ்-தவ சரண-யஜ்வா கிரிஸுதே!*

மாத:—தாயே! கிரிஸுதே—பார்வதி! காமாக்ஷி—காமாக்ஷி! மஹீயாந்—சிரேஷ்டனை, தவ—உன்னுடைய, சரணயஜ்வா—பாதமென்கிற யாகம் செய்பவன், மாஞ்ஜீரஜ—சிலிகைகளிருந்து உண்டாகும், கலகலை:—சப்தங்களால், வஷட்-குர்வந்—வஷட்காரத்தைச் செய்துகொண்டும், ஸுதியாம்—புத்திமான்களுடைய, மநோவேத்யாம்—மனம் என்னும் மேடையில், ஸ்புட-மஹஸி—அதிகக் காந்தியுள்ளதும், ப்ரோத்தண்டம்—கொழுந்துவிட்டு, ஜ்வலதி—எரிந்துகொண்டிருக்கிறதுமான, பரமஞான-

தஹனே—உத்தம ஞானம் என்னும் அக்னியில், கர்ம-லஹரீ—கர்மங்களின் வரிசை என்னும், ஹவிஷ்மி—ஹவிஸ்ஸுகளை, ஜோஹோதி—ஹோமம செய்கிறுன்.

தாயே காமாக்ஷி! உன்னுடைய பாதங்களென்னும் சிறந்த யஜமானன் கால் ஆபரணங்களின் ஒலியாகிற மந்த்ரோச்சாரணத்தைச் செய்துகொண்டு, ஞானவான்களுடைய மனமென்னும் வேதியில் அதிக ஒளியுடன் கொழுத்துவிட்டு எரிந்துகொண்டிருக்கும் உத்தம ஞானம் என்னும் அக்கினியில் தன் கர்மங்களாகிற ஹவிஸ்ஸை ஹோமம் செய்கிறுன்.

தேவியை உபாஸிப்பவர்களுடைய மனதே வேதி அல்லது அக்னிகுண்டம்: ஞானமே அக்னி; கர்மங்களே ஹோமம் செய்யப் படும் த்ரவ்யம்; தேவியின் பாதங்களே யஜ்ஞம் செய்யும் யஜமானன்; பாதங்களிலுள்ள ஆபரணங்களின் ஒலிகளே வஷட்காரம் முதலிய மந்த்ரோச்சாரணம். அதாவது தேவியின் பாதங்கள் ஆச்ரயித்தவர்களுடைய கர்மங்களை யெல்லாம் போக்கி ஞானமென்னும் அக்னி-யை ஜ்வலிக்கும்படி செய்கின்றன. " ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुतेऽर्जुन " (ஜ்ஞானாக்நி: ஸர்வ-கர்மாணி பஸ்மஸாத்-குருதே அர்ஜுன) என்று கீதையில் கூறப்படுவதே இதற்கு மூலம். (35)

महामन्त्रं किञ्चिन्मणिकटकनादैरिव जप-
न्क्षिपन्दिक्षु स्वच्छं नखरुचिमयं भास्मनरजः ।
नतानां कामाक्षि प्रकृतिपटुरुच्चाट्य ममता-
पिशाचीं पादोऽयं प्रकटयति ते मान्त्रिकदशाम् ॥ ३६ ॥

*மஹா-மந்த்ரம் கிஞ்சித் மணி-கடக-நாதை: இவ ஜபந்*
*க்ஷிபந் திக்ஷு ஸ்வச்சம் நக-ருசி-மயம் பாஸ்மந்-ரஜ: |*
*நதாநாம் காமாக்ஷி! ப்ரக்ருதி-படு: உச்சாட்ய மமதா—*
*பிசாசீம் பாதோ²யம் ப்ரகடயதி தே மாந்த்ரிக—தசாம்*

காமாக்ஷி—காமாக்ஷியே! மணிகடக—ரத்னச்சிலம்புகளின், நாதை:—சபதங்களால், கிஞ்சித் மஹாமந்த்ரம்—ஏதோ ஒருமஹா மந்த்ரத்தை, ஜபந்இவ—ஜபிப்பது போலவும், திக்ஷு—திக்குகளில் நகருசிமயம்—நககாந்தி ரூபமான, ஸ்வச்சம்—சுத்தமான, பாஸ்மநரஜ:—விபூதியை, க்ஷிபந் இவ—எறிவதுபோலவும் இருப்பதும், ப்ரக்ருதி—இயற்கையிலேயே, படு:—ஸாமர்த்யமுள்ளதுமான,

தே—உன்னுடைய, அயம்பாத:—இந்தப் பாதம், நதாநாம்—வணங்குகிறவர்களுடைய, மமதா பிசாசிம்—மமதை என்னும் பிசாசை, உச்சாட்ய—விரட்டி (அதனால்), மாந்த்ரிகதசாம்—மந்திரவாதியின் நிலைமையை, ப்ரகடயதி—வெளிப்படுத்துகிறது.

காமாக்ஷி! இயற்கையிலேயே ஸாமர்த்தியமுள்ள உன் பாதங்கள் உன்னை வணங்குவோர்களின் மமதைஎன்னும் பிசாசை ஓட்டும் விஷயத்தில் ஒரு மந்திரவாதிபோல் இருக்கின்றன. ரத்னச்சிலம்புகள் ஒலிப்பது அவன் மந்திரத்தை ஜபிப்பதுபோல் இருக்கிறது; எல்லா திக்குக்களிலும் வெளுத்த நககாந்திகள் பரவும்போது அவன் விபூதியை எறிவதுபோல இருக்கிறது.

தேவியின் பாதங்களில் வணங்குவோர்களிடமிருந்து பிசாசு போன்று விடாமல் பிடித்துக்கொண்டிருக்கும் அஹங்கார மமகாரங்கள் விலகிப்போகின்றன. அந்தப் பிசாசை விரட்டும் விஷயத்தில் பாதங்கள் மந்திரவாதி போன்றுள. கல்லிழைத்த நூபுரங்கள் சப்திப்பது மந்திரவாதியின் மஹாமந்திர ஜபம் போலவும நகங்களின் காந்தி அபிமந்திரித்து அவன் போடும் விபூதி போலவும் உள்ளது என்கிறார். (36)

उदिते बोधेन्दौ तमसि नितरां जग्मुषि दशां
दरिद्रां कामाक्षि प्रकटमनुरागं विदधती ।
सितेनाच्छाद्याङ्गं नखरुचिपटेनांघ्रियुगली-
पुरन्ध्री ते मातः स्वयमभिसरत्येव हृदयम् ॥ ३७ ॥

*உதிதே போதேந்தௌ தமஸி நிதராம் ஜக்முஷி தசாம்*
*தரித்ராம் காமாக்ஷி ப்ரகடம் அநுராகம் விதததீ |*
*ஸிதேந ஆச்சாத்ய அங்கம் நக-ருசி-படேந அங்க்ரி-யுகளீ*
*புரந்த்ரீ தே மாத:! ஸ்வயம் அபிஸரத்யேவ ஹ்ருதயம்*

மாத:—தாயே! காமாக்ஷி—காமாக்ஷி! போதேந்தௌ—ஞானமென்னும் சந்திரன், உதிதே—உதயமாகி, தமஸி—அஞ்ஞான இருள், நிதராம்—மிகவும், தரித்ராம் தசாம்—தரித்ர நிலையை ஜக்முஷி—அடைந்தபொழுது, அநுராகம்—காதலை, ப்ரகடம் விதததீ-வெளிப்படையாகக்காட்டுகிறவளாய், ஸிதேந-வெளுப்பான, நகருசிபடேந—நகங்களின் காந்தி என்னும வஸ்திரத்தால், அங்கம்—சரீரத்தை, ஆச்சாத்ய—மூடிக்கொண்டு, தே—உன்னு

டைய, அங்க்ரி-யுகளீ—இரண்டு பாதங்கள் என்னும், புரந்த்ரீ —ஸ்திரீயானவள், ஹ்ருதயம்—ஹ்ருதயத்தை, ஸ்வயம் ஏவ—தானகவே, அபிஸரது—தேடிச்செல்லட்டும்.

தாயே காமாக்ஷி! ஞானமென்னும் சந்திரன் உதித்து அஞ்ஞானமென்னும் இருள் மிகவும் ஹீநதசையை அடைந்திருக்கும் போது உன்னுடைய பாதங்களாகிற காமினீ பாதங்களின் சிவப்பு காந்திரூபமான தன் ஆசையை வெளியிட்டுக்கொண்டு, நககாந்தியாகிற வெளுப்பு வஸ்திரத்தால் தன் சரீரத்தை மூடிக்கொண்டு என் ஹிருதயத்தை நோக்கி ஒரு 'அபிஸாரிகா' ஸ்திரீபோல் தானகவே செல்லட்டும்.

தேவியின் பாதங்களை கல்பக விருக்ஷமாகவும், மஹாவிஷ்ணுவாகவும், யஜ்ஞம் செய்யும் யஜமானனுகவும், மந்திரவாதியாகவும் வர்ணித்துவிட்டு இதில் தன் காதலனைத் தேடிச்செல்லும் 'அபிஸாரிகா' ஸ்திரீயாக வர்ணிக்கிறுர்.

சந்திரன் உதித்து இருள் நீங்கியதும் காதலால் தூண்டப்பட்டவளாய் தன்னை பிறர் பார்த்து அறிந்துகொள்ளாவண்ணம் ஒரு வஸ்திரத்தால் தன்னை மறைத்துக்கொண்டு தன் பிராண நாயகனைத் தேடிச்செல்லும் ஒரு ஸ்திரீக்கு 'அபிஸாரிகை' என்று பெயர். அவ்விதமே இங்கு என் ஹ்ருதயமென்னும் காதலன் தானகவே உன்னை அடையமாட்டாணுகையால், நீ தேடப்புறப்படவேண்டும். இங்கு ஞானேதயமே சந்திரோதயம்; அஜ்ஞான நாசமே இருள் நீங்குவது; கால்களின் சிவந்த காந்தியே காதல்; நகங்களிலிருந்து வெளிவரும் வெண்மையான காந்திபடலமே வஸ்திரம் என்று வர்ணிக்கிறுர். (37)

दिनारम्भः संपन्नलिनविपिनानामभिनवो
विकासो वासन्तः सुकवि पिकलोकस्य नियतः ।
प्रदोषः कामाक्षि प्रकटपरमज्ञानशशिन-
श्चकास्ति त्वत्पादस्मरणमहिमा शैलतनये ॥ ३८ ॥

*திநாரம்ப: ஸம்பந்-நளிந விபிநாநாம் அபிநவோ*
*விகாஸோ வாஸந்த: ஸு கவி-பிகலோகஸ்ய நியத: |*
*ப்ரதோஷ: காமாக்ஷி! ப்ரகடபரமஞான-சசிந:*
*சகாஸ்தி த்வத்பாதஸ்மரண-மஹிமா சைலதநயே!*

சைலதநயே—பர்வதகுமாரியே! காமாக்ஷி—காமாக்ஷி! த்வத் பாத-உன்பாதங்களை, ஸ்மரண-த்யானம் செய்வதின், மஹிமா

—மஹிமையானது, ஸம்பத்—ஐச்வர்யமாகிற, நளிநவிபிநாநாம்—தாமரைக்காடுகளுக்கு, அபிநவ:—புதுவிதமான, திநாரம்ப:—காலைநேரமாகவும், ஸுகவி—நல்லகவிகளாகிற, பிகலோகஸ்ய—குயில்கூட்டங்களுக்கு, நிறத:—எப்போதும் இருக்கும், வாஸந்த:—வஸந்தருதுவின், விகாஸ:—தோற்றமாகவும், ப்ரகட—தெளிவாய்(பூர்ணமாய்), பரமஞான—உத்தமமான ஞானம் என்னும், சசிந:—சந்திரனுக்கு, ப்ரதோஷ:—ஸாயங்காலமாயும், சகாஸ்தி—விளங்குகிறது.

பர்வதகுமாரியே! காமாக்ஷி! உன் பாதங்களை தியானிப்பதின் மஹிமை ஐச்வர்யமாகிற தாமரைக் காட்டுக்குப் புதுவகையான ஒரு பகலின் ஆரம்பமாகவும், இன்சொல் கவிகளென்கிற குயில் கூட்டங்களுக்கு எப்போதும் இருக்கக்கூடிய ஒரு வஸந்தருதுவின் விகாஸமாகவும், உத்தமமான ஞானமென்கிற பூர்ணசந்திரனுக்கு மாலைப்போதாகவும் விளங்குகிறது.

சூரியனைக்கண்ட தாமரைகள் மலர்வதுபோல் தேவியின் பாதங்களை நினைத்ததுமே ஸகல ஐச்வர்யங்களும் மகிழ்ச்சியுடன் வந்து அடைகின்றன; வஸந்தகாலத்தைக்கண்டு மகிழ்வுற்று குயில்கள் இனிமையாகக் கூவுவதுபோல, பாதங்களை தியானித்து சிறந்த கவிகள் உத்தமமான காவியங்களால் தேவியைத் துதிக்கிறார்கள்; ஸாயங்காலம் வந்ததும் பூர்ணசந்திரன் தோன்றுவதுபோல, தேவியின் பாதங்களை நினைத்ததுமே களங்கமற்ற தெளிவான ஞானம் உதிக்கிறது. (38)

धृतच्छायं नित्यं सरसिरुहमैत्रीपरिचितं
निधानं दीप्तीनां निखिलजगतां बोधजनकम् ।
मुमुक्षूणां मार्गप्रथनपटु कामाक्षि पदवीं
पदं ते पादङ्गीं परिकलयते पर्वतसुते ॥ ३९ ॥

*த்ருதச்சாயம் நித்யம் ஸரஸிருஹமைத்ரீபரிசிதம்*
*நிதாநம் தீப்தீநாம் நிகிலஜகதாம் போதஜநகம் |*
*முமுக்ஷூணாம் மார்க்கப்ரதநபடு காமாக்ஷி! பதவீம்*
*பதம் தே பாதங்கீம் பரிகலயதே பர்வதஸுதே !*

பர்வதஸுதே—பர்வதகுமாரியே! காமாக்ஷி—காமாக்ஷீ, தே பதம்-உன்பாதம், நித்யம்-எப்பொதும், த்ருதச்சாயம்-சோபையையுடையதாயும், ஸரஸிருஹ-தாமரைகளின், மைத்ரீ-ஒற்று

மையோடு, பரிசிதம்—கூடியதும், தீப்திநாம்—கீர்த்திகளுக்கு (ஒளிக்கு), நிதாநம்—காரணமாயும், நிகிலஜகதாம்—எல்லா உலகுக்கும், போதஜநகம்—ஞானத்தை(விழிப்பை) உண்டுபண்ணு வதாயும், முமுக்ஷூணாம்—மோக்ஷத்தையடைய விரும்புகிறவர் களுக்கு, மார்க்கப்ரதந—வழிகாட்டுவதில் படு—ஸாமர்த்யமுள்ள தாயுமிருந்துகொண்டு, பாதங்கிம்—ஸூர்யனுடையதான, பதவீம்—நிலைமையை, பரிகலயதே—அடைகிறது.

பர்வதராஜகுமாரியே! காமாக்ஷி! எப்போதும் சாயையோடு கூடியதாயும், தாமரைகளின் ஸ்நேஹத்தைப் பெற்றதாயும், ஒளிக்குக் காரணமாயும், ஸகலலோகங்களுக்கும் ஞானத்தை உண்டுபண்ணு வதாயும், மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு ஸரியான மார்க்கத் தைக் காட்டவல்லதாயுமிருக்கிற உன் பாதங்கள் ஸூர்யனுடைய தன்மை அடைந்ததாக இருக்கிறது,

இதில் ஸூர்யனுடைய நிலைமை தேவியின் பாதங்களில் காட்டப்படுகிறது. ஸூரியன் 'சாயா' என்ற தன் மனைவியுடன் கூடி யிருக்கிறான்; பாதங்கள் எப்போதும் ('சாயை') காந்திபெற்றவை களாய் விளங்குகின்றன. ஸூர்யனுக்குத் தாமரைகளின் மைத்ரீ (ஸ்நேஹம்) இருக்கிறது; பாதங்கள் தாமரைபோலிருப்பதால் பாதங் களுக்கு அவற்றின் மைத்ரீ (ஒற்றுமை) இருக்கிறது ஸூர்யன் தீப் தியை (கீர்த்தியை) அளிக்கின்றான். ஸூர்யன் உதித்ததும் உலகம் விழித்துக்கொள்ளுகிறது; பாதங்கள் மனதில் தோன்றியதும் (போதம்) ஞானம் உண்டாகிறது. மோக்ஷத்தைப் பெறுபவர்கள் ஸூர்ய மண்ட லத்தைத் தாண்டிச் செல்லுகிறார்கள் என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன; தேவியின் பாதங்கள் தன்னை உபாஸிப்பவர்களுக்கு மோக்ஷமார்க்கத்தைக் காட்டுகின்றன. (39)

शनैस्तीर्त्वा मोहाम्बुधिमथ समारोढुमनसः
क्रमात्कैवल्याख्यां सुकृतिसुलभां सौधवलभीम् ।
लभन्ते निःश्रेणीमिव झटिति कामाक्षि चरणम्
पुरश्चर्याभिः ते पुरमथनसीमन्तिनि जनाः ॥ ४० ॥

***சனைஸ்தீர்த்வா மோஹாம்புதிம் அத ஸமாரோடு-மநஸ:***
***க்ரமாத் கைவல்யாக்யாம் ஸுக்ருதி-ஸுலபாம் ஸௌத வலபீம் |***
***லபந்தே நிச்ரேணீம் இவ ஜடிதி காமாக்ஷி! சரணம்***
***புரச்சர்யாபி: தே புரமதந-ஸீமந்திநி! ஜநா:***

புரமதநஸீமந்தினி—திரிபுரமெரித்தோன் தேவியே! காமாக்ஷி —காமாக்ஷி! சநை:-மெள்ள மெள்ள, மோஹாம்புதிம்—அஜ்ஞானமென்னும் கடலை, தீர்த்வா—கடந்து, அத—அதன் பின், ஸுக்ருதிஸுலபம்—புண்ணியவான்களுக்கு அடைய எளிதான, கைவல்யாக்யாம்—கைவல்யம் என்று பெயருள்ள, ஸௌதவலபீம்-மேல்மாடியை, க்ரமாத்:-கிரமமாக, ஸமாரோடுமநஸ:— ஏறவிரும்பும் மனமுள்ள, ஜநா:—ஜநங்கள், நிச்ரேணீம் இவ— ஏணிபோன்றிருக்கிற. தே சரணம்-உன்பாதத்தை, புரச்சர்யாபி: —ஜபம் பூஜை முதலியவைகளால், ஜடிதி—சீக்கிரமாக, லபந்தே —அடைகிறார்கள்.

முப்புரமெரித்தோன் தேவியே! காமாக்ஷி! மெள்ளமெள்ள அஜ்ஞானமென்னும் கடலைத்தாண்டி அதன்பின் புண்யவான்களுக்கு அடைய எளிதான கைவல்யமென்கிற சிறந்த உப்பரிகையில் கிரமமாக ஏற விரும்பும் மனமுள்ள ஜனங்கள் ஏணிபோன்ற நின் பாதத்தை ஜபம் பூஜை முதலியவற்றால் சீக்கிரத்தில் அடைகிறார்கள்

அஜ்ஞானமென்னும் ஸமுத்திரத்தைத் தாண்டி மோக்ஷமென்னும் மாளிகையின் மேல்மெத்தையில் ஏற விரும்பும் மானிடர்களுக்கு பரதேவதையின் பாதங்கள் ஒரு ஏணிபோல இருப்பதால், எல்லோரும் புரச்சர்யைகளால் ஜபம் பூஜை முதலியவற்றால் அவற்றை அடைகிறார்கள். (40)

प्रचण्डार्तिक्षोभप्रमथनकृते प्रातिभसरि-
त्प्रवाहप्रोद्दण्डीकरणजलदाय प्रणमताम् ।
प्रदीपाय प्रौढे भवतमसि कामाक्षि चरण-
प्रसादौन्मुख्याय स्पृहयति जनोयं जननि ते ॥ ४१ ॥

*ப்ரசண்டார்த்தி-க்ஷோப ப்ரமதந-க்ருதே ப்ராதிப-ஸரித்-*
*ப்ரவாஹ-ப்ரோத்தண்டீ-கரண-ஜலதாய ப்ரணமதாம் |*
*ப்ரதீபாய ப்ரௌடே பவ-தமஸி காமாக்ஷி சரண-*
*ப்ரஸாதௌந்முக்யாய ஸ்ப்ருஹயதி ஜநோயம் ஜநநி தே*

ஜநநி—தாயே! காமாக்ஷி—காமாக்ஷி! ப்ரணமதாம்—நமஸ்கரிப்பவர்களுடைய, ப்ரசண்ட—கடுமையான, ஆர்த்தி—கஷ்டத்தின், க்ஷோப-கலக்கத்தை, ப்ரமதந-க்ருதே-நாசம் செய்

வதாயும், ப்ராதிப-ப்ரதிபை (புத்தி) என்னும், ஸரித்-ப்ரவாஹ-நதியின் பிரவாஹத்தை, ப்ரோத்தண்டசரண-அதிகப்படுத்தும், ஜலதாய-மேகமாயும், ப்ரௌடே-பலமான, பவ-ஸம்ஸாரமென்னும், தமஸி-இருட்டில், ப்ரதீபாய-பெரிய விளக்காயுமிருக்கிற, தே-உன்னுடைய, சரண-பாதங்களின், ப்ரஸாத - அனுக்ரஹத்தை, ஔந்முக்யாய - அடைவதற்கு, அயம் ஜந:-இந்த மனிதன் (நான்), ஸ்ப்ருஹயதி-ஆசைப்படுகிறான்.

தாயே! காமாக்ஷி! வணங்குவோர்களின் கொடிய கஷ்டத்தின் கலக்கத்தை அழிக்கவல்லவையும், 'ப்ரதிபை' புத்தி) என்னும் ஆற்றின் ப்ரவாஹத்தை கரைபுரண்டு செல்லும்படி பெருக்குவதில் மேகம்போன்றவையும், ஸம்ஸாரமென்னும் பேரிருளை நீக்கவல்ல தீபம் போன்றவையுமான உன் பாதங்களின் அருளை அடைவதற்கு நான் விரும்புகிறேன்.

அம்பிகையின் பாதங்களை வணங்குவோர்களுக்கு ஸகல துக்கங்களும் விலகிப்போவதுடன் அஜ்ஞானம் நீங்கி ஞானமும் உண்டாகிறது என்கிறார். (41)

**मरुद्भिः संसेव्या सततमपि चाञ्चल्यरहिता**
**सदाऽऽरुण्यं यान्ती परिणतिदरिद्राणसुषमा ।**
**कुणोत्कर्षान्मञ्जीरजकलकलैस्तर्जनपटुः**
**प्रवालं कामाक्ष्याः परिहसति पादाब्जयुगली ॥ ४२ ॥**

*மருத்பி: ஸம்ஸேவ்யா ஸததம் அபி சாஞ்சல்ய-ரஹிதா*
*ஸதாருண்யம் யாந்தீ பரிணதி-தரித்ராண-ஸுஷமா*
*குணோத்கர்ஷாத் மஞ்ஜீரஜ-கலகலை: தர்ஜந-படு:*
*ப்ரவாளம் காமாக்ஷ்யா: பரிஹஸதி பாதாப்ஜ-யுகளீ ॥*

ஸததம்-எப்பொழுதும், மருத்பி:-மருத்துக்களால், ஸம்ஸேவ்யா-ஸேவிக்கப்பட்டவைகளாயிருந்த போதிலும், சாஞ்சல்யரஹிதா - அசைவில்லாததாயும், ஸதா - எப்போதும், ஆருண்யம்-சிவப்பு வர்ணத்தை, யாந்தீ-அடைவதாயும் (அப்படி இருந்தபோதிலும்), பரிணதி - மாறுகிற விஷயத்தில், தரித்ராண-தரித்ரத்தையடைந்த, ஸுஷமா-காந்தியையுடையதாயும், அதாவது மாறுதல் இல்லாத சோபையையுடையதாயும் இருக்கிற, காமாக்ஷ்யா: - காமாக்ஷியினுடைய, பாதயுகளீ-

இரண்டு பாதங்களும், மஞ்ஜீரஜ-பீலிகளிலிருந்து உண்டான, கலகலை:-சப்தங்களால், தர்ஜந-படு: - அதட்ட ஸாமர்த்திய முள்ளதாயிருந்து கொண்டு, ப்ரவாளம்—தளிர்களை, குணோத்-கர்ஷாத் - (தங்கள்) குணங்களின் மேன்மையால், பரிஹஸதி— பரிஹஸிக்கின்றன.

காமாக்ஷியின் சரணகமலங்கள் மருத்துக்களால் எப்போதும் ஸேவிக்கப்படுக்கிறவைகளாயிருந்தும் சஞ்சலமற்றவைகளாயும்; எப்போதும் சிவந்த நிறமுள்ளவையாயும், மாறுதலையடையாத சோபையையுடையவைகளாயுமிருக்கின்றன. அவை தங்களிட முள்ள 'கலீர் கலீர்' என்கின்ற சப்தங்களால் விரட்ட ஸாமர்த்திய முள்ளவைகளாய், தளிரைப் பரிஹாஸம் செய்கிறது. (தளிர் சில சமயங்களிலே மருத்துக்களால் காற்றினால்) ஸேவிக்கப்படுகிறதா யும், அப்போது அசையும் தன்மையுள்ளதாயும், முதலில் மட்டும் சிவப்பு வர்ணத்தையுடையதாயும் பின்பு மாறுதலையடையும் காந்தி யையுடையதாயுமிருக்கிறது என்பது உணரத்தக்கது.

அம்பிகையின் பாதங்களில் அழகிய தளிர்களின் குணங்க ளும் அவற்றில் இல்லாத அதிக குணங்களும் இருக்கிறபடியால், அந்த குணங்களையும் விஞ்சி பரிஹஸிப்பனபோன்று உள என்கிறார். காற்றடித்தால் தளிர் அசையும்; தேவியின் பாதங்களோ வாயுபக வானால் ஸேவிக்கப்படுவதோடு கூட ஸ்திரமாய் சஞ்சலமற்று உள் ளன. தளிருக்குக் காந்திகொஞ்ச நாட்களே; இவற்றுக்கோ மனோ ஹரமான சிவப்பு வர்ணம் எப்போதும் இருப்பது. மாறுதல் இல்லாத காந்தியோடு கூடியவை. (42)

जगद्रक्षादक्षा नलिनरुचिशिक्षापटुतरा
सुरैर्नम्या रम्या सततमपिगम्या बुधजनैः ।
द्वयी लीलालोला श्रुतिषु सुरपालादिमुकुटी-
तटीसीमाधामा * तव जयति कामाक्षि पदयोः ॥ ४३ ॥

*ஜகத்-ரக்ஷா-தக்ஷா நளிந-ருசி-சிக்ஷா-படு-தரா*
*ஸுரை: நம்யா ரம்யா ஸததம் அபிகம்யா புத ஜனை: |*
*த்வயீ லீலா லோலா ச்ருதிஷு ஸுர-பாலாதி-முகுட-*
*தடீ-ஸீமா தாமா தவ ஜயதி! காமாக்ஷி! பதயோ:!!*

ஜநநி - தாயே! காமாக்ஷி - காமாக்ஷி! தவ பாதயோ:-உன் பாதங்களுடைய, த்வயீ-இரண்டானது, ஜகத்-ரக்ஷா-உலகங்களை ரக்ஷிப்பதில், தக்ஷா-ஸாமர்த்திய முள்ளதாயும், நளிந-ருசி-தாமரையின் காந்திக்கும், சிக்ஷா-படுதரா-கற்பிக்கும் ஸாமர்த்தியமுள்ளதாயும், ஸுரை:-தேவதைகளால், நம்யா-வணங்கப்படுகிறதாயும், ரம்யா-அழகுள்ளதாயும், புதஜநை:-புத்திமான்களால், ஸததம் - எப்போதும், அபிகம்யா - அடையத்தகுந்ததாயும், ச்ருதிஷு-வேதங்களில், லீலாலோலா-விளையாட்டாக ஸஞ்சரிப்பதாயும், ஸுரபாலாதி-இந்திரன் முதலானவர்களுடைய, முகுட தடீ-கிரீடங்களுக்கு, ஸீமாதாமா-எல்லை ஸ்தானமாயிருப்பதாயும், விஜயதி-விளங்குகிறது.

காமாக்ஷி! உன் இரண்டு பாதங்களும் அழகுள்ளவைகளும், உலகங்களை ரக்ஷிக்கும் வல்லமையுள்ளவையும், தாமரைகளின் சோபையையும் மீறுவதும், தேவதைகளால் வணங்கப்படுகிறதும் அழகுள்ளதும், புத்திமான்களால் எப்போதும் அடையத்தகுந்ததும், வேதங்களில் விளையாட்டாக ஸஞ்சரிப்பதும் இந்திரன் முதலானோர்களின் கிரீடங்களில் நிலவுவனவாயும் இருக்கின்றன. (43)

गिरां दूरौ चोरौ जडिमतिमिराणां कृतजग-
त्परित्राणौ शोणौ मुनिहृदयलीलैकनिपुणौ ।
नखैः स्मेरौ सारौ निगमवचसां खण्डितभव-
ग्रहोन्मादौ पादौ मम मनसि कामाक्षि कलये ॥ ४४ ॥

***கிராம் தூரௌ சோரௌ ஜடிம-திமிராணாம் க்ருத-ஜகத்-பரித்ராணௌ சோணௌ முநி-ஹ்ருதய-லீலைக-***
***நிபுணௌ ।***
***நகை: ஸ்மேரௌ ஸாரௌ நிகம வசஸாம் கண்டித-பவ-க்ரஹோந்மாதௌ பாதௌ மம மனஸி காமாக்ஷி! கலயே ।***

காமாக்ஷி-காமாக்ஷியே! கிராம்-சொற்களுக்கு, தூரௌ-எட்டாதவைகளாயும், ஜடிம-திமிராணாம் - புத்தியில்லாமை என்னும் இருட்டை, சோரௌ - அபஹரிப்பவைகளாயும், க்ருத-ஜகத்-பரித்ராணௌ - உலகங்களை ரக்ஷிப்பவைகளாயும், சோணௌ-சிவந்தவைகளாயும், முநிஹ்ருதய-முனிவர்களின் மனதில், லீலைக-நிபுணௌ - விளையாடுவதில ஸாமர்த்தியமுள்ளவைகளாயும், நகை:-நகங்களால், ஸ்மேரௌ-சிரிப்

பவைகளாயும், நிகம-வசஸாம் – வேதவாக்குகளுடைய, ஸாரெள - ஸாரமானவைகளாயும், கண்டித - போக்கடிக்கப் பட்ட, பவ–ஸம்ஸாரமாகிற, க்ரஹோந்மாதெள-பிசாசின் சேஷ்டையை உடையவைகளுமான, பாதெள-பாதங்களை, மம மநஸி-என் மனதில், கலயே–நிறுத்திக்கொள்ளுகிறேன், (தியானிக்கிறேன்)

காமாக்ஷியே! வாக்குக்களுக்கு எட்டாததும், அஜ்ஞானம் என்னும் இருளைப் போக்குவதும், உலகங்களை ரக்ஷிப்பதும், சிவந்ததும், முனிவர்களின் மனதில் ஸஞ்சரிப்பதில் ஸாமர்த்தியமுள்ளதும், நககாந்திகளால் புன்சிரிப்புள்ளவைகளும், ஆகமவசனங்களின் ஸாரமாயிருப்பதும், பிறவியென்னும் துஷ்ட க்ரஹத்தின் சேஷ்டையை அடக்குகிறவைகளுமான உன் பாதங்களை மனதில் தியானம் செய்கிறேன்.

ஜடிமதிமிராணும் சோரெள-அஜ்ஞானமென்னும் இருளை இருந்த இடம் தெரியாமல் அகற்றிவிடுகின்றன தேவியின் பாதங்கள். முனிஹ்ருதய லீலைக நிபுணெள-முனிவர்களின் மனதில் மட்டும் அப்பாதங்கள் தியானத்திற்கு விஷயமாகக் காணப்படுமேயல்லது, மற்றவர்கள் அவைகளைக் காணமுடியாது. (44)

अविश्रान्तं पङ्कं यदपि कलयन्यावकमयं
निरस्यन्कामाक्षि प्रणमनजुषां पङ्कमखिलम् ।
तुलाकोटिद्वन्द्वं दधदपि च गच्छन्नतुलतां
गिरां मार्गं पादो गिरिवरसुते लङ्घयति ते ॥ ४५ ॥

*அவிச்ராந்தம் பங்கம் யதபி கலயந் யாவக-மயம்*
*நிரஸ்யந் காமாக்ஷி ப்ரணமனஜுஷாம் பங்கமகிலம்*
*துலாகோடி த்வந்த்வம் ததத்பி ச கச்சந்நதுலதாம்*
*கிராம் மார்கம் பாதோ கிரிவரஸுதே லங்கயதி தே!*

கிரிவரஸுதே–பர்வதராஜபுத்ரியே! காமாக்ஷி-காமாக்ஷி! தே பாத: - உன் பாதம், அவிச்ராந்தம் – இடைவிடாமல், யாவக-மயம் - செம்பஞ்சுக்குழம்புருபமான, பங்கம் -சேற்றை, யதபி கலயந்–அடைந்திருந்தபோதிலும, ப்ரணமந-ஜுஷாம்–வணங்குபவர்களுடைய, அகிலம் பங்கம்-எல்லாச்சேற்றையும் (பாபத்தையும்,) நிரஸ்யந்–போக்கடிப்பதாயும், துலாகோடித் வந்த்வம் - பீலிகள் என்னும் இரண்டு அணிகளை, ததத் அபி

-தரித்திருந்தபோதிலும், அதுலதாம் - ஒப்பற்ற நிலைமையை கச்சந்-அடைவதாயுமிருந்துகொண்டு, கிராம்-சொற்களுடைய, மார்க்கம-வழியை, லங்கயதி-கடந்து செல்லுகிறது.

பர்வதராஜகுமாரியே! காமாக்ஷி உன் பாதங்கள் எப்போதும் (மருதாணி) செம்பஞ்சுக்குழம்பு என்னும் பங்கத்தை அடைந்திருந்தும், வணங்குவோர்களின் பங்கம் (பாபம்) முழுவதையும் போக்கடிக்கின்றன; இரண்டு துலாகோடிகளை (சிலம்புகளைத்) தரித்திருந்தும் துலையற்றவைகளாய் (ஒப்பற்றவைகளாய்) இருக்கின்றன. இவ்விதமான உன் பாதங்கள் சொற்களின் எல்லையை மீறி நிற்கின்றன.

பங்கம்:-சேறும் பாபமும்; துலாகோடி-பீலிகளின் நுனிகளும், தராசின் தட்டுகளும். இப்படி விரோதம்போல் தோற்றும பொருள் பெற்ற சொற்களைக்கொண்டு தேவியின் பாதங்கள் வர்ணித்து முடிவைக் காணமுடியாத தன்மையுள்ளன என்கிறார். (45)

प्रवालं सव्रीडं विपिनविवरे वेपयति या
स्फुरल्लीलं बालातपमधिकबालं दधति या ।
रुचिं सांध्यां वन्ध्यां विरचयति या वर्धयतु सा
शिवं मे कामाक्ष्याः पदनलिनपाटल्यलहरी ॥ ४६ ॥

***ப்ரவாளம் ஸவ்ரீடம் விபிநவிவரே வேபயதி யா***
***ஸ்புரல்லீலம் பாலாதபமதிகபாலம் தததி யா |***
***ருசிம் ஸாந்த்யாம் வந்த்யாம் விரசயதியாவர்த்தயதுஸா***
***சிவம் மே காமாக்ஷ்யா: பதநளிந-பாடல்ய-லஹரீ !!***

யா - எந்த சிவப்பானது, ப்ரவாளம் - துளிரை, ஸவ்ரீடம்-வெட்கப்படும்படியாக, விபிந-விவரே - காட்டுப்பிரதேசத்தில், வேபயதி-நடுங்கும்படி செய்கிறதோ, ஸ்புரல்லீலம் அதிகமாய் பிரகாசிக்கிற, பாலாதபம் - இளம் சூரியனை, அதிக பாலம்-பச்சைக்குழந்தையாக (சக்தியற்றதாக); தததி - செய்துவிடுகிறதோ, யா-எந்த சிவப்பு, ஸாந்த்யாம்-ஸந்தியாகாலத்தினுடைய, ருசிம்-காந்தியை, வந்த்யாம் - உபயோகமில்லாததாக, விரசயதி - செய்கிறதோ, ஸா - அப்பேர்பட்ட, காமாக்ஷ்யா:-காமாக்ஷியினுடைய, பத-நளிந-தாமரைபோன்ற பாதங்களுடைய, பாடல்ய-லஹரீ-சிவப்பு வர்ணத்தின் அலைபோன்ற ஒளியானது மே-என்னுடைய, சிவம்-மங்களத்தை, வர்த்தயது-விருத்தி செய்யட்டும்,

காமாக்ஷி தேவியின் தாமரை போன்ற பாதங்களிலிருந்து அலையெறியும் சிவப்பு வர்ணம் தன் அழகினால் தளிர்களை வெட்கமடைந்து காடுகளில் சென்று நடுங்கிக்கொண்டிருக்கும்படி செய்கிறது; ஒளியுடன் உதிக்கும் இளம் சூரியனை சிறுகுழந்தை போல சக்தியற்றதாக்குகிறது; ஸந்தியா காலத்தின் காந்தியை உபயோகமற்றதாகச் செய்துவிடுகிறது. அவ்விதமான காந்தியைக் கொண்ட தேவியின் பாதங்கள் எனக்கு மங்களங்களை விருத்தி செய்யட்டும்.

இளந்தளிர்கள், இளஞ்சூரியன், ஸந்த்யாகாலம் இவற்றின் சிவப்புவர்ணமானது அம்பிகையின் பாதங்களுடைய சிவப்புவர்ணத்தின் அழகுக்கு முன்னால் நிற்கமாட்டா என்கிறார். (46)

किरञ्ज्योत्स्नारीतिं नखमणिरुचा हंसमनसां
वितन्वानः प्रीतिं विकचतरुणाम्भोरुहरुचिः ।
प्रकाशः श्रीपादस्तव जननि कामाक्षि तनुते
शरत्कालप्रौढिं शशिसकलचूडप्रियतमे ॥ ४७ ॥

*கிரஞ்ஜ்யோத்ஸ்நாரீதிம் நகமணிருசா ஹம்ஸமநஸாம்*
*விதந்வாந: ப்ரீதிம் விகசதருணாம்போருஹருசி: |*
*ப்ரகாச: ஸ்ரீபாதஸ்-தவ ஜநநி காமாக்ஷி தநுதே*
*சரத்காலப்ரௌடிம் சசி-சகல-சூட-ப்ரியதமே ||*

ஜநநி-தாயே! சசிஸகலசூட-சந்திரசேகரருடைய, ப்ரியதமே-பத்னியே! காமாக்ஷி - காமாக்ஷி! நகமணிருசா – நகங்களாகிற மணிகளின் காந்திகளால், ஜ்யோத்ஸ்நா-ரீதிம்-நிலாவின் நிலைமையை, கிரந்-பரவச்செய்கிறதாயும், ஹம்ஸமநஸாம்-ஹம்ஸங்களின் மனதிற்கு, ப்ரீதிம்–ஸந்தோஷத்தை, விதந்வாந:-உண்டுபண்ணுகிறதாயும், விகச-தருண-மலர்ந்து செவ்வியதான, அம்போருஹ–தாமரைப்பூவின, ருசி:-காந்தியையுடையதாயும், ப்ரகாச: - பிரகாசமாயுமிருந்துகொண்டு, தவ-உன்னுடைய, ஸ்ரீபாத:–அழகிய பாதமானது, சரத்கால–சரத்காலத்தினுடைய, ப்ரௌடிம – பெருமையை (அழகை), தநுதே–வெளிப்படுத்துகிறது.

தாயே! காமாக்ஷி! சந்திரசேகரனின் பத்னியே! ரத்னம்போன்ற நகங்களின் காந்திகளால் நிலாவின் நிலைமையை பரவச் செய்கிறதாயும, (பரம) ஹம்ஸங்களின் மனங்களுக்கு ஆநந்தத்தை உண்டு பண்ணுவதாகவும், மலர்ந்து செவ்வியதான தாமரைப் பூவின்

சோபையையுடையதாகவும் உன்னுடைய அழகிய பாதம் இருக்கிறது. இதனால் அது சரத்காலத்தின் பெருமை தன்னிடம் இருப்பதை வெளியிடுகிறது.

சரத்காலமானது நிலா, மலர்ந்த செவ்விய தாமரை தெளிவான நீரில விளையாடும் ஹம்ஸங்கள் இவற்றால் மனோஹரமாயிருப்பது போல, தேவியின் பாதங்களும் நிலாப்போல் வெளுத்த நக காந்திகளைக் கொண்டதாயும், (பரம) ஹம்ஸர்களுக்கு ஆநந்தத்தை அளிப்பதாயும், செந்தாமரையினும் அழகுமிக்கு விளங்குவதாயும் இருக்கின்றன. அதனால் திருவடிகளில் சரத்காலத்து சோபை இருக்கிறது என்கிறார். (ஐப்பசியும் கார்த்திகையும் சரத்காலத்திய மாதங்கள்.) (47)

नखाङ्कुरस्मेरद्युतिविमलगङ्गाम्भसि सुखं
कृतस्नानं ज्ञानामृतममलमास्वाद्य नियतम् ।
उदञ्चन्माञ्जीरस्फुरणमणिदीपे मम मनो
मनोज्ञे कामाक्ष्याश्चरणमणिहर्म्ये विहरताम् ॥ ४८ ॥

*நகாங்குர-ஸ்மேர-த்யுதி-விமல-கங்காம்பஸி ஸுகம்*
*க்ருத-ஸ்நாநம் ஜ்ஞாநாம்ருதம் அமலம் ஆஸ்வாத்ய*
*நியதம் |*
*உதஞ்சந்-மாஞ்ஜீர-ஸ்புரண-மணி-தீபே மம மநோ*
*மநோஜ்ஞே காமாக்ஷ்யா:சரண-மணி-ஹர்ம்யே*
*விஹரதாம் ||*

நகாங்குர - நகங்களுடைய, ஸ்மேர-த்யுதி - வெளுப்பான காந்திகளாகிற, விமல-பரிசுத்தமான, கங்காம்பஸி-கங்கா ஜலத்தில், ஸுகம்-ஸுகமாக, க்ருத-ஸ்நாநம் - ஸ்நாநம் செய்ததாய், அமலம்-சுத்தமான, ஜ்ஞானம்ருதம் - ஞான மென்னும் அம்ருதத்தை, ஆஸ்வாத்ய - சாப்பிட்டுவிட்டு, உதஞ்சந்-ஜ்வலிக்கிற, மாஞ்ஜீர-பீலிகளுடைய, ஸ்புரண-பிரகாசமாகிற, மணி-தீபே - ரத்தின விளக்கையுடையதும், மநோஜ்ஞே - அழகுள்ளதுமான, காமாக்ஷ்யா: - காமாக்ஷியினுடைய, சரண-பாதங்களாகிற, மணி-ஹர்ம்யே-ரத்ன மயமான அழகிய கிருஹத்தில், மம மந:-என் மனது, நியதம் -எப்போதும், விஹரதாம்-விளையாடட்டும் (இருக்கட்டும்).

என் மனது தேவியின் பாதங்களின் நகங்களுடைய வெளுப் பான காந்திவெள்ளமென்னும் பரிசுத்தமான ஜலத்தில் ஸ்நாநம் செய்துவிட்டு, தோஷமற்ற ஞானமென்னும் அமுதையுட்கொண்டு ஜ்வலிக்கும் பீலிகளின் பிரகாசமாகிற ரத்தின தீபங்களையுடைய அழ கான காமாக்ஷியின் பாதங்களென்னும் ரத்னமாளிகையில் எப் போதும் ஸஞ்சரித்து விளையாடிக்கொண்டு இருக்கட்டும்.

தேவியின் பாதங்களே ஒரு அழகிய மாளிகை; ஆபரணங் களில் இழைக்கப்பட்ட ரத்னங்களே தூண்டாமணி விளக்குகள். நகங்களிலிருந்து கிளம்பும் கிரணங்களே கங்கா ப்ரவாஹம். அதை உபாஸிப்பதனல் ஏற்படும் ஞானமே அமுதம். என் மனம் நகங் களின் சோதிவெள்ளத்தில் மூழ்கி, ஞானமென்னும் அமுதத்தை உண்டு, தூமணிவிளக்குகள் சுடர்விட்டு ஜ்வலிக்கத் திகழும் தேவி யின் பாதமென்னும் மாளிகையில் எப்போதும் ஸஞ்சரிக்கட்டும்; எப் போதும் என் மனம் தேவியின் பாதங்களையே தியானம் செய்வதாக இருக்கட்டும் என்கிறர். (48)

भवाम्भोधौ नौकां जडिमविपिने पावकशिखां
प्रणम्रेन्द्रादीनामधिमुकुटमुत्तंसकलिकाम् ।
जगत्तापज्योत्स्नामकृतकवचःपञ्जरपुटे
शुकस्त्रीं कामाक्ष्याः मनसि कलये पादयुगलीम् ॥ ४९ ॥

*பவாம்போதௌ நௌகாம் ஜடிம-விபிநே பாவக-ஶிகாம்*
*ப்ரணம்ரேந்த்ராதீநாம் அதிமுகுடம் உத்தம்ஸ-கலிகாம்।*
*ஜகத்-தாப-ஜ்யோத்ஸ்நாம் அக்ருதக-வச: பஞ்ஜர-புடே*
*சுக-ஸ்த்ரீம் காமாக்ஷ்யா: மநஸி கலயே பாதயுகளீம்॥*

பவாம்போதௌ—ஸம்ஸாரமென்னும் ஸமுத்திரத்தில், நௌகாம்—கப்பலாகவும், ஜடிம-முட்டாள்தனமென்கிற, விபிநே—காட்டில், பாவகசிகாம—அக்னி ஜ்வாலையாகவும், ப்ரணம்ர—நமஸ்கரிக்கிற, இந்த்ராதீநாம்—இந்திரன் முதலான தேவதை களுடைய, அதிமுகுடம்-கிரீடங்களில், உத்தம்ஸ—அலங்கார மான, கலிகாம்—புஷ்பமாகவும், ஜகத்-தாப - உலகங்களின் தாபத்திற்கு, ஜ்யோத்ஸநாம்—நிலாவாகவும், அக்ருதக-வச: நித்யமான வேதமென்னும், பஞ்ஜர-புடே - கூட்டில், சுக-ஸ்த்ரீம் – பெண்கிளியாகவுமிருக்கிற, காமாக்ஷ்யா: – காமாக்ஷி யினுடை, பாத-யுகளீம—இரண்டு பாதங்களையும், மநஸி-மனதில், கலயே-தியானம் செய்கிறேன்,

ஸம்ஸாரமென்னும் கடலில் ஒரு தோணியாகவும், அஜ்ஞான மென்னும் காட்டில் அகனி ஜ்வாலையாகவும் வணங்குகிற இந்திரன் முதலான தேவர்களுடைய தலையில் ஆபரணமான புஷ்பமாகவும், உலகத்தின் தாபத்தைப் போக்குவதில் நிலாவாகவும், அபௌருஷேயமான வேதமென்னும் கூண்டில் பெண்கிளியாகவும் இருக்கும் காமாக்ஷியின் இரண்டு பாதங்களையும் என் மனதில் தியானம் செய்கிறேன்.

தேவியின் பாதங்களுக்கு ஸமானமாக உலகில் ஒரு பொருளும் இல்லை. ஒவ்வொன்றை ஒரொரு விஷயத்தில்தான் ஒப்பிடலாம்; தேவியின் பாதங்களை பல பொருள்களுக்கு ஒப்பிடவேண்டும். ஆகையால், பாதங்களுக்கு உபமானமாக பல பொருள்களைக் காட்டுகிறார்.

பாதங்கள் ஸம்ஸாரமென்னும் கடலைத் தாண்டுவிப்பதில் ஒரு கப்பலாகவும், அஜ்ஞானமென்னும் காட்டையழிப்பதில் அக்னி ஜ்வாலையாகவும், வணங்கும் இந்திராதி தேவர்களின் கிரீடங்களுக்கு அலங்காரமான புஷ்பமாலையாகவும், உலகத்தின் தாபத்தை நீக்குவதில் நிலாவாகவும், வேதமென்னும் கூண்டுக்கு அழகிய கிளியாகவும் உள்ளன. (49)

परात्मप्राकाश्यप्रतिफलनचञ्चुः प्रणमतां
मनोज्ञस्त्वत्पादो मणिमुकुरमुद्रां कलयते ।
यदीयां कामाक्षि प्रकृतिमसृणाः शोधकदशां
विधातुं चेष्टन्ते वलरिपुवधूटीकचभराः ॥ ५० ॥

*பராத்ம-ப்ராகாச்ய-ப்ரதிபலந-சஞ்சு: ப்ரணமதாம்*
*மநோஜ்ஞ: த்வத்-பாத: மணி-முகுர முத்ராம் கலயதே ।*
*யதீயாம் காமாக்ஷி! ப்ரக்ருதி-மஸ்ருணா: சோதக-தசாம்*
*விதாதும் சேஷ்டந்தே வல-ரிபு-வதூடீ-கச-பரா: ॥*

காமாக்ஷி–காமாக்ஷியே! யதீயாம்–எந்தபாதங்களுடையதான சோதகதசாம் – சுத்தம் செய்வது என்கிற நிலைமையை, விதாதும்-செய்வதற்காக, ப்ரக்ருதி-ஸ்வபாவத்திலேயே, மஸ்ருணா–மிருதுவாய் உள்ள, வல-ரிபு-இந்திரனுடைய, வதூடீ–பத்நியான இந்திராணியினுடைய, கச-பரா: – அழகிய கூந்தல்கள், சேஷ்டந்தே–ஆசைப்படுகின்றனவோ, மநோஜ்ஞ:–அழகாயும், ப்ரணமதாம்-நமஸ்கரிப்பவர்களுக்கு, பராத்ம-பரமாத்ம ஸ்வரூபத்தை, ப்ராகாச்ய-வெளிப்படுத்தி, ப்ரதிபலந–ப்ரதிபலிக்கும்

படி செய்ய, சஞ்ச:- ஸாமர்த்திய முள்ளதாயும் இருக்கிற, த்வத் பாத:-உன் பாதமானது, மணி-முகுர-முத்ராம், ரத்னக் கண்ணுடியின் நிலைமையை, கலயதே-அடைகிறது.

காமாக்ஷியே! இந்திரன் மனைவியான இந்திராணியின் இயல்பாகவே மிருதுவாயும் ஒளியுள்ளதுமான கேசங்கள் அந்தக் கண்ணுடியின் அழுக்கைப் போக்குவது என்னும் கார்யத்தைச் செய்ய ஆசைப்பட்டுப் பிரவிருத்திக்கின்றனவோ என்று சொல்லும்படி பாதங்களில் விழுந்து புரளுகின்றன.

நமஸ்கரிப்பவர்களுக்கு பரமாத்மஸ்ருபத்தின் ப்ரகாசத்தை பிரதிபலித்துக்காட்டுவதில் ஸாமர்த்தியமுள்ளதும் அழகுள்ளதுமான உன்னுடைய பாதம் ரத்னக்கண்ணுடியின் தன்மையை அடைகிறது.

இந்திராணியும் வந்து கூந்தல்கள் படும்படி வணங்கத்தக்க பெருமையையுடை தேவியின் பாதங்களை உபாஸிப்பவர்களுக்கு பரமஞானம் தானகவே ஏற்படுகிறது என்கிருர். (50)

अविश्रान्तं तिष्ठन्नकृतकवचः कंदरपुटी-
कुटीरान्तः प्रौढां नखरुचिसटालीं प्रकटयन् ।
प्रचण्डं खण्डत्वं नयतु मम कामाक्षि तरसा
तमोवेतण्डेन्द्रं तव चरणकण्ठीरवपतिः ॥ ५१ ॥

*அவிஶ்ராந்தம் திஷ்டந் அக்ருதக-வச:-கந்தர-புடீ*
*குடீராந்த: ப்ரௌடாம் நக-ருசி-ஸடாலீம் ப்ரகடயந் ।*
*ப்ரசண்டம் கண்டத்வம் நயது மம காமாக்ஷி! தரஸா*
*தமோ-வேதண்டேந்த்ரம் தவ சரண கண்டீரவ-பதி: ॥*

காமாக்ஷி-காமாக்ஷியே, அக்ருதக-வச:-நித்யமான வேதமென்னும், கந்தர-புடீ-குஹையென்னும், குடீராந்த:-கிருஹத்திற்குள், அவிச்ராந்தம்-எப்பொழுதும், திஷ்டந்-இருக்கிறதும், நக-ருசி - நககாந்தி என்கிற, ஸடாலீம் - பிடரி மயிர்களை, ப்ரௌடாம் - கம்பீரமாக, ப்ரகடயந் - சிலிர்ந்துக்கொண்டும் இருக்கிறதுமான, தவ-உன்னுடைய, சரணகண்டீரவ:-பாதமென்னும் சிங்கமானது, ப்ரசண்டம்-பயங்கரமான, மம-என்னுடைய, தம:-அஜ்ஞானமென்னும, வேதண்டேந்த்ரம்-பெரிய யானையை, தரஸா-சீக்கிரத்தில், கண்டத்வம் நயது-

காமாக்ஷியே! அபௌருஷேயமான வேத வாக்குக்களென்னும் இருண்ட குஹா கிரகத்தில் எப்போதும் நிற்கும் உன்னுடைய பாத மென்னும் சிங்கமானது நககாந்தி என்னும் பிடரிமயிர்களை கம்பீரமாக சிலிர்த்த, மிகவும் துஷ்ட ஸ்வபாவமுள்ள என் அஜ்ஞான மென்னும் பெரிய யானையை சீக்கிரத்திலேயே பிளந்து எறியட்டும்.

இதில் தன் அஜ்ஞானத்தை கறுத்து மலைபோல் பெருத்த ஒரு மதயானைக்கு ஒப்பிட்டு, அதைக் கொல்லும் விஷயத்தில் தேவியின் பாதங்கள் ஒருசிங்கம் போலிருக்கட்டும் என்று பிரார்த்திக்கிறார். பரவும் நக காந்தியே சிங்கத்தின் பிடரி மயிர்கள்; காட்டில் குகையில் சிங்கம் வஸிப்பதுபோல, வேதங்களுக்குள் தேவியின் பாதங்கள் இருக்கின்றன. அதாவது வேதங்கள் தேவியின் மஹிமையையே கூறவந்தன. அக்னி. இந்திரன் முதலான தேவர்களைக் கூறுவதாயிருந்தாலும், அவர்களும் தேவியின் அருளாலேயே அப்பெருமையை யடைந்திருப்பதால் அவர்களைப் புகழ்ந்தால் தேவியையே போற்றியதாகும். ஒரு அரசனின் நாட்டையும், பொக்கிஷத்தையும் புகழ்ந்தால் அரசனையே புகழ்ந்ததுபோல் ஆகிறதல்லவா?

வேதங்கள் ஒரு மானிடனால் செய்யப்படாது அபௌருஷேயங்களாகையால், அவற்றை அக்ருதக-வச; என்றது. (51)

पुरस्तात्कामाक्षि प्रचुररसमाखण्डलपुरी-
पुरंध्रीणां लास्यं तव ललितमालोक्य शनकैः ।
नखश्रीभिः स्मेरा बहु वितनुते नूपुररवै-
श्चमत्कृत्या शङ्के चरणयुगली चाटुरचनाः ॥ ५२ ॥

***புரஸ்தாத் காமாக்ஷி! ப்ரசுர-ரஸம் ஆகண்டல-புரீ-***
***புரந்த்ரீணும் லாஸ்யம் தவ லலிதம் ஆலோக்ய ஶநகை:***
***நக-ஶ்ரீபி: ஸ்மேரா பஹு விதநுதே நூபுர-ரவை:***
***சமத்-க்ருத்யா ஶங்கே சரண:யுகளீ சாடு ரசநா:***

காமாக்ஷி-காமாக்ஷியே! ஆகண்டல புரீ-இந்திரனுடைய பட்டணத்து, புரந்த்ரீணும்-(தேவ) ஸ்திரீகளுடைய, ப்ரசுர-ரஸம்-மிகவும் ரஸமாயும், லலிதம்-அழகாயுமிருக்கிற, லாஸ்யம்-நாட்டியத்தை, புரஸ்தாத்-எதிரில், ஆலோக்ய-பார்த்துவிட்டு, ஶநகை:-மெள்ள மெள்ள, தவ-உன்னுடைய, சரண-யுகளீ-இரண்டு பாதங்களும், நகஶ்ரீபி:-நக காந்திகளால், ஸ்மேரா-சிரிப்பவைகளாயிருந்து கொண்டு, நூபுர-ரவை: – கால் சிலம்பு

களின் சப்தங்களால், சமத்க்ருத்யா–ஸாமார்த்தியத்தோடு, சாடு ரசநா – அழகிய சப்தங்களை (சொற்களை), பஹு–அதிகமாக, விதநுதே–செய்கின்றன, (சொல்கின்றன என்று) சங்கே–நினைக்கிறேன்.

காமாக்ஷி! உன் இரண்டுபாதங்களும் உன் எதிரில் மிகுந்த ஸத்தோடு அழகாக தேவஸ்திரீகள் செய்யும் நாட்டியத்தைப் பார்த்து திருப்தியடைந்து மெள்ள மெள்ள நக காந்திகளால் புன்சிரிப்புக்கொண்டதாய், காலணிகளின் சப்தங்களால் மிகநாகரீகமாக அழகிய வார்த்தைகளை அதிகமாகச் சொல்லி நாட்டித்தைக் கொண்டாடுவதுபோலிக்கிறது என்று நினைக்கிறேன்.

அம்பிகையை ஸந்தோஷிப்பித்து அவள் பிரஸாதத்தைப் பெறும் பொருட்டு தேவஸ்திரீகள் அவள் எதிரில் லாஸ்யம் என்னும் நாட்டியத்தை ஆடுகிறார்கள். நாட்டியம் ஆடுவது நன்றாயிருந்தால் ஸந்தோஷத்தால் சிரித்து அதை சிலாகித்து வார்த்தைகள் சொல்வது என்ற காரியத்தை தேவியின் பாதங்களே செய்கின்றன என்கிறார். கவிகள் சிரிப்பை வெளுப்பாகவர்ணிப்பது வழக்கம்; இங்கு நகங்களின் காந்தி வெளுப்பாயிருப்பதால், அதையே சிரிப்பாக சொல்லுகிறார். பாதங்கள் அசையும்போது கலீர் என்று ஒலிக்கும் தண்டை சிலங்கை முதலிய ஆபரணங்களின் 'யேதஸைத்ஷப்பசதா' 'நன்றாயிருக்கிறது' என்று சபையோர் கொண்டாடும் சப்தமாக கூறுகிறார்

லாஸ்யம்- நாட்டியத்தில் தாண்டவம் லாஸ்யம் என்று இருவகையுண்டு. அவற்றுள் தாண்டவம் என்பது ஆண்கள் ஆடுவது; லாஸ்யம் பெண்கள் செய்வது. ஈச்வரன் தாண்டவத்தையும், ஈச்வரி லாஸ்யத்தையும் செய்து காட்டினார்கள். (52)

सरोजं निन्दन्ती नखकिरणकर्पूरशिशिरा
निषिक्ता मारारेर्मुकुटशशिरेखाहिमजलैः ।
स्फुरन्ती कामाक्षि स्फुटरुचिमये पल्लवचये
नवाधत्ते मैत्रीं पथिकसुदृशा पादयुगली ॥ ५३ ॥

*ஸரோஜம் நிந்தந்தீ நக-கிரண-கர்ப்பூர-ஶிஶிரா*
*நிஷிக்தா மாராரே: முகுட-ஶஶி-ரேகா-ஹிம-ஜலை: ।*
*ஸ்புரந்தீ காமாக்ஷி ஸ்புட-ருசி-மயே பல்லவ-சயே*
*நவா*²²*தத்தே மைத்ரீம் பதிக-ஸு*⁻*த்ருஶா பாத-யுகளீ ॥*

காமாக்ஷி–காமாக்ஷியே! ஸரோஜம்–தாமரையை, நிந்தந்தீ–நிந்திக்கிறதாயும், நக-கிரண–நக காந்தி என்னும், கர்ப்பூர–பச்சைக்கற்பூரத்தால், சிசிரா–குளிர்ந்ததாயும், மாராரே:–சிவனுடைய, முகுட–மகுடத்திலுள்ள, சசிரேகா–சந்திரகலையினுடைய, ஹிம-ஜலை:–குளிர்ந்த ஜலத்தால், நிஷிக்தா-தெளிக்கப்பட்டதாயும், ஸ்புடருசி-மயே - சுத்தமான காந்திகள் என்னும், பல்லவ-சயே–தளிர்களின் கூட்டத்தில், ஸ்புரந்தீ–பிரகாசிக்கிறதாயுமிருக்கிற, தவ-உன்னுடைய, பாத-யுகளீ-இரண்டு பாதங்களும், பதிக - பிரயாணத்திலிப்பவனுடைய, ஸுத்ருசா–ஸ்திரீயோடு, மைத்ரீம்-ஒற்றுமையை, ஆதத்தே-அடைகிறது.

காமாக்ஷி! தாமரையைப்பழிப்பதும், நக காந்தி என்னும் பச்சைக்கற்பூரத்தால் குளிர்ந்ததாயும், சிவனின் மகுடத்திலுள்ள சந்திரகலையிலிருந்து பெருகும் பனி ஜலத்தால் நனைக்கப்பட்டதாயும் நிர்மலமான காந்தியென்னும் தளிர்களின் மத்தியில் விளங்குவதுமான உன் பாதங்கள் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலைமையை வஹிக்கின்றன.

தலைவனைவிட்டுப் பிரிந்த ஒரு ஸ்திரீ பிரிவாற்றாமல் வருந்தும் போது தாமரை அவளுக்கு வெறுப்பாயிருக்கும்; சரீரத்தில் உண்டான தாபத்தையாற்ற கர்ப்பூரக்குழம்பை பூசிக்கொள்வாள்; சந்திரகாந்தக்கல்லிலிருந்து பெருகும் குளிர்த்த ஜலத்தால் சரீரத்தை நனைத்துக்கொள்வாள்; அதிலும் தாபம் தீராமல் இளந்தளிர்களைப் பரப்பி அதன்மேல் படுத்துக்கொள்வாள். இவையெல்லாம் ஒருவிதத்தில் தேவியின் பாதங்களில் காணப்படுகின்றன என்கிறார்.

பொருள் சாம்பாதிக்கும் பொருட்டு தன்னை விட்டுப்பிரிந்து வெளியில் பிரயாணம் செய்துகொண்டிருக்கும் தன் நாயகனுடைய பிரிவு ஆற்றாது வருந்தும் ஒரு ஸ்திரீ போன்றிருக்கின்றன தேவியின் திருவடிகள் என்று வர்ணிக்கிறார். (53)

नतानां संपत्तेरनवरतमाकर्षणजपः
प्ररोहत्संसारप्रसरगरिमस्तम्भनजपः ।
त्वदीयः कामाक्षि स्मरहरमनोमोहनजपः
पटीयान्नः पायात् पदनलिनमञ्जीरनिनदः ॥ ५४ ॥

*நதாநாம் ஸம்பத்தே: அநவரதம் ஆகர்ஷண-ஜப:*
*ப்ரரோஹத்-ஸம்ஸார-ப்ரஸர-கரிம-ஸ்தம்பந-ஜப: ।*
*த்வதீய: காமாக்ஷி! ஸ்மர-ஹர-மநோ-மோஹந-ஜப:*
*படீயாந்-ந: பாயாத் பத-நளிந-மஞ்ஜீர-நிநத: ॥*

காமாக்ஷி–காமாக்ஷியே! நதாநாம் - நமஸ்கரிப்பவர்களுக்கு, அநவரதம்-எப்போதும், ஸம்பத்தே:-ஸம்பத்தை, ஆகர்ஷண –இழுத்துக்கொடுக்கும், ஜப:–மந்திரமாயும், ப்ரோஹத்-விருத்தி யடைகிற, ஸம்ஸார-ஸம்ஸாரத்தின், ப்ரஸர-பரவுதலின், கரிம-பெருமையை, ஸ்தம்பந-அடக்கும், ஜப:-மந்திரமாயும், ஸமரஹர – மன்மதனை எரித்த சிவனுடைய, மந: - மனதை, மோஹந – மோஹிக்கும்படி செய்யும், ஜப; - மந்திரமாயும், படீயாந்–தெளிவாய் அழகாயுமிருக்கிற, த்வதீய:-உன்னுடைய சரண, நளிந-தாமரைபோன்ற பாதங்களுடைய, மஞ்ஜீர–சிலம்புகளின், நிநத.-சப்தங்கள், ந:–எங்களை, பாயாத்–ரக்ஷிக்கட்டும்,

காமாக்ஷியே! வணங்குவோர்களுக்கு ஸம்பத்தை எப்போதும் அளிப்பதில் ஆகர்ஷணஜபமாயும், மேன்மேலும் பொங்கி எழும் ஸம்ஸாரம் பரவி வளர்வதைத் தடுப்பதில் ஸ்தம்பநஜபமாயும், ஸ்மராரியின் மனதுக்கு மோஹனஜபமாயும் விளங்குகிற வல்லமை யுள்ள உன் சரணகமலங்களிலுள்ள சிலம்புகளின் சப்தம் எங்களை ரக்ஷிக்கட்டும்.

தேவியின் பாதங்கள் நம்மை ரக்ஷிப்பது ஒரு விசேஷமல்ல. அந்தபாதங்களை அலங்கரிக்கும் சிலம்புகளின்சப்தமே நம்மை ரக்ஷிக்கப்போதுமானது; ஸகல மந்திரங்களும் கொடுக்கக்கூடிய எல்லா நன்மையையும் அதுவே கொடுக்கும் என்கிறார். சில மந்திரங்கள் ஐச்வர்யத்தை அளிக்கக்கூடியனவாயும், சில நம்துபன்களை நீக்க வல்லனவாயும், சில பிறரை மோஹிக்கும்படி செய்வனவாயுமிருக்கும் அச்சக்திகள் எல்லாவற்றையும் திருவடிகளின் சிலம்பு பெற்றிருக்கிறது என்கிறார். ஐச்வர்யத்தையும் கொடுக்கும்; ஸம்ஸாரதுக்கத்தை பரவிடாமல் அழித்துவிடும்; காமத்தை அடக்கி மன்மதனை எரித்து 'ஸ்மரஹரன்' என்று ப்ரஸித்திபெற்ற சிவனையும் மோஹிக்கும்படி செய்யும். ஆகையால் இது ஸகலவல்லமையுள்ளது. (54)

वितन्वीथा नाथे मम शिरसि कामाक्षि कृपया
पदाम्भोजन्यासं पशुपरिवृढप्राणदयिते ।
पिबन्तो यन्मुद्रां प्रकटमुपकम्पापरिसरं
दृशा नानन्द्यन्ते नलिनभवनारायणमुखाः ॥ ५५ ॥

விதந்வீதா நாதே மம ஶிரஸி காமாக்ஷி! க்ருபயா
பதாம்போஜ-ந்யாஸம் பஶு-பரி-வ்ருட-ப்ராணதயிதே
பிபந்தோ யந்-முத்ராம் ப்ரகடம் உப-கம்பா-பரிஸரம்
த்ருஶா நாநந்த்யந்தே நளித-பவ-நாராயண-முகா: ॥

காமாக்ஷி-காமாக்ஷி! பசுபரிப்ருட-பசுபதியினுடைய, ப்ராண தயிதே - இன்னுயிர்க்காதலியே! நாதே - ஜகதீச்வரியே! காமாக்ஷி-காமாக்ஷி! யந்முத்ராம் - எதனுடைய முத்திரைகளை, ப்ரகடம்-ஸ்பஷ்டமாக, உபகம்பா - கம்பாநதியின் கரையில், பரிஸரம் - இருந்துகொண்டு, த்ருசா - தங்கள் கண்களால், பிபந்த:-குடிக்கிறவர்களாய்க்கொண்டு, நளிநபவ-தாமரையி லிருந்துண்டான பிரம்மா, நாராயண-மஹாவிஷ்ணு, முகா:-முதலான தேவர்கள், நாநந்த்யந்தே - எப்போதும அதிக ஸந்தோஷமடைகிறார்களோ, பதாம்போஜ-(அப்பேர்பட்ட) சரண கமலங்களினுடைய, ந்யாஸம்-வைப்பதை, மம சிரஸி-என் தலையில், க்ருபயா-கருணைசெய்து, விதந்வீதா:-செய்வாயாக,

பசுபதியின் இன்னுயிர்காதலியே! ஜகதீச்வரி! காமாக்ஷி! கம்பாநதியின் கரையில் எந்த பாதங்களின் நன்கு பதிந்த சின்னங்களை தங்கள் கண்களால் பருகி அம்புஜத்தோனும் நாராயணனும் மற்று முள்ளோர்களும் எப்போதும் அழிவிலா ஆனந்தத்தை அடைகிறார்களோ. அப்பேர்ப்பட்ட பாதபத்மங்களை கருணையோடு எனது சிரஸில் வைப்பாயாக,

பிரம்மாதி தேவர்களும் காமாக்ஷிதேவியின் ஆலயத்திற்கு ஸமீபத்தில் ஓடும் கம்பாநதியின் கரையில் வந்து தேவியின் பாதங்களைக்கண்டு மகிழ்கிறார்கள்; அப்பேர்ப்பட்ட பாதங்களை என் தலை மீது வைப்பாயாக என்று பிரார்த்திக்கிறார். (55)

प्रणामोद्यद्‍वृन्दारकमुकुटमन्दारकलिका
विलोलल्लोलम्बप्रकरमयधूमप्रचुरिमा ।
प्रदीप्तः पादाब्जद्युतिविततिपाटल्यलहरी-
कृशानुः कामाक्ष्या मम दहतु संसारविपिनम् ॥ ५६ ॥

**ப்ரணமோத்யத் ப்ருந்தாரக-முகுட-மந்தார-கலிகா-**
**விலோலல்-லோலம்ப-ப்ரகர-மய-தூம ப்ரசுரிமா |**
**ப்ரதீப்த: பாதாப்ஜ-த்யுதி-விததி-பாடல்ய-லஹரீ-**
**க்ருசாநு: காமாக்ஷ்யா மம தஹது ஸம்ஸார-விபிநம் ॥**

ப்ரணம-நமஸ்கரித்து, உத்யத்-எழுந்திருக்கும், ப்ருந்தாரக-தேவக்கூட்டங்களுடைய, முகுட - கிரீடங்களில் உள்ள, மந்தாரகலிகா-மந்தார புஷ்பங்களில், விலோலத்-ஸஞ்சரிக்கிற லோலம்ப-வண்டுகளுடைய, ப்ரகரமய-கூட்டமென்னும், தூம-புகையினால், ப்ரசுரிமா-நிரம்பினதாயும், ப்ரதீப்த:-ஜ்வலிக்கிற

தாயும், காமாக்ஷ்யா:-காமாக்ஷியினுடைய, பாதாப்ஜ-சரண கமலங்களுடைய, த்யுதிவிததி – காந்தியின் கூட்டம் என்னும், பாடல்யலஹரீ-சிவப்பு வர்ணத்தின் பரம்பரைகளையுடையதுமான க்ருசாநு:-அக்னியானது, மம-என்னுடைய, ஸம்ஸாரவிபிநம் பிறவியென்னும் காட்டை, தஹது-எரித்துவிடட்டும்,

வணங்கி எழுகின்ற தேவர்களின் கிரீடங்களிலுள்ள மந்தாரை மாட்டுக்களில் மொய்த்துக்கொண்டிருக்கும் வண்டுகளின் கூட்ட மன்னும் புகையோடு கூடியதும், காமாக்ஷியின் சரணகமலங் ளின் சோதிவெள்ளத்தின் சிவப்பு அலைகளுடன் ஜ்வலிக்கும் அக்னி ானது என்னுடைய பிறவியென்னும் காட்டை அழிக்கட்டும்,

(அஜ்ஞானமென்னும் இருள் சூழ்ந்து காமம் குரோதம் முத யன துஷ்டமிருகங்களோடு கூடிய) என்னுடைய ஸம்ஸாரமென் யும் பெரிய காட்டை தேவியின் பாதமென்னும் அக்னியானது எரித்து ழித்து விடட்டும் என்கிறார். காட்டுத்தீயின் சிவப்பு ஜ்வாலைகள் பாலஅம்பிகையின தாமரை போன்ற பாதங்களின் காந்திகள் இருக் ன்றன. வந்து வணங்கும் தேவர்களின் கிரீடங்களிலுள்ள புஷ்பங் ளின் தேனுக்காக அங்கே ஸஞ்சரிக்கும் வண்டுகள் பறந்து காண்டிருப்பதைப் பார்த்தால் காட்டுத்தீயில் புகை சூழ்ந்து இருப் து போல் உளது. (56)

वलक्षश्रीर्ऋक्षाधिपशिशुसदृक्षैः* तव नखै-
जिघृक्षुर्दक्षत्वं सरसिरुहभिक्षुत्वकरणे।
क्षणान्मे कामाक्षि क्षपितभवसंक्षोभगरिमा
वचोवैचक्षण्यं चरणयुगली पक्ष्मलयताम् ॥ ५७ ॥

வலக்ஷஸ்ரீர்-ருக்ஷாதிபசிசுஸத்ருக்ஷை:- தவ நகை: ஜிக்ருக்ஷுர்-தக்ஷத்வம் ஸரஸிருஹ-பிக்ஷுத்வ-கரணே– க்ஷணாந்-மே காமாக்ஷி! க்ஷபித-பவ-ஸங்க்ஷோப-கரிமா வசோ-வைசக்ஷண்யம் சரண-யுகளீ பக்ஷ்மலயதாம் ॥

காமாக்ஷி-காமாக்ஷியே! ருக்ஷாதிப-நக்ஷத்திரங்களுக்கு அதி பதியான, சிசுஸத்ருக்ஷை – பிறைச்சந்திரனுக்கு சமானமான, நகை:-நகங்களால், வலக்ஷ-வெளுப்பான, ஸ்ரீ:-காந்தியை

* ऋक्षाधिपशिशुसदृक्षा என்னும் பாடம்

யுடையதும், ஸரஸிருஹ-தாமரைப்பூவை, பிக்ஷாத்வகரணே-பிச்சையெடுக்கும்படி செய்யும் (தோற்கடிக்கும்) விஷயத்தில், தக்ஷத்வம்-ஸாமர்த்தியத்தை, ஜிக்ருக்ஷு:-அடைவதில் நோக்கமுடையதும், க்ஷணாத்-க்ஷணகாலத்திலேயே, க்ஷபித-போக்கடிக்கப்பட்ட, பவ-ஸம்க்லேப-ஸம்ஸார துக்கத்தின், கரிமா-பாரத்தையுடையதுமான, தவசரணயுகளீ - உன் இருபாதங்களும், மே-என்னுடைய, வசோ-வைசக்ஷண்யம்-வாக்ஸாமர்த்தியத்தை, பக்ஷ்மலயதாம்-விருத்தியடைவதாகச் செய்யட்டும்.

காமாக்ஷி! நக்ஷத்திரங்களுக்கு அதிபதியான சந்திரனின் பிறைபோன்ற நகங்களாலே வெண்மையான காந்தியையுடையவைகளும், தாமரைகளுக்கு ஏழ்மையையுண்டுபண்ணும் விஷயத்தில் ஸாமர்த்யத்தை அடைய விரும்புகின்றவைகளும், ஒரு க்ஷணத்திலேயே ஸம்ஸாரத்தினால் உண்டாகும் பெரியதுக்கங்களையெல்லாம் போக்குகின்றவைகளுமான உன் பாதங்கள் என் வாக் ஸாமர்த்தியத்தை (வெகு சீக்கிரத்தில்) விருத்தி செய்யட்டும். (57)

समन्तात्कामाक्षि क्षततिमिरसंतानसुभगान्
अनन्ताभिर्भाभिर्दिनमनु दिगन्तान्विरचयन् ।
अहंताया हन्ता मम जडिमदन्तावलरिपु-
र्विभिन्तां संतापं तव चरणचिन्तामणिरसौ ॥ ५८ ॥

***ஸமந்தாத் காமாக்ஷி! க்ஷத-திமிர-ஸந்தாந-ஸுபகாந்***
***அநந்தாபி: பாபி: தினமநு திகந்தாந் விரசயந் |***
***அஹந்தாயா ஹந்தா மம ஜடிம-தந்தாவல-ரிபு:***
***விபிந்தாம் ஸந்தாபம் தவ சரண-சிந்தாமணி: அஸௌ***

காமாக்ஷி - காமாக்ஷியே! அநந்தாபி:-அனந்தங்களான, பாபி:-காந்திகளால், அநுதினம்-ஒவ்வொரு தினமும் (எப்போதும்), திகந்தாந்-திக்குகளையெல்லாம், ஸமந்தாத்-நாலு பக்கங்களிலும், க்ஷத-நீக்கப்பட்ட, திமிர-ஸந்தாந-இருட்-கூட்டங்களால் - ஸுபகாந்-அழகுள்ளவைகளாக, விரசயந்-செய்வதும், அஹந்தாயா:-அஹங்காரத்தை, ஹந்தா-அழிக்கிறதும, ஜடிம-அஜ்ஞானமென்னும், தந்தாவல-யானைக்கு ரிபு: (ஹரி:) - சத்துருவான சிங்கமாயிருப்பதுமான, தவ-உன்னுடைய, அஸௌ-இந்த, சரண-சிந்தாமணி:-பாதமென்னும் சிந்தாமணியானது, மம-என்னுடைய, ஸந்தாபம்-தாபத்தை, விபிந்தாம்-போக்கடிக்கட்டும்:

காமாக்ஷியே! தன் அனந்தங்களான காந்திகளால் ஒவ்வொரு தினமும் எல்லாத்திசைகளிலும் நாலாபக்கங்களிலும் இருக்கும் இருளை நீக்கி அவற்றை அழகாகச் செய்வதும், அஹங்காரத்தைப் போக்குவதும், அஜ்ஞானமென்னும் யானையையழிக்கும் ஸிம்ஹமுமான உன் இந்தப் பாதமென்னும் சிந்தாமணியானது என் தாபத்தை நீக்கட்டும்.

சிந்தாமணி என்னும ரத்னம்போல் இருக்கும் அம்பிகையின் பாதங்கள் வெளியிலுள்ள இருட்டைப்போக்கி அழகுபடுத்துவதுமட்டுமல்லாமல், உள்ளிருக்கும் அஜ்ஞானமென்னும் இருட்டையும் போக்கி அஹங்காரத்தையும் விலக்குகின்றன. அதனால் என் ஸம்ஸாரதாபங்களும ஒழியட்டும் என்று பிரார்த்திக்கிறார். (58

दधानो भास्वत्तामममृतनिलयो लोहितवपु-
विनम्राणां सौम्यो गुरुरपि कवित्वं च कलयन् ।
गतौ मन्दो गङ्गाधरमहिषि कामाक्षि भजतां
तमःकेतुर्मातस्तव चरणपद्मो विजयते ॥ ५९ ॥

ததானோ பாஸ்வத்தாம் அம்ருத-நிலயோ லோஹித வபு:
விநம்ராணாம் ஸௌம்யோ குரு: அபி கவித்வம் ச கலயந்
கதௌ மந்தோ கங்காதா-மஹிஷி காமாக்ஷி! பஜதாம்
தம: கேது: மாத: தவ சரண-பத்மோ விஜயதே ॥

மாத:- தாயே! கங்காதர-கங்காதரனுக்கு, மஹிஷீ-பட்ட மஹிஷியே! காமாக்ஷி - காமாக்ஷீ, தவ - உன்னுடைய, சரணபத்ம:- தாமரைபோன்ற பாதமானது, பாஸ்வத்தாம் - ஒளியோடு கூடிய தன்மையை (ஸூர்யன் தன்மையை), ததாந:- அடைந்ததாயும, அம்ருதநிலய:- மோக்ஷத்திற்குக் காரணமாயும் அமிருதத்திற்கு இருப்பிடமான சந்திரனுகவும், லோஹிதவபு:-சிவந்த உருவமுள்ளதாயும், (செவ்வாயாகவும்), விநம்ராணும் - நமஸ்கரிப்பவர்களுக்கு, ஸௌம்ய:-சுபகரமாயும் (ஸோமனின் புதல்வனை புதனுகவும்), குரு: அபி-ஸந்மார்க்கத்தை உபதேசிக்கும் குருவாகவும் (பிரஹஸ்பதியாகவும்), கவித்வம் ச-கவந சக்தியை, கலயந்-உண்டுபண்ணுகிறதாயும் (கவி என்றசுக்கிரன் தன்மையை உடையதாயும்), கதௌ-நடப்பதில், மந்த:-மெதுவாயும் (சனீச்வரனுகவும்), பஜதாம்-தியானம் செய்பவர்களுக்கு, தம:கேது:-அஜ்ஞானமென்னும்

இருளைப் போக்கும் சத்துருவாகவும் (ராகு கேதுக்களாகவும்), விஜயதே—விளங்குகிறது.

கங்காதரனின் மஹிஷியே! தாயே காமாக்ஷி! உன்னுடைய பாதபத்மம் ஒளி நிறைந்து ஸூர்யனுயிருக்கும் தன்மையையடைந்தாயும், மோக்ஷமென்னும் அமுதுக்கு இருப்பிடமாதலால் சந்திரனுகவும், சிவந்தருபமுள்ளதால் செவ்வாயாகவும், வணங்குகிறவர்களுக்கு ஸௌம்யமாயிருப்பதால் புதனுகவும், ஸந்மார்க்கத்தை உபதேசிப்பதால் குருவாகவும், கவிதையைக் கொடுப்பதால் சுக்ரனுகவும், நடப்பதில் மெதுவாயிருப்பதால் சனியாகவும், ஆச்ரயிப்பவர்களின் தமஸ்ஸைப்போக்குவதால் (தமஸ்) ராகு கேதுவாகவும் விளங்குகிறது.

சிலேஷையான சப்தப்பிரயோகத்தினுல் நவக்கிரஹங்களையும் தேவியின் பாதத்தில் காணலாம் என்று கூறுகிருர்.

பாஸ்வத்தாம்—ஒளியுள்ளமை, ஸூர்யனுடைய தன்மை என இருபொருள்; பாதங்கள் ஒளியுள்ளவையாயிருக்கின்றன. என்னும் போது சப்தசக்தியால் ஸூர்யனுடைய தன்மையைப்பெற்றிருக்கின்றன என்று கிடைப்பதால் பாதங்களே ஸூர்யன் என்று த்வனிக்கிறது. இப்படியே ஒவ்வொரு கிரஹத்திற்கும் பாதத்திற்கும் பொருந்தும்படியான சொற்களை பிரயோகித்திருக்கிருர்.

அம்ருத-நிலய:—அம்ருதத்திற்கு இருப்பிடம் சந்திரன்; அம்ருதம் என்னும் மோக்ஷத்திற்குக் காரணம் பாதங்கள்.

லோஹிதவபு:—சிவந்தவர்ணமுள்ளவை பாதங்கள்; சிவந்த சரீரத்தையுடையவன் செவ்வாய்.

ஸௌம்ய:—பாதங்கள் மனதுக்கு இனியவை, ஸோமனின் (சந்திரனின்) புதல்வன் புதன்.

குரு:—'கு' என்ருல் இருள் என்றும், 'ரு' என்ருல் போக்குவது என்றும் பொருள். பாதங்கள் வணங்குவோரின் இருள் என்னும் அஜ்ஞானத்தைப்போக்குகின்றன. 'குரு' என்று பிரஹஸ்பதியையும் சொல்லுகிறது.

கவித்வம் கலயந்—பாதங்கள் தங்களைத் துதிக்க விரும்புவோருக்குக் கவியின் தன்மை (கவனசக்தி)யை அளிக்கும். 'கவி' என்று சுக்கிரனுக்குப் பெயர்,

கதௌ மந்த:—பாதங்கள் நடையில் மந்தம் மெதுவானவை. மந்தன் என்று சனிக்குப் பெயர்.

தம: கேது:—பாதங்கள் தமஸ் அஜ்ஞானத்தை, கேது போக்கு வை. தமஸ் என்று ராஹுவுக்குப் பெயர். இங்கு கேதுவும் சொல்லப் ட்டிருக்கிறது

ஆக நவக்கிரஹங்களையும் தேவியின் பாதங்களில் காணலாம் ன்பதால், இவற்றை ஆச்ரயிப்பதில் அவற்றால் வரும் துன்பத்தை லக்கிக்கொள்ளலாம் என்பது தவிர அவையெல்லாம் சேர்ந்து காடுக்கக்கூடிய எல்லா பலங்களையும் இந்தத்திருவடிகள் மட்டுமே காடுக்கவல்லன என்பதும் குறிப்பிடப்பட்டதாகிறது. (59)

नयन्तीं दासत्वं नलिनभवमुख्यानसुलभ-
प्रदानाद्दीनानाममरतरुदौर्भाग्यजननीम् ।
जगज्जन्मक्षेमक्षयविधिषु कामाक्षि पदयो-
र्धुरीणामीष्टे कस्तव भणितुमाहोपुरुषिकाम् ॥ ६० ॥

*யந்தீம் தாஸத்வம் நளிநபவ-முக்யாந் அஸுலப-*
*ரதாநாத் தீநாநாம் அமர-தரு-தௌர்பாக்ய ஜநநீம் |*
*கஜ்-ஜன்ம-க்ஷேம-க்ஷய-விதிஷு காமாக்ஷி! பதயோ:*
*ரீணாம் ஈஷ்டே கஸ்-தவ பணிதும் ஆஹோ-*
*புருஷிகாம் ||*

காமாக்ஷி–காமாக்ஷியே! நளிநபவ-முக்யாந்-பிரும்மா முதலிய தேவர்களை, தாஸத்வம் – தாஸர்களாயிருக்கும் தன்மையை, நயந்தீம் – அடையும்படி செய்கிறதும், தீநாநாம் – எளியவர் களுக்கு, அஸுலப-கிடைக்க அரிதானவற்றையும், ப்ரதாநாத்-கொடுப்பதால், அமர-தரு – கல்பக விருக்ஷத்திற்கு, தௌர் பாக்ய-குறைவை, ஜநநீம்–உண்டுபண்ணுகிறதாயும், ஜகத்-உலகத்தை ஜந்ம-ஸ்ருஷ்டிப்பது, க்ஷேம–காப்பது, க்ஷய–ஸம்ஹரிப்பது என்கிற, விதிஷு – காரியங்களில், துரீணாம் – முதன்மையாயிருக்கிற, தவ-உன்னுடைய, பதயோ:-பாதங் களுடைய. ஆஹோபுருஷிகாம் – பெருமையை, பணிதும் – துதிப்பதற்கு, க:–எவன்தான், ஈஷ்டே–சக்தியுள்ளவன் (ஒருவருமில்லை).

காமாக்ஷியே! பிரம்மா முதலானவர்களை அடக்கி ஆட் காள்ளுவதும், எளியவர்களுக்குக் கிடைக்கவரிய பொருள்களைக் காடுப்பதால் தேவதருவாகிய கல்பக விருக்ஷத்திற்கும் தாழ்வை ண்டுபண்ணுவதும், உலகங்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம்

என்னும் கார்யங்களில் ஸாமர்த்யம் வாய்ந்ததுமான உன் பாதங் களின் பெருமையை யார் தான் எடுத்து உரைக்கவல்லவர்?

தேவியின் பாதங்கள் ப்ருஹ்மாதி ஸர்வ தேவர்களையும் அடக்கி ஆட்கொண்டவையாயும் விரும்புவோர்க்கு வேண்டியதைக் கொடுப்பதில் கல்பக விருக்ஷத்தை விஞ்சினவையாயும், ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்வதற்குவேண்டிய ஸர்வ சக்தியையும் பெற்றவைகளாயும் இருக்கின்றன. (60)

जनोऽयं संतप्तो जननि भवचण्डांशुकिरणै-
रलब्ध्वैकं शीतं कणमपि परज्ञानपयसः ।
तमोमार्गे पान्थस्तव झटिति कामाक्षि शिशिरां
पदाम्भोजच्छायां परमशिवजाये मृगयते ॥ ६१ ॥

***ஜநோயம் ஸந்தப்தோ ஜநநி! பவ-சண்டாம்ஶு-கிரணை***
***அலப்த்வா ஏகம் ஶீதம் கணம் அபி பரஜ்ஞான-பயஸ:***
***தமோ-மார்க்கே பாந்தஸ்-தவ ஜடிதி காமாக்ஷி! ஶிஶிராம்***
***பதாம்போஜச்-சாயாம் பரமஶிவ-ஜாயே! ம்ருகயதே॥***

ஜநநி–தாயாயும், பரமசிவ-ஜாயே–பரமசிவனுக்குப் பத்னியுமான, காமாக்ஷி – காமாக்ஷியே!, பவ - ஸம்ஸாரமென்னும், சண்டாம்சு - ஸூர்யனுடைய கிரணை: – கிரணங்களால், ஸந்தப்த: – எரிக்கப்பட்டவனும், பரஜ்ஞான – உத்தம ஞானமென்னும், பயஸ: – தீர்த்தத்தினுடைய, சீதம் – குளிர்ந்த, ஏகம் கணம் அபி–ஒரு துளியைக்கூட (கால்வைக்க முடியாமல்), அலப்த்வா–அடையாமல், தமோ-மார்க்கே–அஜ்ஞான மார்க்கத்தில், பாந்த:–ஸஞ்சரிக்கிறவனுமான, அயம் ஜந:-இந்த மனிதன் (நான்), சிசிராம் - குளிர்ந்த, தவ – உன்னுடைய, பதாம்போஜச்-சாயாம் - தாமரைபோன்ற பாதங்களின் நிழலை, ஜடிதி–வெகு வேகமாக, ம்ருகயதே–தேடுகிறான்.

தாயே! பரமசிவன் பத்னியான காமாக்ஷி! ஸம்ஸாரமென்னும் ஸூர்யனின் உஷ்ணமான கிரணங்களால் மிகுந்த தாபத்தையடைந்து, உத்தம ஞானமென்னும் தீர்த்தத்தின் குளிர்ந்த ஒரு திவலையையேனும் அடையாமல அஞ்ஞானமென்னும் மார்க்கத்தில் திரிகிறவனை நான் குளிர்ச்சியுள்ள உன் சரண கமலங்களின் நிழலை சீக்கிரத்தில் அடையவேண்டுமென்று தேடுகிறேன்.

உலகமோ கால் வைக்கமுடியாமல் ஸம்ஸாராக்னியால் பழுக்கக் காய்ச்சின இரும்புபோல் எரித்துக்கொண்டு இருக்கிறது; இதன் உஷ்ணத்தையும் அதனல் ஏற்படும் தாஹத்தையும் தணிப்பதற்கு ஒரு சொட்டு ஜலம்கூட கிடையாது. அவ்வித உலகத்தில் தபிக்கும் ஜீவர்களுள் ஒருவனை நானும் குளிர்ந்த நிழலைத் தரும் உன் பாத கமலங்களை வெகு தீவிரமாகத் தேடுகிறேன் என்கிருர்.

பதாம்போஜச்சாயம்—'அம்போஜம்' என்ருல் (நீரில் தோன்றும்; தாமரை: இங்கு இந்தப் பதத்தை உபயோகித்தால் தாஹத்தைத் தணிக்க தண்ணீரும் உண்டு என்பதை ஸூசிப்பிக்கிருர். உத்தமஜ்ஞானமே அவ்விதமான ஜலம்.

சண்டாம்ஸுகிரணை: ........ தமோ-மார்க்கே—ஸூர்ய கிரணங்கள் தஹித்துக்கொண்டிருக்கும்போதே வழி மாத்திரம் இருள் சூழ்ந்திருக்கிறது. (61)

जयत्यम्ब श्रीमन्नखकिरणचीनांशुकमयं
वितानं बिभ्राणे सुरमुकुटसंघट्टमसृणे ।
निजारुण्यक्षौमास्तरणवति कामाक्षि सुलभा
बुधैः संविन्नारी तव चरणमाणिक्यभवने ॥ ६२ ॥

*ஜயதி அம்ப! ஸ்ரீமந்-நக-கிரண-சீநாம்சுக-மயம்*
*விதாநம் பிப்ராணே ஸுர-முகுட-ஸங்கட்ட-மஸ்ருணே*
*நிஜாருண்ய-க்ஷௌமாஸ்தரண-வதி காமாக்ஷி! ஸுலபா*
*புதை: ஸம்வித்-நாரீ தவ சரண-மாணிக்ய-பவநே ॥*

அம்ப – தாயே!, காமாக்ஷி – காமாக்ஷி!, ஸ்ரீமத் – அழகான, நக-கிரண-நக கிரணங்களாகிற, சீநாம்சுக-மயம்-பட்டாலான, விதாநம் – மேல் கட்டியை (ஆஸ்மான கிரியை), பிப்ராணே – அடைந்ததாயும், ஸுர–தேவதைகளுடைய, முகுட–கிரீடங்கள், ஸங்கட்ட–உரசுவதினல், மஸ்ருணே-வழவழப்பானதும், நிஜ – தன்னுடைய, ஆருண்ய - சிவப்பு வர்ணமென்னும், க்ஷௌம ஆஸ்தரண-வதி–பட்டு விரிப்பையுடையதுமான, தவ சரண – உன்னுடைய பாதங்களாகிற, மாணிக்ய-பவநே – ரத்ந கிருஹத்தில், ஸம்வித்-நாரீ-ஞானமென்னும் ஸ்திரீ, புதை:- ஞானவான்களால், ஸுலபா-எளிதில் அடையத்தக்கவளாக, ஜயதி-பிரகாசிக்கிருள்.

தாயே காமாக்ஷி! அழகிய நக கிரணங்களென்னும் மெல்லிய பட்டு விதானத்தையுடையதும், தேவதைகளின் கிரீடங்கள் (அடிக்கடி) படுவதால் வழவழப்புள்ளதும், தன் சிவந்த காந்தி யென்னும் பட்டு விரிப்பையுள்ளதுமான உன் பாதங்களாகிற ரத்ன பவனத்தில் ஞானமென்னும் ஸதிரீ, ஞானவான்களால் எளிதில் அடையத்தக்கவளாக விளங்குகிறாள்.

ஞானத்தை ஸ்திரீயாகவும், அம்பிகையின் பாதங்களை ஒரு ரத்னபவனமாகவும், பாதங்களின் சிவப்பு காந்தியையும் நகங்களின் வெண்மையான கிரணங்களையும் அவ்வீட்டிற்கு விதானம் பட்டு விரிப்பு முதலிய அலங்காரங்களாகவும் உத்ப்ரேக்ஷிக்கிறார். (62)

**प्रतीमः कामाक्षि स्फुरिततरुणादित्यकिरण-**
**श्रियो मूलद्रव्यं तव चरणमद्रीन्द्रतनये ।**
**सुरेन्द्राशामापूरयति यदसौ ध्वान्तमखिलं**
**धुनीते दिग्भागानपि च महसा पाटलयते ॥ ६३ ॥**

***ப்ரதீம: காமாக்ஷி ! ஸ்புரித-தருணாதித்ய-கிரண-***
***ச்ரியோ மூல-த்ரவ்யம் தவ சரணம் அத்ரீந்த்ர-தநயே!***
***ஸுரேந்த்ராசாம் ஆபூரயதி யத் அஸௌ த்வாந்தம் அகிலம்***
***துநீதே திக்-பாகாந் அபி ச மஹஸா பாடலயதே॥***

காமாக்ஷி-காமாக்ஷியே! தவ சரணம்-உன்பாதத்தை, ஸ்புரித-தருண ஆதித்ய – ஜ்வலிக்கின்ற உதயகாலஸூர்யனுடைய, கிரணச்ரிய: – கிரணங்களின் சோபைக்கு, மூலத்ரவ்யம்-மூல காரணமாக, ப்ரதீம: – கருதுகிறோம், யத் – ஏனென்றால், அஸௌ – அந்தபாதமானது, ஸுரேந்த்ர – தேவேந்திரனு டைய, ஆசாம் – மநோரதத்தை, ஆபூரயதி-நிறைவேற்று கிறது; அகிலம் த்வாந்தம் – எல்லா இருளையும், துநீதே- போக்குகிறது; அபி ச – மேலும், மஹஸா – காந்தியினால், திக்பாகாந் – எல்லா திக்குக்களையும், பாடலயதே-சிவப்பாகச் செய்கிறது,

பர்வதராஜகுமாரியே! காமாக்ஷி! உன் பாதத்தை, ஜ்வலித்துக்கொண்டு உதயமாகும் சூர்யனுடைய கிரணங்களின் சோபைக்கு மூலகாரணம் என்று நினைக்கிறேன், ஏனெனில் இது தேவேந்திர னுடைய ஆசையை (திசையை, அதாவது கிழக்குதிக்கை) பூர்த்தி செய்கிறது; எல்லா இருளையும் போக்குகிறது; தன் ஒளியினால் எல்லா திக்குகளையும் சிவப்பாகச்செய்கிறது,

ஆசை — திக்கு; மநோரதம். த்வாந்தம் — அஜ்ஞானம் இருட்டு

ஸூர்யன் விடியற்காலையில் இந்திரனுடைய (ஆசையான) திக்கான கிழக்கு திக்கில் தோன்றி இருளையெல்லாம் நீக்கி தன் ஒளியால் எல்லா உலகத்தையும் சிவப்பாகச்செய்கிறன்; அம்பிகையின் பாதங்களும் இந்திரனுடைய (ஆசையை)மநோரதத்தையெல்லாம் நிறைவேற்றிவைக்கின்றன. உலகத்தின் அஜ்ஞான இருளை நீக்கி தன் சிவந்த சோபையை உலகில் பரப்புகின்றன. ஆகையால் ஸூர்யனுடைய பெருமைக்கும் காரணம் இந்தப் பாதங்களே. (63)

महाभाष्यव्याख्यापटुशयनमारोपयति वा
स्मरव्यापारेर्ष्यापिशुननिटिलं कारयति वा ।
द्विरेफाणामध्यासयति सततं वाऽधिवसतिं
प्रणम्रान्कामाक्ष्याः पदनलिनमाहात्म्यगरिमा ॥ ६४ ॥

*மஹா-பாஷ்ய-வ்யாக்யா-படு சயநம் ஆரோபயதி வா*
*ஸ்மர-வ்யாபாரேர்ஷ்யா-பிசுந-நிடிலம் காரயதி வா*
*த்வி-ரேபாணும் அத்யாஸயதி ஸததம் வா அதிவஸதிம்*
*ப்ரணம்ராந் காமாக்ஷ்யா: பதநளிந-மாஹாத்ம்ய-கரிமா ॥*

காமாக்ஷ்யா: – காமாக்ஷியினுடைய, பதநளிந - தாமரை போன்ற பாதங்களின், மாஹாத்ம்ய-மாஹாத்ம்யத்தின், கரிமா-பெருமையானது, ப்ரணம்ராந்-நமஸ்கரிப்பவர்களை, மஹாபாஷ்ய–மாஹாபாஷ்யமென்னும், வ்யாக்யா-வியாக்யானத்தை இயற்றுவதிலே, படு-ஸாமர்த்தியமுள்ள, சயநம்-ஆதிசேஷனுற படுக்கையில், ஆரோபயதி-ஏற்றுவிக்கும், ஸ்மர–மன்மதனுடைய, ஈர்ஷ்யா–வெறுப்பை, பிசுந–காட்டுகின்ற, நிடிலம்-நெற்றியையுடையவனுக (சிவனுக) காரயதி வா–செய்விக்கும், வா–அல்லது, த்விரேபாணும்-வண்டுகளுக்கு, அதிவஸதிம்–வாஸஸ்தானமான தாமரைப்பூவில், ஸததம்–எப்போதும், அத்யாஸயதி வா-இருக்கும்படியாகவாவது செய்யும்,

காமாக்ஷியின் பாதபத்மங்களுக்குள்ள மாஹாத்மியத்தின் பெருமையானது தன்னை நமஸ்கரிப்பவர்களை 'மஹாபாஷ்யம்' என்கிற வியாக்யானத்தை இயற்றவல்ல ஆதிசேஷனென்னும் சயனத்தில்

ஏற்றுவிக்கும், அல்லது மன்மதனுடைய செய்கையில் பொருமையை வெளியிட்ட நெற்றிக்கண்ணையுடையவனுகச் செய்யும்; அல்லது வண்டுகள் வசிக்கும் தாமரைப்பூவிலாவது எப்போதும் இருக்கும் படியாகச் செய்யும்.

தேவியின் பாதங்களை வணங்குகிறவர்களுக்கு ப்ரஹ்மா விஷ்ணு, சிவன் இவர்களுடைய பதவிகளெல்லாம் ஸுலபத்தில் கிடைக்கும் என்கிருர்.

மாஹாத்ம்ய-கரிமா- மஹிமையின் பெருமை; அல்லது குரு, வாயிருக்கும் தன்மை.

மஹாபாஷ்ய-வ்யாக்யா-படு-சயநம்— மஹாபாஷ்யம் போன்ற வ்யாக்யானம் செய்யும் ஸாமர்த்யத்தை அளிக்கும்; விஷ்ணு பதத்தை யும் தரும். மஹாபாஷ்யம் என்ற வியாகரண கிரந்தம் பதஞ்ஜலி முனிவரால் செய்யப்பட்டது. அவர் ஆதிசேஷனின் அவதாரம். மஹாபாஷ்யம்செய்த ஆதிசேஷன்மேல் படுக்கும் சக்தியை அதாவது விஷ்ணுத்வத்தை பாதங்கள் அளிக்கக் கூடியவை.

ஸ்மர-வ்யாபார-ஈர்ஷ்யா-பிசுன-நிடிலம்- குருசெய்வது போல இந்திரியங்களை அடக்கி காமத்தை வெறுக்கும்படி செய்யும்; சிவனு கவும் செய்யும், தவத்தைக் கெடுக்கவந்த மன்மதனை கோபத்தால் நெற்றிக்கண்ணுல் எரித்த சிவனுகவும் செய்யும்.

த்விரேபாணும் அதிவஸதிம் — பிரஹ்மாவாகவும் செய்யும். 'ப்ரமர' என்ற பதம் வண்டைச் சொல்லும்; அதில் 'ர' (ரேப) என்ற இரண்டு எழுத்துக்கள் இருபபதால் 'த்விரேப' என்பதும் வண் டையே சொல்லுகிறது. வண்டுகள் எப்போதும் தாமரையில் வசிப் பதால், அவைகளுக்கு வாஸஸ்தானம் தாமரை; அதில் பக்தர்களை உட்காரவைப்பதாவது ப்ரஹ்மாவாகச் செய்து; நான்முகனுக்கு கமலம் ஆஸனமானதால் அதைச் சொல்லிற்று. ஆக மும்மூர்த்தி களின் பதத்தையும் பாதத்தை ஆச்ரயித்தவர்கள் பெறலாம் என்ற படி. (64)

विवेकाम्भःस्रोतःस्नपनपरिपाटी शिशिरिते
समीभूते शास्त्रस्मरणहलसंकर्षणवशात् ।
सतां चेतःक्षेत्रे वपति तव कामाक्षि चरणो
महासंवित्सस्यप्रकरवरबीजानि कुशिकः ॥ ६५ ॥

விவேகா-ம்ப:-ஸ்ரோத:-ஸ்நபந-பரிபாடீ-சிசிரிதே
ஸமீபூதே சாஸ்த்ர-ஸ்மரண-ஹல-ஸங்கர்ஷண-வசாத் ।
ஸதாம் சேத:-க்ஷேத்ரே வபதி தவ காமாக்ஷி! சரணோ
மஹா-ஸம்வித்-ஸஸ்ய-ப்ரகர-வர-பீஜாநி க்ருஷிக: ॥

காமாக்ஷி—காமாக்ஷியே, விவேக-விவேகமென்னும், அம்ப:-ஸ்ரோத:—ஜலப்பிரவாஹத்தை, ஸ்நபந-பரிபாடீ - பாய்ச்சுதல் என்னும் செய்கையினல், சிசிரிதே—குளிர்ந்ததாயும், சாஸ்த்ர-ஸ்மரண—சாஸ்த்ரத்தை ஸ்மரிப்பது என்னும், ஹல—கலப்பை யினல், ஸங்கர்ஷண-வசாத்-உழுவதனல், ஸமீபூதே-ஒழுங்காகச் செய்யப்பட்டிருக்கிற, ஸதாம் - ஸாதுக்களுடைய, சேத:-க்ஷேத்ரே-மனதென்னும் வயலில், தவ சரண:-உன் பாதமென்னும், க்ருஷிக:—குடியானவன், மஹா-ஸம்வித்-சிறந்த ஞானமென்னும்; ஸஸ்ய—ப்ரகர—பயிர்களுக்குக் காரணமான, வர-பீஜாநி - உயர்ந்த விதைகளை, வபதி—விதைக்கிருன்.

காமாக்ஷி! உன்னுடைய பாதம் என்னும் க்ருஷிகன் விவே கமென்னும் நீரைப்பாய்ச்சி அதனல் குளிர்ந்திருப்பதும், சாஸ்திரங் களை ஸ்மரித்துக்கொண்டிருத்தல் என்னும் கலப்பைகொண்டு உழுது அதனல் ஸமமாகச் செய்யப்பட்டதுமான ஸாதுக்களின் ஹ்ருதயம் என்னும் வயலில் சிறந்த ஞானமென்னும் பயிரை உண்டாக்குகிற (பக்தியென்னும்) உயர்ந்த விதைகளை விதைக்கிருன்.

ஸாதுக்களுடைய மனதே வயல்; அதில் விவேகமென்னும் நீரைப்பாய்ச்சி, ஸாஸ்த்ரஜ்ஞானம் என்னும் கலப்பையைக்கொண்டு உழுது பண்படுத்தினல், அம்பிகையின் சரணரவிந்தத்தில் பக்தி என்னும் விதை பெற்றதும் உயர்ந்த ஞானமென்னும் பயிர்கள் செழிப்பாக வளரும் என்கிருர் (65)

दधानो मन्दारस्तबकपरिपाटीं नखरुचा
चहन्दीता *शोणाङ्गुलिभिरपि चाम्पेयकलिकाः ।
अशोकोल्लासं नः प्रचुरयतु कामाक्षि चरणो
विकासी वासन्तः समय इव ते शर्वदयिते ॥ ६६ ॥

---

*शोणाङ्गुलिपटलचम्पेयकलिकाम्—पा,

***ததாநோ மந்தார-ஸ்தபக-பரிபாடீம் நக-ருசா***
***வஹந் தீப்தா: சோணா-ங்குளிபிரபி-சாம்பேய-கலிகா:***
***அசோகோல்லாஸம் ந: ப்ரசுரயது காமாக்ஷி! சரணோ***
***விகாஸீ வாஸந்த: ஸமய இவ தே சர்வ-தயிதே ॥***

ஸர்வ-தயிதே–பரமசிவன் பத்னியே!, காமாக்ஷி–காமாக்ஷி!, நக-ருசா – நககாந்தியால், மந்தார-ஸ்தபக – மந்தாரப் பூங் கொத்துக்களின், பரிபாடீம்-நேர்மையை, ததாந:–பெற்றிருப் பதும், சோணா-சிவந்த, அங்குலிபி: அபி–விரல்களால், தீப்தா-பிரகாசிக்கிற, சாம்பேய-கலிகா: – செண்பகப் பூ மொட்டுக்களை, வஹந்-வஹிப்பதாயிருக்கிறதும், விகாஸீ-மலர்ந்ததாயுமிருக் கிற, தே சரண: – உன் பாதம், ந: – எங்களுக்கு, வாஸந்தீ ஸமய: இவ - வஸந்தருதுபோல், அஸோக உல்லாஸம் - அசோகப் புஷ்பத்தை (துக்கமில்லாமையை), ப்ரசுரயது–செய் யட்டும் (விருத்தி செய்யட்டும்).

பரமசிவன் பத்னியே காமாக்ஷி! நக காந்தியால் மந்தாரப் புஷ்பங்களின் அழகை அடைந்ததாயும், சிவந்த விரல்களால் பிரகா சிக்கின்ற சம்பக மொட்டுக்களை அடைந்ததாயும் இருப்பதால், வஸந்தருதுபோல் மலர்ந்துள்ள உன் பாதமானது அசோகத்தின் உல்லாஸத்தையும் எங்களுக்குக் கொடுத்தருளட்டும். (அசோக-அசோக புஷ்பங்கள்; சோகமில்லாமை, உல்லாஸம்–மலர்ச்சி வாழ்வு).

தேவியின் பாதங்களில் வஸந்தருதுவில் இருக்கும் புஷ்பங் களின் தன்மையை யெல்லாம் காணலாம் என்கிறார். வஸந்த காலத் தில் மந்தாரை, செண்பகம், அசோகம் முதலான புஷ்பங்களெல் லாம் மலர்ந்து அழகாயிருக்கும். பாதங்களிலோ நககாந்தி மந்தா ரையின் சோபையைப் பெற்றது; சிவந்த விரல்கள் செண்பகத்தின் அழகைக் காட்டுகின்றன. வஸந்தருது அசோகத்தை மலரச் செய் வதுபோல பாதங்கள் அசோகத்தை (துக்கமின்மையை) விருத்தி செய்யட்டும் என்று பிரார்த்திக்கிறார். (66)

नखांशुप्राचुर्यप्रसृमरमरालालिमहितः*
स्फुरन्मञ्जीराद्यन्मरकतमहःशैवलयुतः ।
भवत्याः कामाक्षि स्फुटचरणपाटल्यकपटो
नदः शोणाभिख्यो नगपतितनूजे विजयते ॥ ६७ ॥

---

*मरालीधवलितः என்றும் பாடம்.

*காம்ச-ப்ராசர்ய-ப்ரஸ்ருமர-மராளாளி-மஹித:*
*ஸ்புரத்-மஞ்ஜீரோத்யத்-மரகத-மஹ:-சைவல-யுத:।*
*பவத்யா: காமாக்ஷி! ஸ்புட-சரண-பாடல்யக-படோ*
*நத: சோணா-பிக்யோ நக-பதி தநூஜே! விஜயதே॥*

**நக-பதி-தநூஜே**-பர்வத ராஜகுமாரியே!, **காமாக்ஷி**-காமாக்ஷியே!, **நக-அம்ப**-நககாந்திகளின், **ப்ராசர்ய**-மிகுதியென்னும், **ப்ரஸ்ருமர**-பறக்கின்ற, **மராளாளி**-ஹம்ஸகணங்கள், **மஹித:**-நிரம்பியதும், **ஸ்புரத்**-பிரகாசிக்கிற, **மஞ்ஜீர**-பீலிகளிலிருந்து, **உத்யத்**-கிளம்புகிற, **மரகத**-பச்சைக் கற்களின், **மஹ:**-காந்திகளென்கிற, **சைவல-யுத:**-பாசி படர்ந்ததாயும் இருக்கிற, **பவத்யா:**-உன்னுடைய, **ஸ்புட**-நிர்மலமான, **சரண**-பாதங்களின், **பாடல்யகபட:**-சிவப்பு வர்ணத்தோடு இருப்பதும், **ஸோணா-அபிக்ய:**-சோணா என்று பெயருள்ளதுமான, **நத:**-நதியானது, **விஜயதே**-விளங்குகிறது.

பர்வத ராஜகுமாரியே காமாக்ஷியே! உன்னுடைய இலங்குகின்ற பாதங்களின் செவ்வொளி என்னும் சோணா என்ற பெயர் கொண்ட நதி நககாந்திகளின் வெள்ளமென்னும் பறந்துவரும் ஹம்ஸங்கள் நிரம்பியதும், ஒளி வீசும் சிலம்புகளிலிருந்து கிளம்புகிற மரகதக் கற்களின் காந்தியென்னும் பாசியோடு கூடியதுமாக விளங்குகிறது.

தேவியின் பாதங்களுக்கும் சோணா என்னும் நதிக்கும் உள்ள ஸாம்யத்தைக் காட்டுகிறார். பாதங்கள் 'சோண' சிவந்தவைகளாயிருக்கின்றன. நதியில் ஹம்ஸங்களும் பாசிகளும் உண்டு; இங்கு நககாந்தியே ஹம்ஸம்; காலணிகளில் இழைக்கப்பெற்ற மரகதக் கற்களே பாசி. (67)

धुनाने पङ्कौघं परमसुलभं कण्टककुलै-
विकासव्यासङ्गं विदधदपराधीनमनिशम् ।
नखेन्दुज्योत्स्नाभिर्विशदरुचि कामाक्षि नितरा-
मसामान्यं मन्ये सरसिजमिदं ते पदयुगम् ॥ ६८ ॥

*துநாநம் பங்கௌகம் பரம-ஸுலபம் கண்டக-குலை:*
*விகாஸ-வ்யாஸங்கம் விததத்-அபராதீநம் அநிசம்।*
*நகேந்து-ஜ்யோத்ஸ்நாபி:விசத-ருசி காமாக்ஷி! நிதராம்*
*அஸாமாந்யம் மந்யே ஸரஸிஜம் இதம் தே பதயுகம்॥*

காமாக்ஷி—காமாக்ஷியே !, பங்கௌகம்—பாப சமூகத்தை (சேற்றை), துநாநம்—போக்கடிப்பதும், கண்டக-குலை:- (முட்களால்) துஷ்டர்களின் கூட்டங்களால், பரம் அஸுலபம்—அடையவே முடியாததாயும், அநிஶம்—எப்போதும், அபராதீநம்—வேருென்றுக்கும் பராதீனமல்லாத, விகாஸ-வ்யாஸங்கம் - மலர்ச்சியின் ஸம்பந்தத்தை, விததத் - அடைவதும், நக-இந்து - நகங்களென்னும் சந்திரனுடைய, ஜ்யோத்ஸ்நாபி: - நிலாவினுல், விஸத-ருசி-தெளிவான காந்தியையுடையதுமான, தே—உன்னுடைய, இதம் பத-யுகம்—இந்த இரண்டு பாதங்களும், நிதராம்—முற்றிலும், அஸாமாந்யம் – அபூர்வமான (வேறுபட்டதான), ஸரஸிஜம்—தாமரை என்று, மந்யே—நினைக்கிறேன்.

காமாக்ஷியே ! பங்கத்தைப் போக்குவதும், முட்களுக்கு முற்றிலும் ஸுலபமில்லாததும், வேருென்றுக்குப் பராதீனமில்லாததும், இரவு பகலென்னும் பேதமின்றி எப்போதும் மலர்ச்சியின் ஸம்பந்தத்தை அடைவதும், நகங்களென்னும் சந்திரனுடைய நிலாவினுல் காந்தியைப் பெறுவதுமான உன்னுடைய இரண்டு பாதங்களும் ஒரு விலக்ஷணமான தாமரையென்றே கருதுகிறேன்.

பாதங்களை தாமரைக்கு சமானமாகச் சொல்லுவது வழக்கம். ஆனுல் தேவியின் பாதங்களில் தாமரை புஷ்பங்களுக்கு இராத தனமைகளே இருக்கிறபடியால் அவற்றை ஒரு தனியான (முற்றிலும் புதிய விலக்ஷணமாய் மாறுபட்ட) தாமரையாகச் சொல்லவேண்டும். தாமரை சேற்றில் பிணக்கும் ; பாதங்கள் சேற்றை (பாபத்தை)ப் போக்குகின்றன. தாமரை முட்களோடு இருக்கும் ; திருவடிகள் முட்கள் போன்ற துஷ்டர்களால் சமீபிக்கவும் முடியாதவை. தாமரைப் புஷ்பம் சந்திரனெளியைக் கண்டு வாடும் ; இவையோ நகமென்னும் சந்திரனெளியில் ஒளிபெற்றுத் திகழ்கின்றன. கமலம் ஜலத்தை அடுத்தே மலரும் ; தேவியின் பாதங்களோ ஒன்றையும் அடுக்காது. ஸ்பாவமாய் உள்ள மலர்ச்சியையுடையது. இக்குணங்களால் பாதங்கள் உலகிலிருக்கும் தாமரையைக் காட்டிலும் வேறுபட்ட ஒரு விலக்ஷணமான தாமரை என்று நினைக்கிறேன் என்கிருர். (68)

करीन्द्राय द्रुह्यत्यलसगतिलीलासु विमलैः
पयोजैर्मात्सर्यं प्रकटयति कामं कलयते ।
पदाम्भोजद्वन्द्वं तव तदपि कामाक्षि हृदयं
मुनीनां शान्तानां कथमनिशमस्मै स्पृहयते ॥ ६९ ॥

**ரீந்த்ராய த்ருஹ்யதி அலஸ-கதி-லீலாஸு விமலை:**
**பயோஜை: மாத்ஸர்யம் ப்ரகடயதி காமம் கலயதே ।**
**பதாம்போஜ-த்வந்த்வம் தவ ததபி காமாக்ஷி! ஹ்ருதயம்**
**முநீநாம் சாந்தாநாம் கதம் அநிசம் அஸ்மை**
**ஸப்ருஹயதே ॥**

**காமாக்ஷி**-காமாக்ஷியே !, தவ-உன்னுடைய, பதாம்போஜ த்வந்தம்-தாமரைப்போன்ற இரண்டு பாதங்களும், அலஸ-கதி-லீலாஸு-மெள்ள நடப்பது என்கிற லீலைகளில், கரீந்த்ராய-சிறந்த யானையையும், த்ருஹ்யதி-வெல்லுகிறது (துரோஹம் செய்கிறது); விமலை:-மாசற்ற, பயோஜை:-தாமரைகளோடு மாத்ஸர்யம் – அஸூயையை, ப்ரகடயதி - வெளியிடுகிறது ; காமம் - ஆசையை, கலயதே - உண்டுபண்ணுகிறது ; ததபி-அப்படியிருந்தபோதிலும், சாந்தாநாம் – சாந்தியைப்பெற்ற, முநீநாம்-ரிஷிகளுடைய, ஹ்ருதயம்- மனது, கதம்–எப்படி, அநிசம்-எப்போதும், அஸ்மை-இதை, ஸப்ருஹயதே–விரும்புகிறது.

காமாக்ஷி ! உன்னுடைய சரணங்கள் இரண்டும் மெதுவாக நடப்பது என்கிற லீலையில் சிறந்த யானையையும் பகைக்கின்றன (வெல்லுகின்றன). மாசற்ற தாமரைகளோடு மாத்ஸர்யத்தை அடைகின்றன. ஆசையை உண்டுபண்ணுகின்றன. அப்படியிருந்தபோதும் சாந்தரான ரிஷிகளின் ஹ்ருதயம் எப்போதும் ஏன் இவற்றை விரும்புகின்றது ?

துரோகம், அஸூயை, காமம் முதலான துர்குணங்களையுடைய பாதங்களை சாந்தி குடிகொண்ட மனத்திரான ரிஷிகள் விரும்புகிறார்கள். அதெப்படிக்கூடும் ? என்று கேட்கிறார். (69)

निरस्ता शोणिम्ना चरणकिरणानां तव शिवे
समिन्धाना संध्यारुचिरचलराजन्यतनये ।
असामर्थ्यादेनं परिभवितुमेतत्समरुचां
*सरोजानां जाने मुकुलयति शोभां प्रतिदिनम् ॥ ७० ॥

---

*सरोजानां शोभां मुकुलयति कामाक्षि सततम् என்றும்,
मुहुःसायं सायं मुकुलयति कामाक्षि कमलम् என்றும் பாடம்

*நிரஸ்தா சோணிம்நா சரண-கிரணாநாம் தவ சிவே!*
*ஸமிந்தாநா ஸந்த்யா-ருசி: அசல-ராஜந்ய-தநயே!*
*அஸாமர்த்யாத் ஏநம் பரிபவிதும் ஏதத்-ஸம-ருசாம்*
*ஸரோஜாநாம் ஜாநே முகுலயதி சோபாம் ப்ரதிதினம்"*

அசல-ராஜந்ய-தநயே-பர்வதராஜகுமாரியே! சிவே-மங்கள ஸ்வரூபிணி! தவ-உன்னுடைய, சரண-கிரணாநாம்-பாத காந்திகளுடைய, சோணிம்நா-சிவப்பு வர்ணத்தால், நீரஸ்தா-அவமானம் செய்யப்பட்டதும், ஸமிந்தாநா-அதனுல் உண்டான கோபத்திஞல் விருந்தியடைந்ததுமான, ஸந்த்யா ருசி:-ஸந்தியாகாலத்தின் சோபை, ஏநம்-இதை, பரிபவிதும்-அவமானப்படுத்துவதற்கு, அஸாமர்த்யாத்-ஸாமர்த்தியமில்லாமையால், ஏதத்-ஸம-இதற்கு ஸமானமான, ருசாம்-காந்தியையுடைய, ஸரோஜாநாம்-தாமரைப் புஷ்பங்களின், ஶோபாம்-சோபையை, ப்ரதிதிநம்-ஒவ்வொருநாளும், முகுலயதி-மூடிக்கொள்ளும்படி செய்கிறது, ஜாநே-(என்று) நான் அறிகிறேன்.

மங்களஸ்வரூபிணியான பர்வதராஜதனயே! உன்பாதங்களின் சிவந்த காந்தியால் அவமானப்படுத்தப்பட்டு கோபத்துடன் விருத்தியடைகிற ஸந்தியாகாலத்தின் சோபை இதை அவமானப்படுத்த ஸாமர்த்தியமில்லாமல், இதற்கு ஸமமான காந்தியுள்ள தாமரைப் புஷ்பங்களின் சோபையை ஒவ்வொரு நாளும் மூடிக்கொள்ளும்படி செய்கிறது.

ஸந்தியாகாலம் வந்ததும் தாமரைகள் மூடிக்கொள்ளுவது ஏன்? என்பதற்கு ஒரு ஹேதுவைக் காட்டுகிருர். அம்பிகையின் சிவந்த பாதங்கள் சிவப்பு வர்ணத்தையுடைய ஸந்தியா காலத்தைக் காட்டிலும் அழகாயிருக்கின்றன. ஆதலால் அழகில் தோற்ற ஸந்தியா சோபைகள் பாதங்களுக்கு ஒரு கெடுதியையும் விளைவிக்க சக்தியற்றவைகளாய் இருக்கின்றன. ஆயினும் தன் கோபத்தைத் தீர்த்துக்கொள்ளுவதற்காக பாதங்களைப் போன்ற பொருள்களையாவது ஜயிப்போம் என்று பாதங்கள்போல் சிவந்து அழகாயிருக்கும் தாமரைப் புஷ்பங்களை மூடிக்கொள்ளும்படி செய்கிறது என்கிருர். (70)

उपादिक्षद्दाक्ष्यं तव चरणनाम्ना गुरुरसौ
मरालानां शङ्के मसृणगतिलालित्यसरणौ ।
अतस्ते निस्तन्द्रं नियतममुना सख्यपदवीं
प्रपन्नं पाथोजं प्रति दधति कामाक्षि कुतुकम् ॥ ७१ ॥

**உபாதிக்ஷத் தார்க்ஷ்யம் தவ சரண-நாமா குரு: அஸௌ மராளாநாம் சங்கே மஸ்ருண-கதி-லாலித்ய-ஸரணௌ! அதஸ்தே நிஸ்தந்த்ரம் நியதம் அமுநா ஸக்ய-பதவீம் ப்ரபந்நம் பாதோஜம் ப்ரதி தததி காமாக்ஷி குதுகம் ॥**

**காமாக்ஷி**-காமாக்ஷியே! தவ-உன்னுடைய, சரண-நாமா-பாதமென்று பெயருள்ள, அஸௌ குரு:-இந்த குரு, மராளா நாம்-ஹம்ஸங்களுக்கு, மஸ்ருண-கதி-அழகிய நடையின், லாலித்ய ஸரணௌ - மனோஹரமான வழியில். தார்க்ஷ்யம்-ஸா மர்த்தியத்தை, உபாதிக்ஷத் - உபதேசித்திருக்கிறார் என்று, சங்கே-(நான்) நினைக்கிறேன், அத:-ஆகையினாலேதான், தே-அந்த ஹம்ஸங்கள், அமுநா-இந்த பாதத்தோடு, ஸக்ய-பதவீம்-ஸ்நேகத்தன்மையை (ஒற்றுமையை), ப்ரபந்நம்-அடைந்திருக்கும், பாதோஜம் ப்ரதி-தாமரை பூவிடம், நிஸ்தந்த்ரம்-சோம்பலின்றி, நியதம் - எப்போதும, குதுகம் - ஆவலை, தததி - காட்டுகின்றன.

காமாக்ஷியே! உன்னுடைய பாதமென்று பெயருள்ள இந்த குரு ஹம்ஸங்களுக்கு அழகிய நடையின் மனோஹரமான வழியில் ஸாமர்த்தியத்தை உபதேசித்திருக்கிறார் என்று எண்ணுகிறேன். ஆகையால்தான் அந்த ஹம்ஸங்கள் இந்தப்பாதத்தோடு ஒற்றுமை அடைந்திருக்கும் தாமரைப் பூவிடம் சோம்பலின்றி எப்போதும் ஆவலுடன் இருக்கின்றன.

அம்பிகையின் நடையழகைப் பார்த்தால் அழகிய நடை உள்ளவைகளாகச் சொல்லப்படும் ஹம்ஸங்களும் அவளிடமிருந்து தான் கற்றுக்கொண்டிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. தங்களுக்குக் குருவான பாதத்தோடு ஸமமாயிருக்கும் தாமரைப் புஷ்பத்தைக் கண்டதும் அந்த குருபக்தியாலேயே ஹம்ஸம் அதனிடம் அநுதோஷத்தைக் காட்டுகிறது. (71)

दधानैः संसर्गं प्रकृतिमलिनैः षट्पदकुलै-
द्विजाधीशश्लाघाविधिषु विदधद्भिर्मुकुलताम् ।
रजोमिश्रैः पद्मैर्नियतमपि कामाक्षि पदयो
विरोधस्ते युक्तो विषमशरवैरिप्रियतमे ॥ ७२ ॥

*ததாநை: ஸம்ஸர்க்கம் ப்ரக்ருதி-மலிநை: ஷட்-பத-குலை:*
*த்விஜா-தீசச்லாகா-விதிஷு விததத்பி: முகுலதாம் ।*
*ரஜோ-மிச்ரை: பத்மை: நியதம் அபி காமாக்ஷி! பதயோ:*
*விரோத: தே யுக்தோ விஷம-சர-வைரி-ப்ரிய-தமே ॥*

விஷம-சர—மன்மதனுக்கு, வைரி-விரோதியான சிவனுடைய ப்ரியதமே-பத்னியே! காமாக்ஷி—காமாக்ஷி! ப்ரக்ருதி—ஸ்வபாவத்திலேயே, மலிநை:—அழுக்குள்ளவைகளான, ஷட் பத குலை:—வண்டுக்கூட்டங்களோடு, ஸம்ஸர்க்கம்-சேர்க்கையை ததாநை: — பெற்றிருப்பவைகளும், த்விஜாதீச — சந்திரனை ச்லாகா-விதிஷு-சிலாகிக்கும் விஷயத்தில், முகுலதாம்—ஸந்தோஷமின்மையை, விததத்பி:—காட்டுகிறவைகளும், ரஜோ-மிச்ரை:-ரஜஸ்ஸோடுகூடியவைகளுமான, பத்மை-தாமரைப் புஷ்பங்களோடு, நியதம் - எப்போதும், தே பதயோ: — உன் பாதங்களுக்கு, விரோத:அபி—விரோதம் இருப்பதும், யுக்தம்—நியாயம்தான்.

விஷமமான பாணங்களையுடைய மன்மதனுக்கு விரோதியான பரமசிவனின் பத்னியே! காமாக்ஷி! ஸ்வபாவத்திலேயே அழுக்குள்ளவைகளான வண்டுகளோடு சேர்க்கையைப் பெற்றிருப்பவைகளும், த்விஜாதிசர்களுடைய போற்றத்தகுந்த கார்யங்களில் அத்ருப்தியைக் காட்டுகிறவைகளும், ரஜஸ்ஸோடு கூடியவையுமான தாமரைப் புஷ்பங்களோடு எப்போதும் உன் பாதங்களுக்கு விரோதம் இருப்பது நியாயமே.

விஷம—சர-வைரி-ப்ரியதமே—விஷமமாய் அதாவது ஐந்து பாணங்களையுடையவன் பஞ்சபாணன மன்மதன். அவனை எரித்த சிவபெருமானின் பிரிய தமையான காமாக்ஷியே

ப்ரக்ருதி-மலிநை:—ஸ்வபாவத்தாலே வண்டுகள் (மலின-) கறுப்பாயிருக்கின்றன. மலின என்றால் அழுக்குள்ள, தோஷமுள்ள என்னும் பொருள்.

த்விஜாதீச — ச்லாகா - விதிஷு முகுலதாம் விததத்பி:—சந்திரன் உதித்ததும் தாமரைகள் மகிழ்ந்து மலர்வதை நிறுத்தி வெறுப்புள்ளவை போல மூடிக்கொள்ளுகின்றன. த்விஜாதீச-ச்லாகா விதிஷு-பிராமணர்களுடை நல்ல கார்யங்களைக்கண்டு உகக்கவேண்டியதற்கு மாறாக தாமரை வெறுப்படைகிறது என்றும் ஒரு பொருள். பாதமோ, நககாந்தியாகிற சந்திரிகையில் நல்ல மலர்ச்சியைப் பெற்றிருக்கிறது.

*ரஜோமிச்ரை :—* ரஜோகுணத்தோடு கூடியவை, மகரந்தப் பொடியோடு கூடியவை என்றும் பொருள்.

தாமரைப் புஷ்பம் கறுத்த வண்டுகளால் சூழப்பட்டும், சந்திரனைக்கண்டு மூடிக்கொண்டும், மகரந்தப்பொடி நிறைந்தது மாயிருக்கும். சப்தசித்ரத்தினல் இங்கு தாமரைப் புஷ்பம் தோஷமுள்ளவர்களோடு கூடியும் சந்திரனைக் கண்டதும் வாடியும் (ரஜஸ்) மகரந்தப்பொடியால் (ரஜோ குணத்தினல்) நிரம்பியதுமாயிருக்கிறது என்று சொல்லி, எப்போதும் சுத்தமாயும் நககாந்தியாகிற சந்திரிகை யிருக்கும்போது நன்கு மலர்ந்தும் ஸத்வகுணமே நிரம்பியதுமான தேவியின் பாதங்கள் அதைத் த்வேஷிப்பது யுக்தமே என்கிறார். (72)

**कवित्वश्रीमिश्रीकरणनिपुणौ रक्षणचणौ**
**विपन्नानां श्रीमन्नलिनमसृणौ शोणकिरणौ ।**
**मुनीन्द्राणामन्तःकरणशरणौ मन्दसरणौ**
**मनोज्ञौ कामाक्ष्या दुरितहरणौ नौमि चरणौ ॥ ७३ ॥**

*கவித்வ-ஸ்ரீ-மிச்ரீ-கரண-நிபுணௌ ரக்ஷண-சணௌ*
*விபந்நாநாம் ஸ்ரீமந்-நளிந-மஸ்ருணௌ சோண-*
*கிரணௌ !*
*முநீந்த்ராணாம் அந்த:கரண-சரணௌ மந்த-ஸரணௌ*
*மநோஜ்ஞௌ காமாக்ஷ்யா: துரித-ஹரணௌ நௌமி*
*சரணௌ ॥*

கவித்வ-ஸ்ரீ-கவிதையென்னும் லக்ஷ்மியை, மிச்ரீ-கரண—அதிகப்படுத்துவதில், நிபுணௌ - ஸாமர்த்தியமுள்ளவைகளும், விபந்நாநாம்-கஷ்டப்படுபவர்களை, ரக்ஷண-சணௌ-ரக்ஷிக்கும் ஸாமர்த்தியமுள்ளவைகளும். ஸ்ரீமந்-நளிந-(மலர்ந்து) அழகிய தாமரைபோன்ற, மஸ்ருணௌ - சோபையையுடையவைகளும், சோண கிரணௌ — சிவந்தகிரணங்களையுடையவைகளும், முநீநாம்-முனிவர்களுடைய, அந்தக்கரண-மனத்தை சரணௌ-இருப்பிடமாகவுடையவைகளும், மந்த—மெதுவான, ஸரணௌ-நடையுடையவைகளும், மநோஜ்ஞௌ-அழகுள்ளவைகளும், துரித—பாபங்களை, ஹரணௌ-போக்கடிப்பவைகளுமான, காமாக்ஷ்யா: - காமாக்ஷியினுடைய, சரணௌ—பாதங்களை, நௌமி—நமஸ்கரிக்கிறேன்.

கவிதையென்னும் லக்ஷ்மியை விருத்திசெய்வதில் ஸாமர்த்தியமுள்ளவைகளும், கஷ்டப்படுகிறவர்களை ரக்ஷிக்கும் வல்லமையுள்ளவைகளும், அழகிய தாமரைபோன்ற சோபையையுடையவைகளும், சிவந்த கிரணங்களையுடையவைகளும், முனிவர்களுடைய மனதை வாஸஸ்தானமாக உடையவைகளும், மெதுவான நடையுள்ளவைகளும், மனோஹரமானவைகளும், பாபங்களைப் போக்கடிப்பவைகளுமான காமாக்ஷியினுடைய பாதங்களை வணங்குகிறேன் (73)

परस्मात्सर्वस्मादपि च परयोर्मुक्तिकरयो-
नखश्रीभिर्ज्योत्स्नाकलिततुलयोस्ताम्रतलयोः ।
निलीये कामाक्ष्या निगमनुतयोर्नाकिनतयो-
निरस्तप्रोन्मीलन्नलिनमदयोरेव पदयोः ॥ ७४ ॥

***பரஸ்மாத் ஸர்வஸ்மாத் அபிச பரயோ: முக்தி-கரயோ:
நக-ஸ்ரீபி: ஜ்யோத்ஸநா-கலித-துலயோ: தாம்ர தலயோ!
நிலீயே காமாக்ஷ்யா நிகம-நுதயோ: நாகி-நதயோ :
நிரஸ்த-ப்ரோந்-மீலந்-நளித-மதயோ : ஏவ பதயோ: "***

பரஸ்மாத் – சிறந்தவைகளான, ஸர்வஸ்மாத் அபி – எல்லாவற்றைக்காட்டிலும், பரயோ:–உயர்ந்தவைகளாயும், முக்தி-கரயோ: – மோக்ஷத்தைக்கொடுக்கிறவைகளாயும். நக-ஸ்ரீபி:- நககாந்திகளால், ஜ்யோத்ஸ்நா-குலித-நிலாவுக்கு, துலயோ:– ஒத்தவைகளாயும், தாம்ர-தலயோ: –சிவந்த பாகங்களையுடையதாயும், நிகம–வேதங்களாலே, நுதயோ:–துதிகப்பட்டவைகளாயும், நாகி–தேவதைகளால், நதயோ:-வணங்கப்பட்டவைகளாயும். நிரஸ்த–அவமதிக்கப்பட்ட, ப்ரோந்மீலத்–மலருகிற, நளிந–தாமரைப் புஷ்பங்களின், மதயோ:-கர்வத்தையுடையவைகளுமான, காமாக்ஷ்யா: – காமாக்ஷியினுடைய, பதயோ: ஏவ–பாதங்களிலேயே, நிலீயே–மறைகிறேன்.

சிறந்த எல்லாப் பொருள்களைக்காட்டிலும் உயர்ந்தவைகளும், முக்தியைக் கொடுக்கின்றவைகளும், நககாந்திகளால் நிலாவுக்கு ஒப்பானவைகளும், சிவந்த அடிப்புறத்தையுடையவைகளும் வேதங்களால் துதிக்கப்படுகின்றவைகளும், தேவதைகளால் வணங்கப்படுகின்றவைகளும், மலர்ந்த தாமரைகளின் கர்வத்தையும் அடக்கவல்லவைகளுமான காமாக்ஷியின் பாதங்களிலேயே லயித்துப்போகிறேன். (74)

स्वभावादन्योन्यं किसलयमपीदं तव पदं
म्रदिम्ना शोणिम्ना भगवति दधाते सदृशताम् ।
वने पूर्वस्येच्छा सततमवने किं तु जगतां
परस्येत्थं भेदः स्फुरति हृदि कामाक्षि सुधियाम् ॥ ७५ ॥

**ஸ்வபாவாத் அந்யோந்யம் கிஸலயம் அபி இதம் தவ பதம்**
**ம்ரதிம்நா சோணிம்நா பகவதி! ததாதே ஸத்ருசதாம்।**
**வநே பூர்வஸ்யேச்சா ஸததம் அவநே கிந்து ஜகதாம்**
**பரஸ்யேத்தம் பேத : ஸ்புரதி ஹ்ருதி காமாக்ஷி! ஸுதியாம்॥**

பகவதி-ஸகல குணங்களும் பொருந்திய, காமாக்ஷி-காமாக்ஷியே! ஸ்வபாவாத்-இயற்கையிலேயே, ம்ரதிம்நா-மிருதுவாயிருப்பதாலும், சோணிம்நா-சிவப்பினுலும், கிஸலயம்-தளிரும், இதம் தவ பதம் அபி-இந்த உன்பாதமும், அந்யோன்யம்-ஒன்றுக்கொன்று, ஸத்ருசபீதாம்-ஸமானமானதன்மையை, ததாநே - அடைந்திருக்கின்றன, கிந்து - ஆனல் பூர்வஸ்ய - முன்சொன்ன தளிருக்கு, வநே-இச்சா - காட்டில் ஆசை, பரஸ்ய-பின் சொன்ன உன்பாதத்திற்கு, ஸததம்-எப்போதும், ஜகதாம்-உலகங்களுடைய, அவநே-ரக்ஷிப்பதிலேயே (ஆசை), இத்தம் பேத:-இம்மாதிரியாக இருக்கும் வித்தியாஸம், ஸுதியாம்-புத்திமான்களுடைய, ஹ்ருதி-ஹ்ருதயத்தில், ஸ்புரதி-தோன்றுகிறது.

ஸகல குணங்களும் பொருந்திய காமாக்ஷியே! ஸ்வபாவத்திலேயே ஏற்பட்டிருக்கும் மென்மை சிவப்பு இவற்ருல் தளிரும் உன் பாதமும் பரஸ்பரம் ஒற்றுமையுள்ளவைகளாயிருக்கின்றன. ஆனல் முந்தியதற்கு (தளிருக்கு) வனத்தில் (காட்டில்) ஆசை; பிந்தியதுக்கு (பாதத்திற்கு) அவனத்தில் (ரக்ஷணத்தில்) இந்த பேதம் ஞானிகளுடைய மனதில் ஸ்புரிக்கின்றது.

தேவியின் பாதங்களுக்கும் துளிர்களுக்கும் மிருதுவாயிருப்பது, சிவப்பு முதலான சில விஷயங்களில் ஒற்றுமையிருந்தாலும் ஒரு விதத்தில் பேதம் இருக்கிறது; அதை புத்திமான்கள் அறிவார்கள். அப்பேதமாவது-துளிருக்குவனத்தில் (காட்டில்) ஆசை; அதாவது காடு முதலான மரங்களுள்ள இடங்களிலேயே இருக்கும். உன்

பாதங்களுக்கோ வெனில் உலகத்தில் அவனத்தில் ( ரக்ஷையில் ) ஆசை 'அவனம்' என்பதற்கு 'வனமில்லாதது' என்றும் 'ரக்ஷணம்' என்றும் பொருள். (75)

कथं वाचालोऽपि प्रकटमणिमञ्जीरनिनदैः
सदैवानन्दार्द्रान्विरचयति वाचंयमजनान् ।
प्रकृत्या ते शोणच्छविरपि च कामाक्षि चरणौ
मनीषानैर्मल्यं कथमिव नृणां मांसलयते ॥ ७६ ॥

***கதம் வாசாலோ-ऽபி ப்ரகட-மணி-மஞ்ஜீர-நிநதை:***
***ஸதைவா-ऽநந்தார்த்ராந் விரசயதி வாசம்யம-ஜநாந் ।***
***ப்ரக்ருத்யா தே சோணச்-சவி: அபி ச காமாக்ஷி சரணௌ***
***மநீஷா-நைர்மல்யம் கதம் இவ ந்ருணாம் மாம்ஸலயதே***

காமாக்ஷி–காமாக்ஷியே ! தே சரணௌ–உன்பாதம், ப்ரகட-மணி-அழகியரத்தினங்களிழைத்த, மஞ்ஜீர-காலணிகளுடைய, நிநதை:–சப்தங்களால், வாசால: அபி–அதிகப்பேச்சுள்ளதாயிருந்தபோதிலும், வாசம்யம–வாக்கை அடக்குகிற, ஜநாந்–மனிதர்களான ரிஷிகளை, ஸதைவ – எப்போதும், ஆநந்த-ஆநந்தத்தினுல். ஆர்த்ராந்-நனைந்தவர்களாக, கதம்-எப்படி, விரசயதி–செய்கிறது? அபி ச–மேலும், ப்ரக்ருத்யா–ஸ்வபாவத்தாலேயே, சோணச்சவி:அபி–சிவப்பான காந்தியையுடையதாயிருந்தபோதிலும், ந்ருணாம் – மனிதர்களுடைய, மநீஷா-நைர்மல்யம் – புத்தியின் தெளிவை ( வெண்மையாயிருத்தலை ) கதம் இவ - எப்படித்தான், மாம்ஸலயதே - விருத்திபண்ணுகிறது ?

காமாக்ஷியே ! உன் பாதம் அழகிய ரத்னங்களிழைத்தகால் சிலம்புகளின் ஒலியினுல் அதிகப்பேச்சுள்ளதாயிருக்கிறது; அவ்விதமிருந்தும் மௌனத்தையே விரும்பும் பெரியோர்களை எப்படி ஆநந்தத்தில் மூழ்கினவர்களாகச் செய்கிறது ? மேலும் ஸ்வபாவத்திலேயே சிவந்த காந்தியுள்ளதாயிருந்தும் மனிதர்களின் புத்திக்கு வெண்மையை எப்படித்தான் விருத்தி செய்கிறது ?

மௌனமாய் தியானத்தில் இருக்கும் முனிவர்கள் நிச்சப்தமான ஏகாந்தத்தை விரும்புவார்களேயொழிய சப்தத்தை விரும்பமாட்டார்கள்; அப்படியிருந்தும் ரத்தனங்களிழைத்த தேவியின் காலணிகளின் சப்தம் அவர்களுக்கு மகிழ்ச்சியையே அளிக்கிறது; சிவப்புவர்ணம் வஸ்துக்களை சிவப்பாக்குமேயொழிய வெளுப்பாக்

காது; பாதத்தின் சிவப்பு வர்ணமோ புத்திக்கு வெண்மையை (சுத்தியை அதாவது தெளிவை) அளிக்கிறது. இது இரண்டும் எப்படி நடக்கக்கூடும் என்கிறார்- (76)

चलत्तृष्णावीचीपरिचलनपर्याकुलतया
*मुहुर्भ्रान्त्वा तान्तः परमशिववामाक्षि परवान् ।
तितीर्षुः कामाक्षि प्रचुरतरकर्माम्बुधिममुं
कदाहं लप्स्ये ते चरणमणिसेतुं गिरिसुते ॥ ७७ ॥

*சலத்-த்ருஷ்ணா-வீசீ-பரிசலந-பர்யாகுல-தயா*
*முஹு: ப்ராந்த்வா தாந்த: பரமசிவ-வாமாக்ஷி! பரவாந் ।*
*திதீர்ஷு: காமாக்ஷி! ப்ரசுர-தர-கர்மா-'ம்புதிம் அமும்*
*கதா அஹம் லப்ஸ்யே தே சரண-மணி-ஸேதும்*
*கிரி-ஸுதே ॥*

கிரிஸுதே – பர்வதகுமாரியே! பரமசிவ – பரமசிவனுடைய. வாமாக்ஷி–பத்தினியே! காமாக்ஷி-காமாக்ஷி! சலத்-வீசுகின்ற, த்ருஷ்ணா–ஆசை என்கிற, வீசி–அலைகளினுடைய, பரிசலன–மோதுவதால் (உண்டான), பர்யாகுலதயா – கலக்கத்தால், முஹு:–அடிக்கடி, ப்ராந்த்வா–அலைந்து, தாந்த:-களைப்படைந்தவனும், பரவாந்-பராதீனமாயிருப்பவனும், அமும்-இந்த, ப்ரசுர-தர–மிகவும விசாலமானது, கர்மாம்புதிம்–கர்மமென்னும் ஸமுத்திரத்தை, திதீர்ஷு: – கடக்க ஆசையுள்ளவனுமான, அஹம்–நான், சரண–(உன்) பாதமாகிற, மணி–கல்லிழைத்து அழகான, ஸேதும்–அணையை, கதா–எப்போது, லப்ஸ்யே–அடையப்போகிறேனோ ?

பார்வதியே ! பரமசிவன் பத்னியே ! காமாக்ஷி ! மேன் மேல் எழுகின்ற ஆசை என்னும் அலைகள்; மோதுவதால் எப்போதும் அலைந்து களைப்படைந்தவனும், ஸ்வாதீனமில்லாதவனும் மிகப் பெரியதான இந்த கர்மம் என்னும் கடலைக் கடக்க ஆசையுள்ளவனுமான நான் உன் பாதமாகிற ரத்னஸேதுவை எப்போது அடைவேனோ ?

கர்மம் என்பது பெரிய ஸமுத்ரம்; மேல்மேல் எழும்புகிற ஆசைகளே அதிலுள்ள அலைகள்; இவ்வலைகளால் மோதுண்டு

---

*मुहुर्भ्रान्तः என்றும் பாடம்

அலைந்து சக்தியற்றுக் களைப்படையும் எனக்கு உன் பாதங்கள் இச் சமுத்திரத்தைக் தாண்ட ஒரு கல்லிழைத்த ஸேதுபோல் இருக்கின் றன. (77)

विशुष्यन्त्यां प्रज्ञासरिति दुरितग्रीष्मसमय-
प्रभावेण क्षीणे सति मम मनःकेकिनि शुचा ।
त्वदीयः कामाक्षि स्फुरितचरणाम्भोदमहिमा
नभोमासाटोपं नगपतिसुते किं न कुरुते ॥ ७८ ॥

*விசுஷ்யந்த்யாம் ப்ரஜ்ஞா-ஸரிதி துரித-க்ரீஷ்ம-ஸமய-
ப்ரபாவேண க்ஷீணே ஸதி மம மந:-கேகிநி சுசா
த்வதீய: காமாக்ஷி! ஸ்புரித-சரணாம்போத-மஹிமா
நபோ-மாஸா-''டோபம் நக-பதி-ஸுதே! கிம் ந
குருதே ॥*

நகபதிஸுதே-பர்வதராஜகுமாரியே ! காமாக்ஷி-காமாக்ஷி ! துரித-பாபமாகிற, க்ரீஷ்ம-ஸமய-கோடைகாலத்தின், ப்ரபாவேண-ப்ரபாவத்தினுல், ப்ரஜ்ஞா-ஸரிதி-ஞானம் என்னும் ஆறு விசுஷ்யந்த்யாம் - காய்ந்துபோனபோதும், மம-என்னுடைய, மன:-கேகிநி-மனது என்னும் மயில், சுசா-துக்கத்தினுல் (உஷ்ணத்தினுல்) க்ஷீணே ஸதி-வாடியிருக்கும் போதும், த்வதீய-உன்னுடைய, ஸ்புரித-ஒளிவீசுகின்ற, சரண-பாதமென்கிற, அம்போத-மேகத்தின், மஹிமா-மஹிமையானது, நபோ-மாஸ-ஆவணிமாதத்தின், ஆடோபம்-ஆடம்பரத்தை, கிம் ந குருதே-என் செய்யவில்லை !

பர்வதராஜகுமாரியே காமாக்ஷி ! பாபமாகிற கோடைகாலத்தின் பிரபாவத்தினுல் ஞானம் என்னும் ஆறு வறண்டு என் மனமென்னும் மயிலும் துயரத்தால் வாட்டமுற்றிருக்கும் போது, உன் அழகிய பாதமென்கிற மேகத்தின் மஹிமை ஆவணி மாதத்தில் ஆடம்பரத்தை என் செய்கிறதில்லை ?

கோடைகாலத்தில் ஆறுகளும் வறண்டு, மயில்களும் ஸந்தோஷமற்றிருக்கும்; மழைகாலம் வந்தவாறே ஆறுகள் நிறம்பிப் பெருக்கெடுத்தும் மேகங்களைக்கண்டு மயில்கள் தோகையை விரித்தாடிக்கொண்டிருக்கும். என்மனது உன் பாதங்களென்னும் கார் கால மேகத்தைக்காணுமல் துக்கங்கொண்ட மயில்போலிருக்கிறது; ஞானமென்னும் பெருக்கும் நின்றிருக்கிறது; அதைப்போக்கி அருளுவாய். (78)

विनम्राणां चेतोभवनवलभीसीम्नि चरण-
प्रदीपे प्राकाश्यं दधति तव निर्धूततमसि ।
असीमा कामाक्षि स्वयमलघुदुष्कर्मलहरी
विघूर्णन्ती शान्तिं शलभपरिपाटीव भजते ॥ ७९ ॥

விநம்ராணும் சேதோ-பவந-வலபீ-ஸீம்நி சரண-
ப்ரதீபே ப்ராகாச்யம் தததி தவ நிர்தூத-தமஸி ।
அஸீமா காமாக்ஷி! ஸ்வயம் அலகு-துஷ்கர்ம-லஹரீ
விகூர்ணந்தீ சாந்திம் சலப-பரிபாடீ இவ பஜதே ॥

காமாக்ஷி-காமாக்ஷியே ! விநம்ராணும்-நமஸ்கரிப்பவர்களுடைய, சேதோ-பவந-மனதென்னும் வீட்டின், வலபீ-ஸீம்நி-உப்பரிகையில், நிர்தூத-தமஸி – தமஸ்ஸை நீக்குவதாயும், ப்ராகாச்யம்–வெளிச்சத்தை, தததி-கொடுப்பதாயும் இருக்கிற தவ – உன்னுடைய, சரண-ப்ரதீபே - பாதமாகிற தீபத்தில், அஸீமா–எல்லையற்ற, அலகு-துஷ்கர்ம–பெரிய பாபங்களின், லஹரீ-கூட்டமானது (அலை), சலப-பரிபாடீ இவ-விளக்கு விட்டில் பூச்சிகள்போல, ஸ்வயம்–தானகவே, விகூர்ணந்தீ–சுழன்று கொண்டுவந்து விழுகிறது, சாந்திம்-நாசத்தை, பஜதே–அடைகிறது.

காமாக்ஷியே ! உன் பாதமென்னும் விளக்கு வணங்குவோருடைய மனமென்னும் வீட்டின் உப்பரிகையில் இருட்டைப் போக்கி வெளிச்சத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறது. அதில் அலைகள்போல் முடிவில்லாது வரும் பெரிய பாபங்கள் விளக்கு விட்டில் பூச்சிகள்போல தாமாகவே சுழன்று (விழுந்து) நாசத்தை அடைகின்றன.

வீட்டில் இருளை நீக்குவதற்கும் அலங்காரத்திற்காகவும் ஏற்பட்ட விளக்கில் விட்டில் பூச்சிகள் தானகவே மேல்விழுந்து அழிவதுபோல பக்தர்களின் மனதில் ஜ்வலிக்கும் ஞானக்கினியில் துஷ்கர்மங்கள் தாமாகவே விழுந்து நாசமடைகின்றன என்கிறர். (79)

विराजन्ती शुक्तिर्नखकिरणमुक्तामणितते-
र्विपत्पाथोराशौ तरिरपि नराणां प्रणमताम् ।
त्वदीयः कामाक्षि ध्रुवमलघुवह्निर्भववने
मुनीनां ज्ञानाग्नेररणिरयमंघ्रिर्विजयते ॥ ८० ॥

***விராஜந்தி சுக்தி: நக-கிரண-முக்தா-மணி-ததே:***
***விபத்-பாதோ-ராசௌ தரிரபி நராணம் ப்ரணமதாம்!***
***த்வதீய: காமாக்ஷி! த்ருவம் அலகு-வஹ்நி: பவ-வநே***
***முநீநாம் ஜ்ஞாநாக்நே: அரணி-ரயம்-அங்க்ரி: விஜயதே***

காமாக்ஷி-காமாக்ஷியே! த்வதீய:-உன்னுடையதான, அயம் அங்க்ரி:-இந்தப் பாதமானது, நக-கிரண - நககாந்தியாகிற, முக்தாமணி-ததே:-முத்துஸரங்களுக்கு, விராஜந்தீ-விளங்கும் ஓர், சுக்தி:-சிப்பியாயும, ப்ரணமதாம்-நமஸ்கரிக்கிற, நரா ணாம்-மனிதர்களுக்கு, விபத்-பாதோ-ராசௌ-ஆபத்தாகிற கடலில், தரி: அபி-தெப்பமாயும், பவ-வநே-ஸம்ஸாரமென் னும் காட்டில், அலகு-வஹ்நி:-பெரிய நெருப்பாகவும், முநீ நாம்-முனிகளுடைய, ஜ்ஞாநாக்நே:-ஞானமென்னும் அக்னி க்கு, அரணி:-அரணிக்கட்டையாகவும், விஜயதே-விளங்கு கிறது, த்ருவம்-நிச்சயம்.

காமாக்ஷியே! உன்னுடையதான இந்தப் பாதம் நகத்தின் காந்தியென்னும் முத்துக்களுக்கு ஜ்வலிக்கின்ற ஒரு முத்துச்சிப்பி யாகவும், நமஸ்கரிக்கும் மனிதர்களுக்கு ஆபத்து என்னும் கடலில் ஒரு தெப்பமாயும், ஸம்ஸாரமென்னும் வனத்திற்கு காட்டுத்தியாக வும், முனிகளுடைய ஞானமென்னும் அக்னிக்கு அரணிக்கட்டை யாகவும் விளங்குகிறது நிச்சயம்.

சிப்பிப் பூச்சியிலிருந்து ஒளிபொருந்திய நல்முத்துக்கள் உண்டாவதுபோல் உன் பாதங்களில் நிர்மலமான நகங்கள் ஒளி வீசு கின்றன; அண்டினவர்களை ஆபத்தென்னும் கடலினின்றும் கரை யேற்றும் விஷயத்தில் தேவியின் பாதம் ஒரு ஓடம்போல் இருக் கிறது; அரணிக்கட்டையிலிருந்து பரிசுத்தமான அக்னி உண்டா வதுபோல, பாதத்தை தியானம் செய்யும் முனிவர்களுக்கு அதனு லேயே தத்வஜ்ஞானம் உதிக்கிறது; ஸம்ஸாரமென்னும் காட் டுக்கு அதை முழுவதும் அழிக்கவல்ல ஒரு காட்டுத்தீ போன்றும் உளது என்கிருர். (80)

समस्तैः संसेव्यः सततमपि कामाक्षि विबुधैः
स्तुतो गंधर्वस्त्रीसुललितविपञ्चीकलरवैः ।
भवत्या भिन्दानो भवगिरिकुलं जृम्भिततमो-
वलद्रोही मातश्चरणपुरुहूतो विजयते ॥ ८१ ॥

**ஸமஸ்தை: ஸம்ஸேவ்ய: ஸததம் அபி காமாக்ஷி விபுதை:**
**ஸ்துதோ கந்தர்வ-ஸ்த்ரீ ஸுலலித-விபஞ்சீ-கல-ரவை:।**
**பவத்யா பிந்தாநோ பவ-கிரி-குலம் ஜ்ரும்பித-தமோ-**
**பல-த்ரோஹீ மாத:! சரண-புருஹூதோ விஜயதே ॥**

மாத;-தாயே! காமாக்ஷி-காமாக்ஷி! பவத்யா:-உன்னுடைய, சரண-பாதங்களென்னும், புருஹூத:-தேவேந்திரன், ஸமஸ்தை:-எல்லா, விபுதை:-(தேவதை) ஞானிகளாலும், ஸததம் அபி-எப்போதும், ஸம்ஸேவ்ய:-ஸேவிக்கப்படுபவனும், கந்தர்வ-ஸ்திரீ-கந்தர்வ ஸ்திரீகளின், ஸுலலித-விபஞ்சீ-உத்தம வீணைகளின், கல-ரவை:-இனிய சப்தத்தால், ஸ்துத:-துதிக்கப்பட்டவனும், பவ-கிரி-குலம்-ஸம்ஸாரமாகிற மலைகளை, பிந்தாந:-பிளப்பவனும், ஜ்ரும்பித-விருத்தியடைகிற, தம:-அஜ்ஞான மென்னும், வல-வல என்னும் அஸுரனை, த்ரோஹீ-கொல்லுபவனுகவும், விஜயதே-விளங்குகிறுன்.

தாயே! காமாக்ஷி! உன்னுடைய பாதமாகிற தேவேந்திரன் எல்லா ஞானிகளாலும் (தேவர்களாலும்) ஸேவிக்கப்படுகிறவனுகவும், கந்தர்வ ஸ்திரீகளின் உத்தம வீணைகளின் மதுரமான ஒலியினுல் துதிக்கப்படுகிறவனுகவும், ஸம்ஸாரமென்னும் பர்வதங்களின் கூட்டங்களைப் பிளப்பவனுகவும் விருத்தியடைகின்ற அஜ்ஞானமாகிற வலன் என்னும் அஸுரனைக் கொல்லுகிறவனுகவும் விளங்குகிறுன்.

இதில் அம்பிகையின் பாதங்களை தேவேந்திரனுக்கு ஒப்பிடுகிறுர். தேவேந்திரன் (விபுதர்களால்) தேவர்களால் சூழப்பட்டும், கந்தர்வ ஸதிரீகளுடைய அழகிய வீணைகளின் இனிய ஒலியால் துதிக்கப்பட்டும்; பர்வதங்களைப் பிளந்தெரிகிறவனும், வலன் என்னும் அஸுரனைக் கொல்பவனும் இருக்கிறுன். பாதங்கள் (விபுதர்கள்) ஞானிகளால் சூழப்பட்டும், கந்தர்வ ஸ்திரீகள் போல அழகிய மாதர்களின் வீணு கானத்தால் துதிக்கப்பட்டும், மலை போன்ற நம் பாவங்களை அழிப்பதாயும் இருக்கின்றன.

பவ-கிரி-குலம் பிந்தாந:— முன் காலத்தில் பர்வதங்களுக்கு சிறகுகள் இருந்ததால், அவை பறந்துசென்று நகரங்கள் மீதும் கிராமங்கள் மீதும் உட்கார்ந்து ஊர் ஊராக நாசம் செய்தன. அதனால் துன்புற்ற ஜனங்கள் இந்திரனைப் பிரார்த்திக்க இந்திரன் தன் கூரிய வஜ்ராயுதத்தால் பர்வதங்களின் சிறகுகளை அறுத்து அவற்றைப் பறக்கமுடியாமல் செய்து உலகத்தைக் காப்பாற்றினுன் என்ற கதை ஈண்டு கொள்ளப்பட்டது. (81)

वसन्तं भक्तानामपि मनसि नित्यं परिलस-
द्घनच्छायापूर्णं शुचिमपि नृणां तापशमनम्
नखेन्दुज्योत्स्नाभिः शिशिरमपि पद्मोदयकरं
नमामः कामाक्ष्याश्चरणमधिकाश्चर्यकरणम् ॥ ८२ ॥

*வஸந்தம் பக்தாநாம் அபி மநஸி நித்யம் பரிலஸத்-*
*கநச்சாயா-பூர்ணம் சுசிம் அபி ந்ருணாம் தாப-சமநம்!*
*நகேந்து-ஜ்யோத்ஸ்நாபி: சிசிரம் அபிபத் மோதய-கரம்*
*நமாம: காமாக்ஷ்யா: சரணம் அதிகாச்சர்ய-கரணம் ।*

பக்தாநாம்—பக்தர்களுடைய, மநஸி—மனதில், வஸந் அபி—வஸித்திருந்தாலும், நித்யம்—எப்போதும், பரிலஸத்-விளங்குகிற, கநச்—கனங்களின் (மேகங்களின்), சாயா பூர்ணம்—சாயை நிரம்பியதும், சுசிம் அபி-சுசியாயினும், ந்ருணாம்—மனிதர்களுடைய, தாப-சமநம்—தாபத்தைப் போக்குவதும், நகேந்து-நகமென்னும் சந்திரனின், ஜ்யோத்ஸ்நாபி: - நிலவுகளால், சிசிரம் அபி-சிசிரமாயினும், பத்மோதய-கரம்— தாமரைகளின் அபிவிருத்தியைச் செய்வதும், அதிகாச்சர்ய கரணம்—அதிக ஆச்சர்யத்தைச் செய்வதுமான, காமாக்ஷ்யா:—காமாக்ஷியி னுடைய, சரணம்—பாதங்களை, நமாம:—வணங்குகிறோம்.

பக்தர்களுடைய மனதில் எப்போதும் வஸிப்பதும், அதிக காந்தி நிரமபியதும், நிர்மலமாயும் மனிதர்களின் தாபத்தைப் போக்குவதாயும், நகங்களாகிற சந்திரனின் நிலாவினல் குளிர்ந்த தாயும், தாமரைகளை மலரச்செய்வதாயும் மிகவும் ஆச்சர்யமான பெருமையையுடையதுமான காமாக்ஷியின் பாததததை நமஸ்கரிக் கிறோம்.

வஸந்தமாயினும் அப்போது காணப்படாத மேகக்கூட்டங் களால் நிரம்பியதாயும், கோடைகாலமாயிருந்தாலும் மனிதர்களின் தாபத்தைப் போக்குவதாயும், நிலவோடு கூடிய (தாமரைகளுக்கு விரோதியான) பின்பனிக்காலமாயினும் தாமரைகளை வளரும்படி செய்வதும் இவ்விதம் அநந்தாச்சர்யங்களையுடைய காமாக்ஷிதேவி யின் பாதத்கை வணங்குகிறோம் ?

சப்தசக்தியால் ருதுக்களின் பரஸ்பர விரோதமான தர்மங்கள் அம்பிகையின் பாதங்களில் காணப்படுகின்றன என்று வர்ணிக்கிறார்.

மநஸி வஸந்தம் :- பக்தர்களின் மனதில் வஸிப்பது; வஸந்தருது. பரிலஸத்கநச்சாயாபூர்ணம்—அதிகமான காந்தி பொருந்தியது; வஸந்தருதுவில் மேகங்கள் காணப்படா; இதில் (கந:) மேகங்களின் சாயை நிரம்பியிருக்கிறது;

சுசிம் அபி—பாதங்கள் சுத்தமாயிருக்கின்றன; 'சுசி' என்ருல் கோடைகாலம்; அப்போது தாபம் அதிகமாயிருக்கும் ஆனல் இவை தாபத்தைப் போக்குகின்றன.

நகேந்து ஜ்யோத்ஸ்னபி: சிசிரம்—குளிர்ந்த நககாந்திகளோடு கூடியவை பாதங்கள்; சிசிரருது சந்திரனின் நிலாவைப் பெற்று குளிர்ந்திருக்கிறது.

பத்மோதய-கரம்—குளிர் காலத்தில் தாமரை விருத்தியாகாது; ஆனல் பாதங்கள் தாமரையின் காந்தியைப் பெருக்குகின்றன.

இம்மாதிரியாக ஒரே காலத்தில் இருக்கமுடியாத ருதுக்களின் தர்மங்களையும் ஒருங்கே தேவியின் பாதங்களில் காணலாம் என்கிருர். (82)

कवीन्द्राणां नानाभणितिगुणचित्रीकृतवचः-
प्रपञ्चव्यापारप्रकटनकलाकौशलविधिः* ।
अधः कुर्वन्नब्जं सनकभृगुमुख्यैर्मुनिजनै-
र्नमस्यः कामाक्ष्याश्चरणपरमेष्ठी विजयते ॥ ८३ ॥

*கவீந்த்ராணும் நாநா-பணிதி-குணசித்ரீ-க்ருதவச;*
*ப்ரபஞ்ச-வ்யாபார-ப்ரகடந-கலா கௌசலவிதி:।*
*அத: குர்வந் அப்ஜம் ஸநக-ப்ருகு-முக்யை: முநி-ஜனை:*
*நமஸ்ய: காமாக்ஷ்யா: சரண-பரமேஷ்டீ விஜயதே ।*

கவீந்த்ராணும்—கவிசிரேஷ்டர்களுடைய, நாநா-பணிதி—பல விதமான சொற்களின், குணசித்ரீக்ருத-குணங்களால் சித்தரிக்கப்பட்ட, வச:-ப்ரபஞ்ச—வாக்கென்னும் உலக விஷயமான, வ்யாபார—தொழிலில், ப்ரகடந—வெளிப்படுத்தப்பட்ட, கலாகௌசலவிதி:—ஸாமர்த்தியத்தின் முறைகளையுடையதாயும், அப்ஜம்-தாமரையை, அத:-தனக்குக் கீழ்ப்பட்டதாக, குர்வந்—செய்துகொண்டிருப்பதும், ஸநகப்ருகு முக்யை:—ஸநகர் பிருகு

---

* कौशलनिधिः என்றும் பாடம்.

முதலான, முனிஜனை:-முனிவர்களால், நமஸ்ய:-வணங்கத் தக்கதுமான, காமாக்ஷ்யா:-காமாக்ஷியினுடைய, சரண-பாத மாகிற, பரமேஷ்டீ-பிரம்மதேவன், விஜயதே-விளங்குகிருர்.

காமாக்ஷியின் பாதமென்கிற பிரம்மதேவன் சிறந்த கவிகளின் நாநாவிதமான சொற்களின் குணங்களால் சித்தரிக்கப்பட்ட வாக் ரூப ப்ரபஞ்ச விஷயமான தொழிலில் வெளிப்படுத்தப்பட்ட சிற்ப ஸாமர்த்தியத்தின் முறைகளையுடையவனையும், தாமரையைக் கீழே வைத்துக்கொண்டிருக்கிறவனையும் ஸநகர் பிருகு முதலான முனி ஜனங்களால் வணங்கப்படுகிறவனுகவும் விளங்குகிருன்.

முன் சுலோகத்தில் அம்பிகையின் பாதங்களுக்கு தேவேந் திரனை ஒப்பிடலாம் என்று காட்டி, இதில் அவனுக்கும் பெரியோ னை பிரமதேவன் என்றே கூறலாம் என்கிருர்.

பிரமன் கவிகளுடைய வாக்குக்கு இலக்கான இவ்வுலகை ஸ்ருஷ்டிக்கும் வல்லமை பெற்றவன்; பாதங்கள் தங்கள் பெரு மையைத் துதிக்கும் கவிகளின் வாக்கென்னும் பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கும் வல்லமையுள்ளன. தாமரை பிரமனுக்கு ஆஸன மாதலால் அவன் அதைக் கீழே வைத்திருக்கிருன்; பாதங்கள் செவ்வியிலும் அழகிலும் தாமரையை விஞ்சி அதைக் கீழே இருக் கும்படி செய்கின்றன. பிரமன் ஸநகர் பிருகு முதலான முனிச் சிரேஷ்டர்களால் வணங்கப்படுவது போலவே, பாதங்களும் அவர் களால் வணங்கப்படுகின்றன. (83)

भवत्याः कामाक्षि स्फुरितपदपङ्केरुहभुवां
परागाणां पूरैः परिहृतकलङ्कव्यतिकरैः ।
नतानामामृष्टे हृदयमुकुरे निर्मलरुचि
प्रसन्ने निःशेषं प्रतिफलति विश्वं गिरिसुते ॥ ८४ ॥

*பவத்யா: காமாக்ஷி! ஸ்புரித-பத-பங்கேருஹ-புவாம்*
*பராகாணும் பூரை: பரிஹ்ருத-களங்க-வ்யதிகரை: |*
*நதாநாம் ஆம்ருஷ்டே ஹ்ருதய முகுரே நிர்மல-ருசி*
*ப்ரஸந்நே நிச்சேஷம் ப்ரதி-பலதி விச்வம் கிரி-ஸுதே*

கிரிஸுதே-பர்வத குமாரியே! காமாக்ஷி-காமாக்ஷி! பரிஹ் ருத-போக்கடிக்கப்பட்ட, களங்க-களங்கத்தின், வ்யதிகரை:- ஸம்பந்தத்தையுடைய, பவத்யா:-உன்னுடைய, ஸ்புரித- திகழ்கின்ற (அலர்ந்த), பதபங்கேருஹ-புவாம்-சரணகமலங்

களிலிருந்துண்டான, பராகாணும் பூரை:-மகரந்தப்பொடிகளால், ஆம்ருஷ்டே-துடைக்கப்பட்டதாயும், ப்ரஸந்நே-தெளிவானதாயும், நிர்மலருசி-ஒளியுள்ளதுமான, நதாநாம-நமஸ்கரிப்பவர்களுடைய, ஹ்ருதய - ஹ்ருதயமென்னும், முகுரே-கண்ணுடியில், நிச்சேஷம் விச்வம்-எல்லா உலகமும், ப்ரதிபலதி-பிரதிபலிக்கிறது.

பர்வதகுமாரியே காமாக்ஷி! விளங்குகின்ற உன் சரணகமலங்களிலிருந்து உண்டானவையும் எவ்வித களங்கத்தையும் போக்குகின்றவையுமான மகரந்தப் பொடிகளால் துடைக்கப்பட்டதாயும், அதனுல் தெளிவுற்ற நிர்மலமான (அறிவென்னும்) ஒளியோடு கூடியதுமான நமஸ்கரிப்பவர்களுடைய மனமென்னும் கண்ணுடியில் ஸகல லோகங்களும் பிரதிபலிக்கின்றன.

தாமரை போன்ற பாதங்களை தியானிக்கும் முனிவர்களுடைய ஹ்ருதயம் ஸகலவிதமான தோஷங்கள் நீங்கப்பெற்று தெளிவான அறிவொளியுடையதாக ஆவதால் அவர்களும் ஸர்வஜ்ஞர்கள் ஆகிருர்கள். (84)

तव त्रस्तं पादात्किसलयमरण्यान्तरमगा-

त्परं रेखारूपं कमलममुमेवाश्रितमभूत् ।

जितानां कामाक्षि द्वितयमपि युक्तं परिभवे

विदेशे वासो वा शरणगमनं वा निजरिपोः ॥ ८५ ॥

*தவ த்ரஸ்தம் பாதாத் கிஸலயம் அரண்யாந்தரம் அகாத்*
*பரம் ரேகா-ரூபம் கமலம் அமுமேவ ஆச்ரிதம் அபூத்*
*ஜிதாநாம் காமாக்ஷி! த்விதயம் அபி யுக்தம் பரிபவே*
*விதேசே வாஸோ வா சரண-கமநம் வா நிஜ-ரிபோ:*

காமாக்ஷி-காமாக்ஷியே! தவ-உன்னுடைய, பாதாத்-பாதத்தைக்கண்டு, த்ரஸ்தம்-பயந்த, கிஸலயம்-துளிரானது, அரண்யாந்தரம்-காட்டிற்குள், அகாத்-சென்று விட்டது; கமலம் பரம்-தாமரையோவென்ருல், ரேகாரூபம்-ரேகாவடிவமாக, அமும் ஏவ-இந்தப் பாதத்தையே, ஆச்ரிதம்-ஆச்ரயித்ததாக, அபூத்-ஆயிற்று (ஏனென்ருல்), ஜிதாநாம்-தோற்றவர்களுக்கு, பரிபவே-அவமானம் ஏற்பட்டபோது, விதேசே-தேசாந்திரத்தில், வாஸ:-வாஸம் செய்வதோ, வா-அல்லது, நிஜரிபோ:-தன் சத்துருவையே, சரண-கமநம் வா-

சரணம் புகுவதோ, த்விதயம் அபி-இரண்டுதான், யுக்தம்-செய்யத்தக்கது

காமாக்ஷியே! உன் பாதத்தைக்கண்டு பயந்து துளிர் காட்டிற்குள் சென்று ஒளிந்துகொண்டது; தாமரையோவெனில், (பத்ம) ரேகையென்ற உருவத்தோடு அப்பாதத்தையே ஆச்ரயித்ததாக ஆயிற்று. (ஏனென்றால்) அவமானம் ஏற்பட்டபோது வேறிடம் சென்று வஸிப்பதோ அல்லது சத்துருவையே சரணம் புகுவதோ இவ்விரண்டில் ஒன்றுதான் தோற்றவர்களுக்குச் செய்யத்தக்கவை.

அம்பிகையின் பாதங்கள் மேன்மை, செவ்வி, நாற்றம் முதலிய குணங்களில் துளிர், கமலம் இவற்றை வெல்லுகின்றன என்பதைக்காட்டுகிறார். ஒருவன் மற்றொருவனிடம் தோற்றால் தன் நாட்டைவிட்டு ஓடி எங்காவது காட்டிலோ வேறு தேசத்திலோ வஸிப்பான்; அல்லது வென்றவனைச் சரணம் புகுந்து அண்டி வாழ்வான். இங்கு துளிர் காட்டில் மரங்களில் இருப்பதால் பாதத்தைக் கண்டு பயந்து ஓடிவிட்டது; தாமரையோ பாதத்தையே பத்மரேகை வடிவமாக ஆச்ரயித்திருக்கிறது என்று வர்ணிக்கிறார். (85)

गृहीत्वा याथार्थ्यं निगमवचसां देशिककृपा-
कटाक्षार्कज्योतिःशमितममताबन्धतमसः ।
यतन्ते कामाक्षि प्रतिदिवसमन्तर्द्रढयितुम्
त्वदीयं पादाब्जं सुकृतपरिपाकेन सुजनाः ॥ ८६ ॥

***க்ருஹீத்வா யாதார்த்யம் நிகம-வசஸாம் தேசிக-க்ருபா-***
***கடாக்ஷார்க்க-ஜ்யோதி:-சமித-மமதா-பந்த-தமஸ: |***
***யதந்தே காமாக்ஷி! ப்ரதி-திவஸம் அந்த:த்ரடயிதும்***
***த்வதீயம் பாதாப்ஜம் ஸுக்ருத-பரிபாகேந ஸுஜநா:***

காமாக்ஷி-காமாக்ஷியே! ஸுஜநா:-ஸாதுக்கள், தேசிக-ஆசார்யனுடைய, க்ருபா-கடாக்ஷ-கிருபாகடாக்ஷமாகிற, அர்க-ஜ்யோதி:-ஸூர்யதேஜஸ்ஸால், சமித-போக்கடிக்கப்பட்ட, மமதா-பந்த-தமஸ:-மமதை என்னும் இருளையுடையவர்களாய், நிகம-வசஸாம்-வேதவாக்யங்களுடைய, யாதார்த்யம்-உண்மையை, க்ருஹீத்வா-அறிந்துகொண்டு, ஸுக்ருத-(முன் ஜன்மத்தில் செய்த) புண்ணியத்தின், பரிபாகேந-பயனாக, த்வதீயம்-உன்னுடையதான, பாதாப்ஜம் - தாமரைபோன்ற பாதத்தை, அந்த:-உள்ளே, த்ரடயிதும்-உறுதியாக வைத்துக்

கொள்வதற்கு, ப்ரதி திவஸம் - ஒவ்வொரு நாளும், யதந்தே- முயல்கிறார்கள்.

காமாக்ஷியே! ஆசார்யர்களுடைய கிருபாகடாக்ஷ மென்கிற ஸூர்யனின் தேஜஸ்ஸால் மமகாரம் என்னும் இருள் நீங்கியவர்களான ஸாது ஜனங்கள் வேத வாக்யங்களின் உண்மையான அர்த்தத்தை உணர்ந்தவர்களாய், தங்கள் புண்யத்தின் பயனாக உனது சரண கமலத்தை தங்கள் ஹ்ருதயத்திற்குள்ளே உறுதியாக நிறுத்திக்கொள்ளுவதற்கு ஒவ்வொரு நாளும் முயல்கின்றனர்.

பூர்வ ஜன்மத்தில் நல்ல புண்ணியத்தைச் செய்திருந்தால் தான் இந்த ஜன்மத்தில் ஸதாசார்யனுடைய கடாக்ஷத்தைப் பெற்று அதனால் அஜ்ஞானவிருள் நீங்கி வேதவாக்கியங்களின் உட்பொருளை உணர்ந்து தேவியின் பாதங்களை சஞ்சலமில்லாமல் தியானம் செய்ய முடியும். ஸாதுக்களான மஹான்கள் அவ்விதம் செய்கின்றனர். (86)

जडानामप्यम्ब स्मरणसमये त्वच्चरणयोः
भ्रमन्मन्थक्ष्माभृद्घुमुघुमितसिन्धुप्रतिभटाः ।
प्रसन्नाः कामाक्षि प्रसभमधरस्पन्दनकला*
भवन्ति स्वच्छन्दं प्रकृतिपरिपक्वाः भणितयः ॥ ८७ ॥

*ஜடாநாம் அப்-யம்ப ஸ்மரண-ஸமயே த்வச்-சரணயோ:*
*ப்ரமந்-மந்த-க்ஷ்மா-ப்ருத-குமுகுமித-ஸிந்து ப்ரதிபடா:।*
*ப்ரஸந்நா: காமாக்ஷி! ப்ரஸபம் அதர:ஸ்பந்தந கலா:*
*பவந்தி ஸ்வச்சந்தம் ப்ரக்ருதி-பரிபக்வா: பணிதய: ॥*

அம்ப-தாயே! காமாக்ஷி-காமாக்ஷி! த்வச்-சரணயோ: - உனது பாதங்களை, ஸ்மரண-ஸமயே - நினைக்கும் ஸமயத்திலேயே, ஜடாநாம் அபி - புத்தியற்றவர்களுக்குக் கூட, ப்ரமந் - சுழலுகிற, மந்தக்ஷ்மாப்ருத்-மந்தர பர்வதத்தால், குமுகுமித-குமுகுமுவென்று சப்திக்கிற, ஸிந்து - ஸமுத்திரத்திற்கு, ப்ரதிபடா: - எதிரானவைகளும், ப்ரஸந்நா: - அழகானவைகளும், ப்ரக்ருதி-ஸ்வபாவத்திலேயே, பரிபக்வா: - சிறந்தவைகளும், அதர-ஸ்பந்தந - உதடு அசையும்போதே, கலா: - அழகானவைகளுமான, பணிதய: - சப்தங்கள், ஸ்வச்சந்தம் - தங்

---

* अधरस्पन्दनकराः विभान्ति என்றும் பாடம்.

களிஷ்டப்படி (தாமாகவே), ப்ரஸபம் – பலாத்காரமாக (தடுக்க முடியாதபடி), பவந்தி – உண்டாகின்றன.

தாயே காமாக்ஷி! உன் பாதங்களை ஸ்மரிக்கும் ஸமயத்திலேயே ஞானமற்றவர்களுக்குக்கூட சுழலுகின்ற மந்தர பர்வதத்தால் குமுகுமுவென்று சப்திக்கிற ஸமுத்திரத்திற்கு ஸமமானவைகளும் அழகானவைகளும் ஸ்வபாவமாகவே சிறந்தவைகளும் உதடு அசையும்போதே அழகானவைகளுமான சப்தங்கள் தடையின்றித் தாமாகவே உண்டாகின்றன.

தேவியின் பாதஸ்மரணமானது மூடர்களையும் அழகான சிறந்த காவ்யங்களை அநாயாஸமாக இயற்றவல்ல கவிகளாக்குகிறது. (87)

वहन्नप्यश्रान्तं मधुरनिनदं हंसकमसौ
तमेवाधःकर्तुं किमिव यतते केलिगमने ।
भवस्यैवानन्दं विदधदपि कामाक्षि चरणो
भवत्यास्तद्द्रोहं भगवति किमेवं वितनुते ॥ ८८ ॥

*வஹந்நப்-யச்ராந்தம் மதுர-நிநதம் ஹம்ஸகம் அஸௌ*
*தமேவ அத: கர்த்தும் கிமிவ யததே கேளி-கமநே |*
*பவஸ்யைவ ஆநந்தம் விததத் அபி காமாக்ஷி! சரணோ*
*பவத்யா: தத்-த்ரோஹம் பகவதி! கிம் ஏவம் விதநுதே*

பகவதி – தேவி! காமாக்ஷி – காமாக்ஷி! அச்ராந்தம் - எப்போதும், மதுர – இனிமையான, நிநதம் - ஒலியைப்பெற்றதான, ஹம்ஸகம் – பீலியை, வஹந் அபி – பூண்டு இருந்தாலும், அஸௌ - இந்த, பவத்யா: சரண: - உன் பாதம், கேளி-கமநே - உல்லாஸமான நடையில், தம் ஏவ - அந்த ஹம்ஸத்தையே, அத:-கர்த்தும் - தாழ்த்துவதற்கு, கிம் இவ – ஏன் தான், யததே – முயலுகிறது ? பவஸ்ய ஏவ - பவ(சிவ)னுக்கே, ஆநந்தம் – ஸந்தோஷத்தை, விததத் அபி – செய்கிறதாயிருந்தபோதிலும், தத்-த்ரோஹம் - அந்த (பவனுக்கே) ஸம்ஹாரத்திற்கே துரோஹத்தை, ஏவம் - இம்மாதிரி, கிம் - ஏன், விதநுதே - செய்கிறது ?

காமாக்ஷி தேவியே ! இந்த உன்பாதம் ஹம்ஸகத்தை (பீலியை) எப்போதும் பூண்டிருந்தாலும் அழகிய நடையில் அந்த (ஹம்ஸத்தை) தாழ்த்துவதற்கு ஏன் முயலுகிறது ? இவ்விதமே

பவனுக்கு (சிவனுக்கு) ஆநந்தத்தை அளிப்பதாயிருந்தும் இது ஏன் தான் பவ-த்ரோஹத்தை (ஸம்ஸார நாசத்தைச்) செய்கிறது ?

ஹம்ஸகம் என்ற பெயர்கொண்ட பீலியென்னும் ஆபரணங்களை எப்பொழுதும் அணிந்திருக்கும் பாதங்கள் நடையழகில் ஹம்ஸங்களை வெல்லுகின்றன. 'பவன்' என்னும் சிவனுக்கு பத்னியாக இருந்தும் பவமென்னும் ஸம்ஸாரத்தைப் போக்குகிருள் என்பது விசித்திரமாயிருக்கிறது. அதாவது பவனுக்கு ஆநந்தத்தைக் கொடுப்பதாக இருந்தும் பவத்ரோஹத்தைத் செய்கிறது. (88)

यदत्यन्तं ताम्यत्यलसगतिवार्तास्वपि शिवे
तदेतत्कामाक्षि प्रकृतिमृदुलं ते पदयुगम् ।
किरीटैः संघट्टं कथमिव सुरौघस्य सहते
मुनीन्द्राणामास्ते मनसि च कथं सूचिनिशिते ॥ ८९ ॥

*யத் அத்யந்தம் தாம்யதி அலஸ-கதி-வார்த்தாஸ்வபி (சிவே!*
*ததேதத் காமாக்ஷி! ப்ரக்ருதி-ம்ருதுலம் தே பதயுகம் !*
*கிரீடை: ஸங்கட்டம் கதம் இவ ஸுரௌகஸ்ய ஸஹதே*
*முநீந்த்ராணும் ஆஸ்தே மநஸி ச கதம் ஸூசி-நிசிதே!!*

சிவே – மங்களாம்பிகையே! காமாக்ஷி – காமாக்ஷி! அலஸ கதி – மந்தகதி என்கிற, வார்த்தாஸு அபி – பேச்சில் கூட, யத் – எந்த பாதமானது, அத்யந்தம் – மிகவும் அதிகமாக, தாம்யதி – வருந்துகிறதோ, ப்ரக்ருதி – ஸ்வபாவத்திலேயே, ம்ருதுலம் – மிருதுவான, ஏதத் - இந்த, தே - உன்னுடைய, பதயுகம் – இரண்டு பாதங்களும், கதம் இவ – எப்படித்தான், ஸுரௌகஸ்ய – தேவகணங்களுடைய, கிரீடை: - கிரீடங்களோடு, ஸங்கட்டம் – உறைதலை, ஸஹதே – பொறுத்திருக்கின்றனவோ ? ஸூசி - ஊசிபோல், நிசிதே - கூர்மையான, முநீந்த்ராணும் - முனிசிரேஷ்டர்களுடைய, மநஸி – மனதிலும், கதம் - எப்படித்தான், ஆஸ்தே – இருக்கின்றனவோ ?

மங்களஸ்வரூபிணியான காமாக்ஷியே! மெதுவான நடை என்கிற வார்த்தையிலும் கூட அதிகமாக வருந்தும்படியான ஸ்வபாவத்திலேயே அவ்வளவு மிருதுவான இந்த உன்னுடைய இரண்டு பாதங்களும் தேவகணங்களின் கிரீடங்களோடு உறைதலை எவ்விதம்

பொறுத்திருக்கின்றனவோ? முனிச்ரேஷ்டர்களுடைய ஊசிபோல் கூர்மையான மனதிலும் எப்படித்தான் நிற்கின்றனவோ?

தேவியின் பாதங்கள் மிகவும் மிருதுவானவை; இந்தத் திருவடிகளை இந்திராதிதேவர்கள் தலைவணங்குகிறார்கள்; ரிஷிகள் தியானம் செய்யும் பொருளும் அவையே. (89)

मनोरङ्गे मत्के विबुधजनसंमोदजननी
सरागव्यासङ्गं* सरसमृदुसंचारसुभगा ।
मनोज्ञा कामाक्षि प्रकटयतु लास्यप्रकरणम्
रणन्मञ्जीरा ते चरणयुगलीनर्तकवधूः ॥ ९० ॥

*மநோ-ரங்கே மத்கே விபுத-ஜந-ஸம்மோத-ஜநநீ*
*ஸராக-வ்யாஸங்கம் ஸரஸ-ம்ருது-ஸஞ்சார-ஸுபகா !*
*மநோஜ்ஞா காமாக்ஷி ! ப்ரகடயது லாஸ்ய ப்ரகரணம்*
*ரணந் மஞ்ஜீரா தே சரண யுகளீ நர்த்தக வதூ:*

காமாக்ஷி – காமாக்ஷியே! விபுத-ஜந – (தேவர்களுக்கு) ஞானிகளுக்கு, ஸம்மோத – ஆநந்தத்தை,, ஜநநீ – உண்டு பண்ணுகிறவளும், ஸரஸ – வசிகரமாய், ம்ருது – ம்ருதுவான ஸஞ்சார – நடையினால், ஸுபகா – அழகாயிருப்பவளும் மநோஜ்ஞா – மனோரம்யமானவளும், ரணந் – ஒலிக்கும், மஞ்ஜீரா – பீலியையணிந்தவளுமாயிருக்கிற, தே – உன்னுடைய, சரண-யுகளீ – இரு பாதங்களாகிற நர்த்தக-வதூ: – நாட்டியப்பெண், மத்கே – என்னுடையதான மநோ-ரங்கே – மனதாகிற நாடகமேடையில், ஸராக-வ்யாஸங்கம் – ராகத்தோடு கூடின, லாஸ்ய-ப்ரகரணம் – நாட்டியத்தை, ப்ரகடயது – செய்யட்டும்.

காமாக்ஷியே! ஞானிகளுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறவளும், வசிகரிக்கக்கூடிய மிருதுவான நடையால் அழகாயிருக்கிறவளும், மனோரம்யமானவளும் ஒலிக்கும் பீலியையணிந்தவளுமாயிருக்கிற உன்னுடைய இரண்டு பாதங்களாகிற நடனமாது என்னுடையதான மனமென்னும் அரங்கத்தில் ராகத்தோடுகூட நாட்டியத்தை செய்யட்டும்.

---

*सरागव्यासङ्गा என்றும் பாடம்

இந்த சுலோகத்தில் தேவியின் பாதங்களை ஒரு நாட்டியமாடும் பெண்ணாக வர்ணிக்கிறார். என் மனதே அரங்கமேடை; மந்தகதியே லாஸ்யம் என்ற நாட்டியத்தின் விசேஷம்; ஞானவான்களே ஸபையிலுள்ள தேவதைகள். பாதத்தில் உள்ள ராகமே(வர்ணமே) நாட்டியத்தில் சேர்ந்த ஸங்கீதம் (ராகம்).

லாஸ்யம் என்பது ஸ்திரீகள் ஆடும் நாட்டியத்திற்குப் பெயர். (90)

परिष्कुर्वन्मातः *पशुपतिकपर्दं चरणराट्
पराचां हृत्पद्मं परमभणितीनां च मुकुटम् ।
भवाख्ये पाथोधौ परिहरतु कामाक्षि ममता
पराधीनत्वं मे परिमुषितपाथोजमहिमा ॥ ९१ ॥

*பரிஷ்குர்வந் மாத: பசுபதி-கபர்தம் சரண-ராட்*
*பராசாம் ஹ்ருத்-பத்மம் பரமபணிதீநாம் ச முகுடம் ।*
*பவாக்யே பாதோதௌ பரிஹரது காமாக்ஷி ! மமதா-*
*பராதீநத்வம் மே பரிமுஷித - பாதோஜ-மஹிமா !!*

மாத:-தாயே!, காமாக்ஷி-காமாக்ஷி!, பசுபதி-சிவனுடைய, கபர்தம் - ஜடைகளையும், பராசாம் - பெரியோர்களுடைய, ஹ்ருத்-பத்மம் - ஹ்ருதயமென்னும் தாமரைப்பூவையும், பரமபணிதீநாம் - வேதங்களுடைய, முகுடம் - சிகரத்தையும் உபநிஷத்துக்களையும், பரிஷ்குர்வந் - அலங்கரிக்கிறதும், பரிமுஷித - அபஹரிக்கப்பட்ட, பாதோஜ - தாமரைப்பூவின் மஹிமா - பெருமையையுடையதுமான, சரணராட் - சிறந்த திருவடியானது, பவாக்யே-ஸம்ஸாரமாகிற, பாதோதௌ - ஸமுத்திரத்தில் (அகப்பட்டிருக்கும்), மே - என்னுடைய மமதா-பராதீநத்வம் - மமதைக்கு வசப்பட்டிருக்கும் நிலைமையை பரிஹரது - போக்கட்டும்.

தாயே காமாக்ஷி! சிவனுடைய ஜடைகளையும், பெரியோர்களுடைய ஹிருதயகமலத்தையும் வேதங்களின் மகுடத்தையும் (உபநிஷத்தையும்) அலங்கரிக்கிறதும், தாமரையின் அழகையும் கவர்கின்றதான உன்னுடைய சிறந்த பாதம் பிறவிக்கடலில் விழுந்து மமதைக்கு வசப்பட்டிருக்கும் என் நிலைமையைப் போக்கியருளட்டும்

பிரணயகலஹ ஸமயங்களில் சிவன் ஸுவர்ணம் போன்ற காந்தியையுடைய தன்ஜடைகள் தேவியின் பாதங்களில் புரளும்படி பணிந்து யாசிக்கும்போது, அந்த பாதங்கள் ஜடைகளின் சோபையை அதிகமாக்குகின்றன. பெரியோர்களுடைய மனதுக்கு மகிழ்ச்சியை அளிப்பதும், உபநிஷத்துக்களால் கூறப்படும் பரம் பொருளும், தாமரையையும் வென்றகாந்தியையுடையதும் இப் பாதங்களே அவை அஹங்கார மமகாரங்களுக்கு வசப்பட்டு இவ் வுலகில் இந்திரிய கிங்கரனாய் இருக்கும் என் நிலைமையைத் தவிர்த்து என்னைக் கிருதார்த்தனாக்கட்டும். (91)

प्रसूनैः संपर्कादमरतरुणीकुन्तलभवैः
अभीष्टानां दानादनिशमपि कामाक्षि नमताम् ।
स्वसङ्गात्कङ्केलिप्रसवजनकत्वेन *च शिवे
त्रिधा धत्ते वार्तां सुरभिरिति पादो गிरिसुते ॥ ९१ ॥

*ப்ரஸூனை: ஸம்பர்க்காத் அமர-தருணீ குந்தல-பவை:*
*அபீஷ்டாநாம் தாநாத் அநிசம் அபி காமாக்ஷி நமதாம்*
*ஸ்வ-ஸங்காத் கங்கேளி-ப்ரஸவ-ஜநகத்வேந ச சிவே!*
*த்ரிதா தத்தே வார்த்தாம் ஸுரபி-ரிதி பாதோ*
*கிரி-ஸுதே*

சிவே – மங்களஸ்வரூபிணியான, காமாக்ஷி – காமாக்ஷி கிரிஸுதே - பர்வதகுமாரியே! அமரதருணீ – தேவமாதர்களுடைய, குந்தல-பவை: – கூந்தல்களிலுள்ள, ப்ரஸூனை:- புஷ்பங்களோடு, ஸம்பர்க்காத் – சேர்க்கையினாலும், நமதாம்- வணங்குகிறவர்களுக்கு, அபீஷ்டாநாம் – அபீஷ்டங்களை, அநிசம் – எப்போதும், தாநாத் அபி – கொடுப்பதினாலும், ஸ்வ-ஸங்காத் – தன் சேர்கையினால், அசோக – அசோக மரத்தில், ப்ரஸவ –புஷ்பத்தை, ஜநகத்வேந ச – உண்டு பண்ணுவதாலும், பாத: - உன் பாதமானது, ஸுரபி, – 'ஸுரபி' இதிவார்த்தாம் - என்கிற சப்தத்தை, த்ரிதா – மூன்றுவிதத்தால், தத்தே – அடைகிறது.

பர்வதகுமாரியும் மங்களஸ்வரூபிணியுமான காமாக்ஷியே! உன் பாதம் தேவ ஸ்திரீகளின் கூந்தல்களிலிருக்கும் புஷ்பங்களோடு சேர்ந்திருப்பதினாலும், வணங்குகிறவர்களின் மநோ

*च तव என்றும் பாடம்

ரதத்தைக் கொடுப்பதாலும், தன் சேர்க்கையால் அசேர்க மரங்களில் புஷ்பத்தை உண்டுபண்ணுவதாலும் 'ஸுரபி' என்கிற பெயரை மூன்று வித்தாலும் அடைகிறது.

(ஸுரபி=1 வாஸனையுள்ள பொருள்; 2 காமதேனு; 3 வஸந்தருது.)

இந்த சுலோகத்தில் அம்பிகையின் பாதங்களை மூன்று பிரகாரமாய் 'ஸுரபி' என்னலாம என்கிறார்; ஸுரபி என்ற பதம் மூன்று பொருள்களையுடையது. அதாவது; வாஸனை, காமதேனு, வஸந்தருது, பாதங்கள், தேவஸ்திரீகளின் கூந்தல்களில் உள்ள புஷ்பங்களின் ஸம்பந்தத்தினால் வாஸனையை யுடையவையாகின்றன. வணங்குகிறவர்களுடைய அபீஷ்டங்களைக் கொடுப்பதால், காமதேனு போன்று உள்ளன. அசோக மரம் உத்தம ஸ்திரீகளின் பாதம்பட்டால் புஷ்பிக்கும் என்பர். ஸர்வோத்தம ஸ்திரீயாகிய தேவியின் பாதங்கள் அந்த மரத்தின்மீது பட்டால் அசோக புஷ்பம் புஷ்பிக்கும் என்று சொல்லவும் வேண்டுமோ? பாதங்கள் இப்படி புஷ்பிக்கச் செய்வதனால் வஸந்தருது என்ற பெயரை வஹிக்கின்றன. இந்த சுலோகத்தில் மேலேகண்ட மூன்று பொருள்களையுடைய 'ஸுரபி' என்ற பெயரை பாதங்கள் அடைகின்றன என்கிறார்.

அண்டினவர்களுக்கு அசோகத்தை (சோகமின்மையை)க் கொடுக்கின்றன என்பதும் த்வனிக்கிறது. (92)

महामोहस्तेनव्यतिकरभयात्पालयति यो
विनिक्षिप्तं स्वस्मिन्निजजनमनोरत्नमनिशम् ।
सरागस्योद्रेकात्सततमपि कामाक्षि रुचिरां
किमेवं पादोऽसौ किसलयरुचिं चोरयति ते ॥ ९३ ॥

*மஹா-மோஹ-ஸ்தேந-வ்யதிகர-பயாத் பாலயதி யோ*
*விநிக்ஷிப்தம் ஸ்வஸ்மிந்-நிஜஜந மநோ-ரத்நம் அநிசம் |*
*ஸராகஸ்ய உத்ரேகாத் ஸததம் அபி காமாக்ஷி ருசிராம்*
*கிம் ஏவம் பாதோऽஸௌ கிஸலய-ருசிம் சோரயதி தே ||*

காமாக்ஷி-காமாக்ஷியே! ய:-எந்த (உன் பாதம்), ஸ்வஸ்மிந்-தன்னிடத்தில், விநிக்ஷிப்தம் - வைக்கப்பட்ட, நிஜஜந-தன்னை ஆச்ரயித்தவர்களுடைய, மந:-மனதாகிற, ரத்நம்-ரத்னத்தை, மஹா-மோஹ - மிகுந்த அஜ்ஞானம் என்னும்,

ஸ்தேந-வ்யதிகர – திருடனுடைய ஸம்பந்தத்தினுடைய, பயாத்–பயத்திலிருந்து, பாலயதி-காப்பாற்றுகிறதோ, ஸ: அஸௌ-அப்பேர்ப்பட்ட இந்த, தே பாத:–உன் பாதமானது, ஸராகஸ்ய-ஆசையின் (சிவந்த காந்தியினுடைய), உத்ரேகாத்–மிகுதியினால், ருசிரம்–அழகான, கிஸலய-ருசிம்–துளிரின் காந்தியை, ஸததம் அபி-எப்போதும், கிம்-ஏன், ஏவம் –இந்த மாதிரி, சோரயதி-திருடுகிறது ?

காமாக்ஷியே எந்த உன் பாதம் தன்னிடம் வைக்கப்பட்ட ஆச்ரிதர்களின் மனதென்னும் ரத்னத்தை மஹாமோஹன் என்னும் திருடன் கொண்டுபோய்விடுவானோ' என்கிற பயத்திலிருந்து காப்பாற்றுகிறதோ, அதே உன் பாதம் *ஆசையின் (சிவந்தகாந்தியின்) மிகுதியால் அழகான துளிரின் காந்தியை மட்டும் ஏன் எப்போதும் இம்மாதிரி திருடுகிறது ?

*ராகம் சிவப்பு வர்ணமும் ஆசையும்.

தேவியை வணங்கும் ஒருவன் தன் மனதை தேவியின் பாதமென்னும் காப்பாளனிடம் ஒப்புவித்தால் அது லோபம் மோஹம் முதலான திருடர்கள் கொண்டுபோகாதபடி ரக்ஷிக்கிறது. ரத்னம் போன்ற மனதைக் காக்கும் பாதம் துளிரின் சிவந்த காந்தியை மட்டும் ஏன் திருடுகிறது என்று கேட்கிறார். அதாவது துளிரின் காந்தியை பாதத்தில் காணலாம். (93)

सदा स्वादुंकारं विषयलहरीशालिकणिकां
समास्वाद्य श्रान्तं हृदयशुकपोतं जननि मे ।
कृपाजाले फालेक्षणमहिषि कामाक्षि रभसात्
गृहीत्वा रुन्धीथाश्चरणयुगलीपञ्जरपुटे ॥ ९४ ॥

*ஸதா ஸ்வாதுங்காரம் விஷய-லஹரீ-சாலி-கணிகாம்*
*ஸமாஸ்வாத்ய ச்ராந்தம் ஹ்ருதய-சுக-போதம் ஜநநி மே*
*க்ருபா-ஜாலே பாலேக்ஷண-மஹிஷி! காமாக்ஷி! ரபஸாத்*
*க்ருஹீத்வா ருந்தீதா: சரண-யுகளீ-பஞ்ஜர-புடே ॥*

ஜநநி-தாயே! பாலேக்ஷண-நெற்றிக்கண்ணனான சிவனுடைய, மஹிஷி - மஹிஷியே! ஜநநி – தாயே! காமாக்ஷி–காமாக்ஷி! ஸதா-எப்போதும், விஷய-லஹரீ - விஷயங்களின் அலைகளாகிற, சாலி-கணிகாம் – செம்பா அரிசி நொய்யை, ஸ்வாதுங்காரம் - இனிப்பாயிருக்கிறதென்று, ஸமாஸ்வாத்ய –

**தின்று, ச்ராந்தம்—களைத்துப்போயிருக்கிற, மே-என்னுடைய, ஹ்ருதய-மனதாகிற, சுக-போதம் — இளங்கிளியை, க்ருபா-ஜாலே - கருணையென்னும் வலையில், ரபஸாத் — சீக்கிரமாக, க்ருஹீத்வா — பிடித்து, சரண-யுகளீ - இரண்டு பாதங்களாகிற, பஞ்ஜர-புடே-கூட்டிற்குள், ருந்தீதா:-அடைத்துவைப்பாயாக.**

நெற்றிக்கண்ணனை சிவனுடைய மஹிஷியே! (ஜகந்) மாதாவான காமாக்ஷியே! எப்போதும் அலைபோல் வருகிற சப்தஸ்பர்சாதி விஷயங்களாகிற அரிசி நொய்யை 'இனிமையாயிருக்கிறது' என்று சொல்லிக்கொண்டு தின்றுவிட்டு களைத்துக் கிடக்கும் என் மனமென்னும் இளங்கிளியை உன் கருணையென்னும் வலையை வீசி சீக்கிரமாகப் பிடித்து உன் இரண்டு பாதங்களாகிற கூட்டிற்குள அடைத்து வைப்பாயாக.

முன் சுலோகத்தில் மனதை ஒரு ரத்னமாகச் சொன்னார்; இதில் ஒரு இளங்கிளியாக வர்ணிக்கிறார். அது சிற்றின்பங்களையே சுவைத்து அவற்றில் ஆசை கொண்டிருக்கிறது. கருணை யென்னும் வலையை வீசி அதைப்பிடித்து உன் பாதமென்னும் கூட்டில் அடைதது வைப்பாயாக என்கிறார். அதாவது உன் கருணையினால் மனதை விஷயாந்தரங்களில் போகாதபடி செய்து பலாத்காரமாகவாவது உன் பாதத்தை நினைக்கும்படி செய். (94)

धुनानं कामाक्षि स्मरणलवमात्रेण जडिम-
ज्वरप्रौढिं गूढस्थिति निगमनैकुञ्जकुहरे ।
अलभ्यं सर्वेषां कतिचन लभन्ते सुकृतिन-
श्चिरादन्विष्यन्तस्तव चरणसिद्धौषधमिदम् ॥ ९५ ॥

*துநாநம் காமாக்ஷி! ஸ்மரண-லவ-மாத்ரேண ஜடிம-*
*ஜ்வர-ப்ரௌடிம் கூட-ஸ்திதி-நிகம-நைகுஞ்ஜ-குஹரே ।*
*அலப்யம் ஸர்வேஷாம் கதிசந லபந்தே ஸுக்ருதிந:*
*சிராத் அந்விஷ்யந்த: தவ சரண ஸித்தௌஷதம் இதம்*

காமாக்ஷி—காமாக்ஷியே! ஸ்மரண-லவ — அல்பம் நினைப்பது, மாத்ரேண — மாத்திரத்தினாலேயே, ஜடிம — அஜ்ஞான மென்னும், ஜ்வர-ப்ரௌடிம் — கொடிய ஜ்வரத்தை, துநாநம் — போக்குவதும், நிகம-வேதங்கள் என்னும், நைகுஞ்ஜ—புதர்களுடைய, குஹரே — உட்புறத்தில், கூட — ரஹஸ்யமான,

ஸ்திதி - இருப்பையுடையதும், ஸர்வேஷாம் – எல்லோருக்கும், அலப்யம் - கிடைக்கவரியதுமான, தவ – உன்னுடைய, இதம்- இந்த, சரண – பாதங்களாகிற, ஸித்தௌஷதம் – சிறந்த மருந்தை, சிராத் – வெகு காலமாக, அந்விஷ்யந்த: – தேடிக் கொண்டிருக்கிற, கதிசந – யாரோ சில, ஸுக்ருதிந: – புண்யம் செய்தவர்கள், லபந்தே – அடைகிறார்கள்.

காமாக்ஷியே! கொஞ்சம் ஸ்மரிப்பதினாலேயே அஜ்ஞானமென்னும் கொடிய ஜ்வரத்தைப போக்குவதும, வேதங்களென்னும் புதர்களின் உட்புறத்தில் (பிறரறியாதபடி) ரஹஸ்யமாக வைக்கப்பட்டிருக்கிறதும், எல்லோருக்கும் கிட்டவரியதுமான உன்னுடைய பாதங்களென்கிற இந்த ஸித்தௌஷதத்தை (சிறந்த மருந்தை) புண்ணியவான்களான சிலரே வெகுகாலமாகத் தேடி அடைகின்றனர்.

கொடிய நோய்களைப் போக்கவல்ல ஸித்த மூலிகைகள் காடு மலைகளிலெல்லாம் பலர் தேடித் திரிந்தாலும் எப்படி சில புண்ணியவான்களுக்கே கிட்டுகின்றனவோ அப்படியே வேதமாகிற வனத்தில் உள்ளுக்குள்ளே வைக்கப்பட்டதும், மற்ற மருந்துகளைப் போலில்லாமல் கொஞ்சம் நினைத்த மாத்திரத்திலேயே அஜ்ஞானமென்னும் நோயைப் போக்கவல்லதுமான உன் பாதமென்னும் மருந்தை பலர் வெகு காலமாகத் தேடினாலும் சில பாக்யவான்களே அடைகிறார்கள். 95)

रणन्मञ्जीराभ्यां ललितगमनाभ्यां सुकृतिनां
मनोवास्तव्याभ्यां मथिततिमिराभ्यां नखरुचा ।
निधेयाभ्यां पत्या निजशिरसि कामाक्षि सततं
नमस्ते पादाभ्यां नलिनमृदुलाभ्यां गिरिसुते ॥ ९६ ॥

***ரணந்-மஞ்ஜீராப்யாம் லலித-கமநாப்யாம் ஸுக்ருதிநாம்***
***மநோ-வாஸ்தவ்யாப்யாம் மதித-திமிராப்யாம் நக-ருசா***
***நிதேயாப்யாம் பத்யா நிஜ-சிரஸி காமாக்ஷி! ஸததம்***
***நமஸ்தே பாதாப்யாம் நளிந-ம்ருதுலாப்யாம் கிரி ஸுதே***

கிரி-ஸுதே – பர்வத குமாரியே! காமாக்ஷி – காமாக்ஷி, ரணந் - ஒலிக்கின்ற, மஞ்ஜீராப்யாம் – சிலம்புகளையுடையவைகளும், லலித – அழகான, கமநாப்யாம் - நடையையுடையவைகளும்,

ஸுக்ருதிநாம் — புண்ணியம் செய்தவர்களுடைய, மநோ — மனஸ்ஸை, வாஸ்தவ்யாப்யாம் - வாஸஸ்தானமாக உடைய வைகளும், நக-ருசா - நககாந்திகளால், மதித — போக்கப் பட்ட, திமிராப்யாம்-இருளையுடையவைகளும், பத்யா-பதி யான சிவனுல், நிஜ-சிரஸி — தன் தலையில், நிதேயாப்யாம் - வைக்கத்தக்கவைகளும், நளிந—தாமரை போல், ம்ருதுலாப் யாம்-மிருதுவானவைகளுமான, தே—உன்னுடைய, பாதாப் யாம்—பாதங்களுக்கு, ஸததம்—எப்போதும், நம:-நமஸ்காரம்.

பர்வதகுமாரியே! காமாக்ஷி! சப்திக்கின்ற பீலிகளையுடையவை களும், அழகிய நடையைப் பெற்றவைகளும், புண்ணியவான்களின் மனஸ்ஸில் வஸிப்பவைகளும், நககாந்தியால் இருளைப் போக்குகிற வைகளும, பதியான சிவனும் தன் தலையில் வைக்கத்தக்கவை களும் தாமரைபோல் மிருதுவானவைகளுமான உன்னுடைய பாதங் களுக்கு எப்போதும் நமஸ்காரம்.

அம்பிகையின் பாதங்களின் பெருமையைக் கூறி, மஹிமை பொருந்திய உன் பாதங்களுக்கு நமஸ்காரம் என்கிருர். (96)

*सुरागे राकेन्दुप्रतिनिधिमुखे पर्वतसुते
चिराल्लभ्ये भक्त्या शमधनजनानां परिषदा ।
मनोभृङ्गो मत्कः पदकमलयुग्मे जननि ते
प्रकामं कामाक्षि त्रिपुरहरवामाक्षि रमताम् ॥ ९७ ॥

***ஸுராகே ராகேந்து-ப்ரதிநிதி-முகே பர்வத-ஸுதே !***
***சிராத் லப்யே பக்த்யா ஶம-தந-ஜநாநாம் பரிஷதா |***
***மநோ ப்ருங்கோ மத்க: பத-கமல யுக்மே ஜநநி தே***
***ப்ரகாமம் காமாக்ஷி ! த்ரிபுர-ஹர-வாமாக்ஷி ரமதாம் ॥***

ராகேந்து - பௌர்ணமி சந்திரனுக்கு, ப்ரதிநிதி - பிரதிநிதி போன்ற, முகே — முகத்தையுடையவளே !, பர்வதஸுதே — பர்வத குமாரியே !, ஜநநி காமாக்ஷி ! — தாயே காமாக்ஷி !, த்ரிபுரஹர — முப்புரமெரித்தோன், வாமாக்ஷி — ப்ரணயினியே !, ஸுராகே - அழகிய சோலையுள்ளதும், சமதந — சாந்தியை தனமாகக்கொண்ட முனிவர்களின், பரிஷதா—கூட்டத்தாலும், சிராத் - வெகு காலத்திற்குப் பிறகு, பக்த்யா - பக்தியினுல்,

* सरागे என்றும் பாடம்

லப்யே-அடையத்தக்கதுமான, தே-உன்னுடைய, பத-கமல-யுக்மே -- இரண்டு பாதங்களாகிற தாமரைகளில், மத்க: -என்னுடையதான, மநோ-ப்ருங்க: - மனமென்னும் வண்டு, ப்ரகாமம் - தன் இஷ்டம்போல், ரமதாம் - இருந்துவிளையாடட்டும்.

பூர்ணசந்திரனுக்குப் பிரதிநிதி என்று சொல்லத்தக்க முகத்தையுடைய பர்வதகுமாரியே! முப்புரமெரித்தோன் பத்னியே! தாயே காமாக்ஷி! அழகிய சோலையுள்ளதும், சாந்தியையே தனமாகக் கொண்ட முனிவர்களின் கூட்டத்தாலும் வெகுகாலம் பக்திசெய்து அடையத்தக்கவையான உன் பாதங்களென்கிற தாமரைகளில் என்னுடைய மனமென்னும் வண்டு இஷ்டம்போல் இருந்து களிக்கட்டும்.

மனதை வண்டாகவும், பாதங்களைத் தாமரைகளாகவும் சொல்லி மனமென்னும் வண்டு அத்தாமரையில் எப்போதும் இருந்து விளையாடட்டும் அதாவது பாதங்களையே போக்யமாகப்பற்றி இருந்து அனுபவிக்கட்டும் என்று பிரார்த்திக்கிறார். (97)

*शिवे संवित्पाशैः शशिशकलचूडप्रियतमे
शनैर्गत्यागत्या जितसुरवरेभे गिरिसुते ।
यतन्ते सन्तस्ते चरणनलिनालानयुगले
सदा बद्धुं चित्तप्रमदकरियूथं दृढतरम् ॥ ९८ ॥

***சிவே! ஸம்வித்-பாசை: சசி-சகல-சூட-ப்ரிய-தமே!***
***சனை: கத்யா-"கத்யா ஜித-ஸுர-வரேபே கிரி-ஸுதே!***
***யதந்தே ஸந்த: தே சரண நளிந" லாந-யுகளே***
***ஸதா பத்தும் சித்த-ப்ரமத-கரி-யூதம் த்ருட-தரம்"***

சிவே-மங்கள ஸ்வரூபையே!, சசி-சகல-சூட—சந்திரசேகரனுடைய, ப்ரிய தமே-பத்நியே!, கிரிஸுதே-பர்வத குமாரியே!, சனை:-மெதுவாக, கத்யா (ஆ) கத்யா-போய்வருவதில் (நடை

*महासंवित्पाशैर्विषमशरवैरिप्रियतमे
शनैर्गत्यागत्या जितमदगजेन्द्रे गिरिसुते ।
यतन्ते सन्तस्ते जननि चरणालानयुगले
मनोव्यालं बद्धुं सततमपि कामाक्षि सुदृढम् ॥ என்றும் பாடம்.]

யால்), ஜித-ஜயிக்கப்பட்ட, ஐராவதத்தையுடைய வனே! தே-உன்னுடைய, சரண-நளிந-பாத கமலங்களாகிற, ஆவாந-யுகளே - இரண்டு கட்டுமுளைகளில், சித்த - மன தென்னும், ப்ரமத-மதங்கொண்ட, கரியூதம்-யானை கூட்டங் களை, த்ருட்தரம்-உறுதியாக, ஸம்வித்-பாசை:-ஞானமென்னும் கயிறுகளால், பத்தும் - கட்டுவதற்கு, ஸந்த: - ஸாதுக்கள், ஸதா - எப்போதும், யதந்தே - முயலுகிறார்கள்.

அழகிய மங்கள ஸ்வரூபிணியும் சந்த்ரசேகரின் பத்னியும் மந்தகதியில் ஐராவதத்தையும் ஜயிக்கிறவளுமான பார்வத குமாரியே! உன் பாத பத்மங்களாகிற இரண்டு கட்டு முளைகளில் மனதென்னும் மதயானையை ஸம்வித் என்னும் பாசங்களால் கட்டுவதற்கு ஸாதுக் கள் எப்போதும் முயலுகிறார்கள்.

மதங்கொண்ட பெண் யானையின் நடையை வெல்லும் தேவி யின் பாதங்களை இரண்டு கட்டு முளைகளாக வைத்து மனதென்னும் மதங்கொண்ட யானையை ஞானமென்னும் கயிற்றால் கட்டி அசை யாமல் செய்ய பெரியோர்களும் முயலுகிறார்கள். இந்த யானைக்கு அஹங்கார மமகாரங்களே மதம். (98)

यशः सूते मातर्मधुरकवितां पक्ष्मलयते
श्रियं दत्ते चित्ते कमपि परिपाकं प्रथयते ।
सतां पाशग्रन्थिं *शिथिलयति ते किं न कुरुते
प्रपन्ने कामाक्ष्याः प्रणतिपरिपाटी चरणयोः ॥ ९९ ॥

*யச: ஸூதே மாத: மதுர-கவிதாம் பக்ஷ்மலயதே*
*ச்ரியம் தத்தே சித்தே கம் அபி பரிபாகம் ப்ரதயதே ।*
*ஸதாம் பாச-க்ரந்திம் சிதிலயதி தே கிம் ந குருதே*
*ப்ரபந்நே காமாக்ஷி ப்ரணதி-பரிபாடீ சரணயோ: ॥*

மாத:-தாயே!, காமாக்ஷி-காமாக்ஷி!, தே சரணயோ:-உன் இரு பாதங்களில், ப்ரணதி-பரிபாடி-செவ்வனே செய்யும் நமஸ் காரமானது, ஸதாம் - ஸாதுக்களுக்கு, யச: - கீர்த்தியை, ஸூதே - உண்டுபண்ணுகிறது, மதுரகவிதாம் - இனிமையான கவன சக்தியை, பக்ஷ்மலயதே-விருத்திசெய்கிறது, ச்ரியம்-

* शिथिलयति किं किं என்றும் பாடம்

ஐச்வர்யத்தை. தத்தே-அளிக்கிறது, சித்தே-மனதில், கமபி-சொல்லமுடியாத ஒரு விசேஷமான, பரிபாகம் – பக்குவத்தை, ப்ரதயதே - உண்டுபண்ணுகிறது, பாச - (ஆசைகளென்னும்) பாசங்களுடைய, க்ரந்திம்-முடிச்சை, சிதிலயதி-அவிழ்த்து விடுகிறது, ப்ரபந்நே-பிரபத்தி செய்தவன் விஷயத்தில், கிம்-எதைத்தான், ந குருதே-செய்யாது?

ஜகஜ்ஜநநி காமாக்ஷி! உன் இரு பாதங்களிலும் செவ்வனே செய்யும நமஸ்காரம் ஸாதுக்களுக்குக் கீர்த்தியை அளிக்கிறது.; இனிய கவன சக்தியை விருத்தி செய்கிறது; ஐச்வர்யத்தை கொடுக்கிறது; மனதில் வர்ணிக்கவியலாத ஒரு விசேஷமான பக்குவத்தை உண்டுபண்ணுகிறது; ஆசைகளென்னும் பாசத்தை அவிழ்த்துவிடுகிறது. உன்னை சரணமடைந்தவன் விஷயத்தில் அவை எதைத்தான் செய்கிறதில்லை.

இவ்வாருக தேவியின் பாதங்களைப் பலவாருகத் துதித்து கடைசியில் அவை கீர்த்தி ஐச்வர்யம் சித்த உல்லாசம், ஸம்ஸார பந்த நிவ்ருத்தி முதலான அநிஷ்ட நிவ்ருத்தி இஷ்ட ப்ராப்தி என்னும் ஸகல பலங்களையும் தன்னை வணங்குபவர்களுக்கு அளிக்கின்றன என்கிருர். (99)

मनीषां माहेन्द्रीं ककुभमिव ते कामपि दशां
प्रधत्ते कामाक्ष्याश्चरणतरुणादित्यकिरणः ।
यदीये संपर्के धृतरसमरन्दा कवयतां
परीपाकं धत्ते परिमलवती सूक्तिनलिनी ॥ १०० ॥

***மநீஷாம் மாஹேந்த்ரீம் ககுபம் இவ தே காமபி தசாம்**
**ப்ரதத்தே காமாக்ஷ்யா: §சரண-தருணாதித்ய-கிரண:।**
**யதீயே ஸம்பர்க்கே த்ருத-ரஸமரந்தா கவயதாம்**
**பரீபாகம் தத்தே பரிமளவதீ-ஸூக்தி-நளிநீ ॥***

யதீயே-எந்த கிரணத்தின், ஸம்பர்க்கே-சேர்க்கை உண்டான போது, கவயதாம்-கவனம் செய்கிறவர்களுடைய, ஸூக்தி-நளிநீ – வாக்காகிற தாமரையானது, த்ருத-அடையப்பட்ட,

---

सुजनचरणा दित्यकिरण: என்றும் பாடம்
मनीषा माहेन्द्री ककुबिव सतां कामपि दशां
प्रधत्ते कामाक्ष्या: चरणतरुणादित्यकिरणै: । என்றும் பாடம்

ரஸ-மரந்தா – ரஸமென்னும் மகரந்தத்தையுடையதாய், பரிமளவதீ – மிகுந்த வாஸனேயோடு, பரீபாகம் – மலர்ச்சியை, தத்தே – அடைகிறது, தே – அப்பேர்ப்பட்ட, காமாக்ஷ்யா:- காமாக்ஷியினுடைய, சரண-பாதமாகிற, தருண ஆதித்யகிரண:- பாலஸூர்யனுடைய கிரணமானது, மாஹேந்த்ரீம் – இந்திரனுடையதான கிழக்கு, ககுபம் இவ-திக்கைப்போல, மநீஷாம்-புத்தியில், காமபி தசாம்-மிகவும் சிறந்ததான ஒரு தசையை, ப்ரதத்தே-அடையும்படி செய்கிறது.

கவிகளின் வாக்கு என்னும் தாமரை எந்த கிரணங்களின் ஸம்பந்தத்தால் மகரந்த ரஸம் நிரம்பினதாகவும், நல்ல வாஸனே யுள்ளதாகவும் மலர்ச்சி பெற்றதாகவும் ஆகிறதோ, அப்பேர்ப்பட்ட காமாக்ஷியின் பாதமாகிற பாலஸூர்யனுடைய கிரணம் இந்திரனுடையதான கிழக்கு திசைப்போல புத்தியில் மிகவும் சிறந்ததான ஒரு நிலமையை அடையும்படிச் செய்கிறது.

ஸூர்யோதய காலத்தில் கிழக்கு திக்குக்கு இருள் நீங்கி ஒரு பிரகாசமும் தாமரைகளுக்கு ஒரு மலர்ச்சியும் உண்டாவதுபோல தேவியின் பாதங்களை வணங்குபவர்களுக்கு சிறந்த ஞானமும் பரிமளமான வாக்கோடு கூடின கவன சக்தியும் தானகவே உண்டாகின்றன.
(100)

पुरा मारारातिः पुरमजयदम्ब स्तवशतैः
*प्रसन्नायां यस्य त्वयि तुहिनशैलेन्द्रतनये ।
परंतत् कामाक्षि स्फुरतु तरसा कालसमये
§समायाते मातर्मम मनसि पादाब्जयुगली ॥ १०१ ॥

*புரா மாரா’ராதி: புரம் அஜயத் அம்ப ஸ்தவ-சதை:*
***ப்ரஸந்நாயாம் யஸ்ய த்வயி துஹிந-சைலேந்த்ரதநயே।***
***பரம் தத் காமாக்ஷி ஸ்புரது தரஸா கால-ஸமயே***
***ஸமாயாதே மாத:! மம மநஸி பாதாப்ஜ யுகளீ।***

துஹிநசைலேந்த்ர – பர்வதராஜனின், தநயே – குமாரியே!, மாத:-தாயே!, காமாக்ஷி-காமாக்ஷி, புரா-முன்னொரு காலத்தில், யஸ்ய-எந்த பாதங்களுடைய, ஸ்தவசதை:-நூற்றுக்கணக்கான

---

*प्रसन्नायां सत्यां अतस्ते कामाक्षि

§समायाते स्वान्ते मम तव पादाम्भोजयुगलम् என்றும் பாடம்

ஸ்தோத்ரங்களால், மாராராதி: – பரமசிவன், புரம் – த்ரிபுரா ஸுரனை, அஜய்த்–ஜயித்தாரோ, தத்–சிறந்த அந்த, பாதாப்ஜ யுகளீ–தாமரைபோன்ற இரு பாதங்களும், காலமையே-எமன் வரும்காலம், ஸமாயாதே - வந்தபொழுது, மம மநஸி - என் மனதில், தரஸா–நன்ருக, ஸ்புரது-பிரகாசிக்கட்டும்.

பர்வதராஜகுமாரியான காமாக்ஷிதேவியே! தாயே! முன்ஞெரு காலத்தில் எந்தப் பாதங்களின் நூற்றுக்கணக்கான ஸ்தோத்திரங் களால் நீ ஸந்தோஷமடைந்த பிறகு மன்மதனை எரித்த பரமசிவனும் த்ரிபுராஸுரனை ஜயித்தாரோ அந்த உன்னுடைய சிறந்த சரண கமலங்களிரண்டும் அந்த்ய காலத்திலும் என் மனதில் நன்ருகப் பிரகாசிக்கட்டும்.

முன்ஞெரு காலத்தில் த்ரிபுராஸுரனேடு யுத்தம் நேரிட்ட போது சிவன் தேவியை ஸ்தோத்திரம் செய்து அதனல் சக்தியைப் பெற்று அவனை ஸம்ஹரித்தார். ஆகையால் நானும் உன்னையே துதிக்கிறேன். அந்திம காலத்தில் உன்னை ஸ்மரிக்கும் சக்தியே எனக்கு இருக்காது. ஆகையால் உன் பாதங்கள் இப்போதும் அப் போதும் தாஞகவே என் மனதில் தெளிவாகப் பிரகாசித்துக் கொண் டிருக்கவேண்டும். (101)

पदद्वन्द्वं मन्दं गतिषु निवसन्तं हृदि सतां
गिरामन्ते भ्रान्तं कृतकरहितानां परिवृढे ।
जनानामानन्दं *जननि जनयन्तं प्रणमतां
त्वदीयं कामाक्षि प्रतिदिनमहं नौमि विमलम् ॥ १०२ ॥

***பத-த்வந்த்வம் மந்தம் கதிஷு நிவஸந்தம் ஹ்ருதி ஸதாம்***
***கிராம் அந்தே ப்ராந்தம் க்ருதக-ரஹிதாநாம் பரிப்ருடே।***
***ஜநாநாம் ஆநந்தம் ஜநநி! ஜநயந்தம் ப்ரணமதாம்***
***த்வதீயம் காமாக்ஷி! ப்ரதி-தினம் அஹம் நௌமி விமலம்॥***

பரிப்ருடே - ஸர்வேச்வரியே! ஜநநி – தாயே! காமாக்ஷி– காமாக்ஷி! கதிஷு – நடைகளில், மந்தம் – மெதுவானவை களும், ஸதாம்–ஸாதுக்களுடைய, ஹ்ருதி–மனதில், நிவ ஸந்தம்–வஸிப்பவைகளும், க்ருதக-ரஹிதாநாம் – ஒருவரால்

---

* जगति என்றும் பாடம்

**செய்யப்படாத, கிராம் - சப்தங்களான வேதங்களுடைய, அந்தே-முடிவில் (வேதாந்தத்தில்), ப்ராந்தம்-ஸஞ்சரிப்பவைகளும், ப்ரணமதாம்-வணங்குகிற, ஜநாநாம்-ஜனங்களுக்கு, ஆநந்தம்-ஆநந்தத்தை, ஜநயந்தம்-உண்டுபண்ணுகிறவைகளும், விமலம்-பரிசுத்தமானவைகளுமான, த்வதீயம்-உன்னுடைய, பத-த்வந்த்வம் - இரு பாதங்களையும், அஹம் - நான், ப்ரதிதினம் - ஒவ்வொரு நாளும், நௌமி - துதிக்கிறேன்.**

ஸர்வேச்வரியே! தாயே காமாக்ஷி! நடையில் மெதுவானவைகளும், ஸாதுக்களுடைய ஹிருதயத்தில் வஸிப்பவைகளும், ஒருவரால் செய்யப்படாத வாக்குக்களான வேதங்களின் முடிவில் (அதாவது உபநிஷத்தில்) ஸஞ்சரிப்பவைகளும், வணங்குகிற ஜனங்களுக்கு ஆநந்தத்தை உண்டுபண்ணுகிறவைகளும் பரிசுத்தமானவைகளுமான உன் இரு பாதங்களையும் ஒவ்வொரு நாளும் நான் துதிக்கிறேன். (102)

इदं यः कामाक्ष्याश्चरणनलिनस्तोत्रशतकं
जपेन्नित्यं भक्त्या निखिलजगदाह्लादजनकम् ।
स विश्वेषां वन्द्यः सकलकविलोकैकतिलकः
श्चिरं भुक्त्वा भोगान्परिणमति चिद्रूपकलया ॥ १०३ ॥

***இதம் ய: காமாக்ஷ்யா: சரண-நளிந ஸ்தோத்ர-சதகம்***
***ஜபேந் நித்யம் பக்த்யா நிகில-ஜகத்-ஆஹ்லாத-ஜநகம் ।***
***ஸ விச்வேஷாம் வந்த்ய: ஸகல-கவி-லோகைக-திலக:***
***சிரம் புக்த்வா போகாந் பரிணமதி-சித்-ரூப-கலயா ॥***

நிகில-எல்லா, ஜகத்-உலகத்திற்கும், ஆஹ்லாத-ஸந்தோஷத்தை, ஜநகம் - உண்டுபண்ணுகிற, இதம் - இந்த, காமாக்ஷ்யா:-காமாக்ஷியினுடைய, சரண-நளிந - பாதகமலங்களைப்பற்றிய, ஸ்தோத்ர-ஸ்தோத்ரமான, சதகம்-சதகத்தை (நூறு சுலோகங்களை), ய:-எவனொருவன், பக்த்யா-பக்தியோடு, நித்யம்-எப்போதும், ஜபேத் - படிக்கிருனோ, ஸ: - அவன், விச்வேஷாம்-எல்லோராலும், வந்த்ய: - நமஸ்கரிக்கப்படுகிறவனாயும், ஸகல-எல்லா, கவிலோக-கவிகளுக்குள்ளும், ஏக திலக:-சிறந்த திலகமாகவும் ஆகி, போகாந்-போகங்களை, சிரம்-வெகுகாலம், புக்த்வா-அனுபவித்து (கடைசியில்), சித்ரூபகலயா-சித்ஸ்வரூபியாகவே, பரிணமதி-ஆகிருன்.

ஸமஸ்த லோகங்களுக்கும் ஆநந்தத்தை உண்டுபண்ணுகிற காமாக்ஷியின் சரணகமலங்களினுடைய ஸ்தோத்ரரூபமான இந்த சதகத்தை எவன் பக்தியோடு எப்போதும் படிக்கிருனே அவன் எல்லோராலும் வணங்கப்படுகிறவனையும், ஸகல கவிகளுக்கும் முக்கியமான திலகமாகவும் ஆகி, ஸர்வபோகங்களையும் வெகுகாலம் அனுபவித்து (முடிவில்) சித்ஸ்வரூபியாகவே ஆகிருன்.

முடிவில் பலசருதி கூறுகிருர். நூறு சுலோகங்கள் கொண்ட இந்த சதகத்தை பக்தியோடு படிப்பவன் எல்லோராலும் கொண்டாடப்படுகிறவனுகவும், கவிசிரேஷ்டனுகவும் ஆகி ஸகலவித போகங்களையும் அனுபவித்து முடிவில் ஸச்சிதாநந்த ஸ்வரூபியாக ஆய் விடுகிருன். (103)

॥ इति पादारविन्दशतकं संपूर्णम् ॥

---